


## எவ்வளவு நிர்மல மானது பாருங்கள்

வெளிச்சத்துக்கு எதிரே பிடித்தால் பியர்ஸ் சோப்புக் கட்டியின் மூலமாக நீங்கள் ஊடுருவிப் பார்க்க முடியும்! பியர்ஸ் நிர்மலம் என்றால் அது தான்! க்ளிஸரின் கலந்த பியர்ஸ் சோப் பச்சிளங் குழந்தையின் மென்மையான சருமத்துக்கும் **பூரணமான பாதுகாப்புத்** தருகிறது.



## எவ்வளவு நல்லதென்று உணருங்கள்

பியர்ஸ், சருமத்துக்குப் புது மெருகும் போஷாக்கும் அளித்துப் பல்லாண்டுகள் மிருதுவாகவும் எழிலோடும் வைத்திருக்கிறது. அந்தக் காரணத்துக்காகவே, உலகெங்கும் உள்ள அழகிகள் பியர்ஸ் சோப்பைப் பிரதிதினமும் உபயோகித்து தமது மேனியின் நவ யௌவனக் களையைப் பாதுகாத்து வருகிறார்கள்.

பியர்ஸ் சோப்பை வழக்கமாக உபயோகப் படுத்தத் தொடங்குங்கள். அது எவ்வளவு நல்லதென நீங்களும் உணர்ந்து கொள்வீர்கள்




# பியர்ஸ் சோப்

**அசல் க்ளிஸரின் கலந்த அழகு தரும் சோப்**

லண்டனிலுள்ள ஏ & எப். பியர்ஸ் லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது  TG. 84-50 TM

மலர் 15
இதழ் 48

# கல்கி
## பொருளடக்கம்

துன்முகி
ஆனி 18

ஜூலை 1, 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




அணுக்கதிர் மழையினால் ஏற்படக்கூடிய அபாயத்திலிருந்து உலகத்துக்கு எவ்விதப் பாதுகாப்பும் இல்லை என்று விஞ்ஞான மேதைகள் கருதுகின்றனர்.



மலர் 15 | இதழ் 48

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி௵ ஆனி 18

# நஞ்சுண்டவன் ஆவாரோ நம் நேரு?

பிரதமர் நேரு வெளிநாடுகளில் தலைவர்களைக் கண்டு பேசப் போகிறார். உலக நாடுகள் யார் யாருடன் அவர் கலந்து பேசப் போகிறார் என்பதைக் கூர்ந்து கவனித்து வருகின்றன.

அவர் சென்ற வாரம் பிரிட்டனுக்குப் புறப்பட்டுச் சென்ற போது, வழியிலுள்ள ஸிரியா, கிரீஸ், எகிப்து, இத்தாலி முதலிய நாடுகள் அவரை அன்புடன் வரவேற்று உபசரித்தன.

அல்ஜீரிய நாட்டு மக்கள் தங்களுக்கும் பிரான்சுக்கும் நல்லபடியான உடன்படிக்கை ஏற்படுத்திச் சுதந்திரமே பெற்றுத் தந்து விடுவார் நேரு என்று எதிர்பார்க்கின்றனர். அதைப்போலவே பிரஞ்சு மக்களும் நேருஜி அல்ஜீரியப் பிரச்னையைத் திருப்திகரமாகத் தீர்த்து வைப்பார் என்று எதிர்பார்க்கின்றனர்.

மத்திய சமுத்திரத்தில் ஸைப்ரஸ் என்ற தீவு இருக்கிறது. இந்தத் தீவில் எண்பது சதவிகிதம் பேர் கிரேக்க ஜாதி மக்கள்; இருபது சதவிகிதம் பேர் துருக்கி ஜாதியினர். இந்தத் தீவு தற்போது பிரிட்டிஷார் வசத்தில் இருக்கிறது. மத்திய சமுத்திரத்தில் ஆங்கிலேயருடைய முக்கியமான ராணுவ முகாமாக இருந்து வருகிறது.

ஸைப்ரஸ் மக்கள் சுதந்திரம் கோருகின்றனர். கிரேக்க தேசத்துடன் இணைய விரும்புகின்றனர். சுதந்திரம் பெற்று விட்டால் ஸைப்ரஸ் பின்னர் தங்கள் ராணுவத்தை வைத்துக் கொள்ள அனுமதிக்காவிட்டால் என்ன செய்வது என்று ஆங்கிலேயர் பயந்து சுதந்திரம் தர மறுக்கிறார்கள். இதைப் பகிரங்கமாகச் சொல்லாமல் "சிறுபான்மையோரான துருக்கியர், கிரீஸுடன் இணைய விரும்ப வில்லை. அவர்கள் நலனைப் பாதுகாக்க நாங்கள் ஸைப்ரஸில் இருந்தே ஆக வேண்டும்" என்று கூறிச் சுதந்திரக் கிளர்ச்சிகளைக் கொடுமையான அடக்குமுறைகளால் ஒடுக்கி வருகிறார்கள்.

இந்த ஸைப்ரஸ் மக்கள் பாரதத்தின் பிரதமராகிய நேருவை, "ஈடனிடம் சொல்லி எங்களுக்குச் சுதந்திரம் வாங்கித் தாருங்கள்!" என்று கேட்டிருக்கிறார்கள். ஈடனும் நேருவின் உதவியை இந்த விஷயத்தில் நாடுகிறார். இருபாலாரும் ஒப்புக் கொள்ளக்கூடிய வகையிலான ஒரு திட்டம் நேருஜியும் ஏற்பாடு செய்து தருவார் என்று செய்தி வந்திருக்கிறது. இவ்வாறு முடிந்தால் இது பாரத மக்களுக்குப் பெரும் புகழ் தரக்கூடிய மகத்தான காரியமாகும்.

பல நாடுகளில் பாரதப் பிரதமரின் செல்வாக்கினால் பாரதத்தின் கீர்த்தி உயர்கிறது. என்றாலும் இந்தக் கீர்த்திக்கும் மகிழ்ச்சிக்கும் அடி நாதமாக ஒரு சோகமும் இருந்து வருகிறது.

இப்பொழுது உலகில் விபரீத சோதனைகள் நடந்து வருகின்றன. அமெரிக்காவும், பிரிட்டனும், ருஷ்யாவும் மாறி மாறி அணுகுண்டுகளையும், ஜலஜ குண்டுகளையும் பரீட்சை செய்து பார்ப்பதாக ஓயாமல் வெடித்து வருகின்றன. இந்தச் சோதனை குண்டுகள் உலக மண்டலத்திலுள்ள காற்றையும் நீரையும் ஆலகால விஷமயமாகச் செய்து வருகின்றன. விஷமேறிய மேகங்கள் பொழியும் மழை நீர் இதுவரை மனிதர் கேள்விப்பட்டிராத நோய்களையும் உடற் குறைகளையும் ஏற்படுத்தக் கூடியன என்றும், அணுகுண்டு சோதனைகளினால் வெளியேறும் விஷத் தூசியின் வேகம் எலும்புகளுக் குள்ளேயே புகுந்து புற்று நோயை உண்டாக்கக் கூடியதாகும் என்றும் விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். மற்ற விஷங்கள்போல் இந்த விஷம் காற்றினாலும் சூரிய வெப்பத்தினாலும் சுத்தப்பட்டுப் போகும் தன்மையதல்ல. நிரந்தர சாசுவத விஷம்.

பஸிபிக் மகா சமுத்திரத்தில் அடிக்கடி அமெரிக்கா இந்த உற்பாத குண்டுகளைப் போட்டுச் சோதித்து வருகிறது. சமீபத்தில் மே 21-ம் தேதி ஒரு சோதனை குண்டு வெடித்தது. இதனால் ஜப்பானில் பெய்த மழை நீர் விஷ மயமாக இருந்ததை அந்நாட்டு விஞ்ஞானிகள் கண்டார்கள்.

டாக்டர் ரால்ப் லாப் என்ற அணுசக்தியை ஆராயும் அமெரிக்க விஞ்ஞானி பின்வருமாறு எச்சரிக்கை செய்கிறார்.

இப்பொழுது அணுகுண்டு சோதனைகள் நடக்கும் கதியில் 1962-ம் வருஷம் வரை நடந்தால் உலகத்தின் காற்றும் நீரும் தாங்கக் கூடிய அளவுக்கு மேலேயே அணுவிஷம் கலந்து விடும். பிறகு அந்த விஷம் விளைவிக்கக்கூடிய பயங்கர உற்பாதங்கள் என்னென்ன என்பது 1970 லிருந்து தெரிய வரும் என்கிறார்.

உலகப் பெரும் விஞ்ஞானிகள் எச்சரிக்கை செய்து வருகிறார்கள்; யாரும் கேட்பாரில்லை.

மழையைக் கண்டு அது ஆண்டவனுடைய அருள் வெள்ளம் என்று உலகம் கொண்டாடி மகிழ்ந்து வந்திருக்கிறது. இப்போது அதே மழையைக் கண்டு உலகம், — மக்கள் மட்டுமல்ல, மிருகங்கள், பறவைகள், மரங்கள் யாவுமே — அஞ்சி நடுங்கும்படி செய்து வருகிறார்கள். யார்! உலகத்து மூன்று பெரும் நாகரிக அரசாங்கத்தார்.

உலகில் மற்றொரு உலகப் பிரளய யுத்தம் உண்டாவதற்கு முன்னமேயே அதைத் 'தடுக்கும்' முயற்சிகளினாலேயே ஒரு பாவமும் அறியாதவர்களும் எந்தக் கலகத்திலும் சேராமலிருப்பவர்களும் பெரும் அழிவுக்கு உள்ளாகி வருகின்றனர்.

இத்தகைய சூழ்நிலையில் சுதந்திரம் கிடைப்பதனால் என்ன பயன்!

இந்த விஷ உற்பத்தியில் ஈடுபடாத எல்லா நாடுகளுக்கும், ருஷ்யா, பிரிட்டன், அமெரிக்கா மூன்றுமே பகை நாடுகள்தான்! அணுகுண்டு பரிசோதனைகள் நடத்தி வான வெளியையும், உலக நீரையும் விஷ மயமாக்கிக் கொண்டிருக்கும் வரை, எக்கட்சியும் சேராத சமாதானத்தை விரும்பும் உலக நாடுகளுக்கு இம் மூன்றுமே பகை நாடுகள்தான்.

நடுநிலையில் இருக்கும் நாடுகளுக்குள்ளே, பாரதப் பிரதமர் நேருவுக்கு அமெரிக்காவிடமும், பிரிட்டனிடமும், ருஷ்யாவிடமும் அபரிமிதமான செல்வாக்குள்ளது.

"அணு ஆயுதங்களைப் பரிபூரணமாக ஒதுக்கி விடத் தயார்; இனி சோதனை செய்வதில்லை; உற்பத்தியும் செய்வதில்லை" என்று உடன்படிக்கை செய்து கொள்ள ருஷ்யா தயாராய் இருக்கிறது. அமெரிக்கா ருஷ்யாவின் சொல்லை நம்ப மறுக்கிறது. எவ்வளவு காலம் "உங்களை எப்படி நம்புவது!" என்று சாக்குச் சொல்லிக் கொண்டிருக்க முடியும்!

பிரிட்டன்கூட அணு சோதனை பகிஷ்கரிப்புக்குச் சம்மதித்தாலும் சம்மதித்து விடும் போல் தோன்றுகிறது. அமெரிக்காதான், முப்பத்திரண்டு கல்யாண குணங்களில் முப்பது குணங்கள் பெற்று இரண்டு குணங்கள் இன்றித் தவிக்கிறது. அதாவது தனக்காகவும் தெரியவில்லை; சொன்னாலும் தெரியவில்லை என்ற அவல நிலையிலிருக்கிறது.

இந் நிலையில் பிரிட்டனில் காமன்வெல்த் நாடுகளின் பிரதமர்கள் கூடுகிறார்கள்.

இந்நாடுகள் அனைத்தும் சேர்ந்து அணுகுண்டு சோதனைகளை உடனே நிறுத்தி விடும்படி இம்மூன்று அரசுகளையும் வற்புறுத்த வேண்டும்.

இம்மகாநாட்டுக்குப் புறப்படும்போது நம் மூலவர் பிரதம மந்திரி நிலையில் அணு ஆயுதப் பரிசோதனைகளினால் ஏற்படும் தீமைகளைப் பற்றிப் பேசியிருக்கிறார். அவர் தமது மற்ற சகாக்களையும் வற்புறுத்தி அமெரிக்காவும், பிரிட்டனும், ருஷ்யாவும் இனி அணு ஆயுத சோதனைகளை நிறுத்திவிடச் செய்ய வேண்டும். உலகில் கட்சிச் சார்பற்ற நாடுகள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து ஒரு குரலில் இந்தச் சோதனை வெடிகளை நிறுத்தும்படி வற்புறுத்த வேண்டும்.

இவ் வகையில் பாரதப் பிரதமர் வெற்றி கொண்டால் உலகம் அவரை என்றென்றும் போற்றும். பாரதத்தின் புகழ் சிகரத்தை எட்டிவிடும்!

கடல் கடைந்த அன்று "நீதான் காப்பாற்ற வேண்டும்" என்று தேவாசுரர்கள் பரமசிவனை வேண்டிக் கொண்டார்கள். அவனும் புன்சிரிப்புச் சிரித்து ஆலகாலத்தைத் தன் நெஞ்சில் அடக்கிக் கொண்டான். "நஞ்சுகண்டன்" என்ற பெயரைப் பெற்றான். நம் நேருவும் அந்தப் பெயரை அடைவாரோ!

# இடம் இல்லை! இடம் இல்லை!

இந்த மாதத்தில் எங்கே பார்த்தாலும் "இடம் இல்லை!" "இடம் இல்லை!" என்ற கூக்குரலைக் கேட்கிறோம். காலேஜுகளில் இடம் இல்லை; ஹைஸ்கூல்களில் இடம் இல்லை; ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலும்கூட இடம் இல்லைதான்!

ஒரு பக்கத்தில் இந் நாட்டில் உள்ள எல்லாப் பிள்ளைகளுக்கும் எழுத்தறிவித்து விடவேண்டும் என்று சர்க்கார் பிரசாரம் செய்கிறது. இன்னொரு பக்கத்தில் 'கல்விக்குச் செலவழிக்கப் பணம் போதவில்லை; பள்ளிக்கூடங்கள் கட்டுவதற்கு வேண்டிய பணம் இல்லை' என்று பரிதாபமாக ஓலமிடுகிறது.

இது ஏதோ திடீர் என்று ஏற்பட்ட நெருக்கடி இல்லை. நீண்ட நாட்களாகவே இருந்து வரும் தொல்லைதான். இதையெல்லாம் எதிர்பார்த்தே, இந்த நாட்டில் உள்ள அத்தனை குழந்தைகளுக்கும் எழுத்தறிவு ஏற்பட வேண்டும் என்ற உயர்ந்தநோக்கத்தோடு ராஜாஜி அருமையான கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்தார்.

அந்தத் திட்டத்தின் பலனை அறியாமல், அதில் உள்ள நன்மையை உணர்ந்து கொள்ள விரும்பாமல் அதை நிராகரித்து விட்டார்கள். அந்தத் திட்டத்தை நிராகரிப்பதில் காட்டிய உற்சாகத்தையும் உணர்ச்சியையும் அவசரத்தையும் புதிய கல்வித் திட்டத்தை உரு

## பிரதான புருஷர்




**லண்டனில் நடைபெறும் காமன்வெல்த் பிரதமர்கள் மகாநாட்டில் நேருஜியே பிரதான புருஷராக விளங்குவார் என்று பிரபல பிரிட்டிஷ் பத்திரிகையான "எகானமிஸ்ட்" கூறுகிறது.**

---

வாக்குவதில் காண்பிக்க வில்லை. ஏதோ ஒப்புக்கு ஒரு கமிட்டியை நியமித்தார்கள். அந்தக் கமிட்டி இந்த நாட்டில் உள்ள அத்தனை பிள்ளைகளும் படிப்பதற்கு வேண்டிய அடிப்படைப் பிரச்னையில் கவனம் செலுத்தவில்லை. அந்தக் கமிட்டியின் யோசனையின் மீது ஒரு வெள்ளை அறிக்கையை மட்டும் வெளியிட்டு விட்டுச் சர்க்கார் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த வருஷம் பள்ளிக்கூடம் திறப்பார்களே, பிள்ளைகள் படிப்பதற்குப் போவார்களே, அவர்களுக்குப் பள்ளிக்கூடத்தில் இடம் வேண்டுமே என்று சிறிதும் கவலைப்பட வில்லை.

மறுபடியும் சொல்கிறோம். நம்முடைய நாட்டில் கல்விப் பிரச்னையைத் தீர்த்து வைப்பதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. எப்படிச் சுற்றி வளைத்துப் பார்த்தாலும் ராஜாஜியின் கல்வித் திட்டத்தை ஏற்றுக் கொள்வதைத் தவிர வேறு வழி கிடையாது.

இந்த முறையைக் கொண்டுதான் சென்னை ராஜ்யத்துக் குழந்தைகளுக் கெல்லாம் கல்வி அளிக்க முடியும்.

இந்த ஒரு வழியினால்தான் நம்முடைய குழந்தைக் குலத்தின் அறிவையும், தேகாரோக்கியத்தையும் காப்பாற்ற முடியும்.

இந்த ஒரு முறையினால்தான் கல்விக்காகச் சர்க்கார் செலவு செய்யும் பணமெல்லாம் வீண் விரயமாகாமல் பயன்படச் செய்ய முடியும்.

இந்த விஷயத்தில் வீண் கௌரவம் பாராட்டாமல், இது ராஜாஜியின் திட்டம் என்பதை மறந்து விட்டு, நமது வருங்காலச் சந்ததிகளின் வளர்ச்சியை மனத்தில் கொண்டு செய்ய வேண்டிய காரியத்தைக் காலா காலத்தில் செய்ய வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

பள்ளிக்கூடங்களில் இப்போதுள்ள இட நெருக்கடிப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு 'ஷிப்டு' முறையை ஏற்படுத்துவது ஒன்றுதான் சிறந்த வழி. கல்வித் துறையில் வேறு சீர்திருத்தம் ஒன்றும் செய்யாவிட்டாலும், இதையாவது உடனடியாகச் செய்யலாம்.

முதல் மூன்று படிவங்களில் 'ஷிப்டு'களை வைத்துக் கொள்ளலாம் என்று கல்வி மந்திரி திரு சுப்பிரமணியம் கோவையில் கூறியிருக்கிறார். முதல் மூன்று படிவங்களுக்கு மட்டும் ஷிப்டுகளை வைத்துக் கொள்ளும் போது ஏன் எல்லாப் படிவங்களுக்குமே இந்த முறையைக் கையாளக் கூடாது என்பது தான் நம்முடைய கேள்வி.

முதல் வகுப்பு முதல் எல்லாப் படிவங்களுக்கும் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் 'ஷிப்டு' முறையை அமுலுக்குக் கொண்டு வருவதற்குச் சர்க்கார் உடனே உத்தரவு இட வேண்டும். அப்போதுதான் "இடம் இல்லை! இடம் இல்லை!" என்ற கூக்குரலுக்கு 'இடம் இல்லை' என்று சொல்ல முடியும்.

# கட்டும் துணிக்குத் திட்டம் தயார்!

ரூஷ்யா போன்ற மாபெரும் தேசங்கள் மகத்தான பல திட்டங்கள் வகுத்து அவற்றில் மகோன்னத வெற்றியும் அடைந்து வருகின்றன. நமது பாரத நாடும் திட்டங்கள் போட்டே எல்லாக் காரியங்களையும் செய்து வருகிறது.

இரண்டாவது ஐந்தாண்டில் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு வழி செய்திருப்பதைப் போலவே கட்டும் துணிக்கும் திட்டம் வகுத்திருக்கிறார்கள்.

வரும் ஆண்டுகளில் நமது நாட்டின் சொந்தத் தேவைக்கும் அயல்நாட்டு ஏற்றுமதிக்கும் எத்தனை கெஜம் துணி அதிகமாகத் தேவைப்படும் என்பதைக் கணக்கெடுத்திருப்பதுடன் அத்தனை துணியை உற்பத்தி செய்வதற்கும் திட்டம் தயாரித்திருக்கிறார்கள். அதாவது உள்நாட்டுத் தேவைக்கு எழுபது கோடி கெஜம் துணியும் வெளி நாட்டு ஏற்றுமதிக்கு நூறு கோடி கெஜம் துணியும் இப்போதைக் காட்டிலும் இன்னும் அதிகப்படியாகத் தேவைப்படும் என்றும் இந்தியாவில் நாம் ஒவ்வொருவரும் சராசரியாக 18½ கெஜம் துணி கட்டுவதாகவும் கணக்கெடுத்திருக்கிறார்கள்.



ஸ்ரீ டி. டி. கே.

ரொம்ப சரி! ஏற்கனவே துணி விலை !ஏக கிராக்கியாயிருக்கிறது. போகப் போக ஐந்தாண்டு திட்டங்கள் காரணமாகத் துணி விலை இன்னும் உயரக்கூடும். பணப் பெருக்கமும் ஏற்படும் போது கிராக்கியாகும் பொருள்களின் விலை உயர்வதும் இயற்கையே அல்லவா!

நம் தேவையையே நாம் சரியானபடி பூர்த்தி செய்ய முடியாமல் இருக்கும்போது அயல் நாட்டுக்கு ஏற்றுமதி செய்ய வேண்டியது அவசியம்தானா என்ற கேள்வி எழுகிறது.

நியாயமான கேள்விதான்; ஆனாலும் நம் சொந்த நாட்டின் தேவையைக் கவனித்தால் மட்டும் போதாது. நம்முடைய பொருளாதார வளர்ச்சிக்கும் அந்நிய நாட்டுச் செலாவணிக்கும் நம் நாட்டு உற்பத்திகளை ஏற்றுமதி செய்தே ஆகவேண்டும். நமது தேசத்தில் மற்றெந்தத் தொழில்களையும் விட ஜவுளித் தொழிலே மிகப் பெரிய அளவில் நடைபெற்று வருகிறது. ஆகவே நாம் ஜப்பான், ஜெர்மனி, இத்தாலி போன்ற நாடுகளுடன் ஆடை விஷயத்தில்தான் போட்டிபோட முடியும்.

சரி; திட்டமிட்டுள்ள இந்த நூற்றெழுபது கோடி கெஜம் துணியை எவ்வாறு உற்பத்தி செய்யப் போகிறோம்! கைத்தறி நெசவின் மூலமா! அல்லது பெரிய அளவில் இயங்கும் பஞ்சாலைகளின் மூலமா! இத்தனை கோடி கெஜம் துணிக்கு வேண்டிய நூலுக்கு எங்கே போவது!

இதற்கெல்லாம் நமது சர்க்கார் வழி செய்யாமல் இல்லை.

உற்பத்தி செய்ய வேண்டிய 170 கோடி கெஜத்தை மூன்று வழியாகப் பிரித்திருக்கிறார்கள்.

(1.) ஆலைகள் 35 கோடி. (2.) கைத்தறிகள் 100 கோடி. (3.) விசைத் தறிகள் 20 கோடி. மீதம் பற்றி முடிவாகவில்லை. கைத்தறிகளின் மூலம் உற்பத்தியாக வேண்டிய துணிகளுக்கு ஆலைகள் எழுபது பங்கு நூலும் அம்பர் சர்க்கா முப்பது பங்கு நூலும் விநியோகம் செய்யும்.

இது மிகச் சிறந்த ஏற்பாடு என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஆலைகளின் உற்பத்தியைக் கூடுமான அளவு குறைத்துக் கைத்தறி உற்பத்திக்கு ஆக்கம் அளிக்கும் வகையில் திட்டம் போட்டிருக்கும் தொழில் மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியாரைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

போட்ட திட்டம் சிறிதளவும் பிசகாமல் நடந்தேறுவதற்குச் சிறிது காலதாமதம் ஏற்படலாம். அத்துடன் அவற்றில் நூற்கப்படும் நூல்களின் தரம் உயர்வாக இருக்குமா என்பதும் அனுபவத்தில் அறிய வேண்டியதாகும்.

எந்த விதத்திலும் கைத்தறித் துணிகளின் செல்வாக்கும் பெருமையும் மகிமையும் அடுத்த ஐந்தாண்டு காலத்தில் பன்மடங்கு உயரும் என்று எதிர்பார்க்கிறோம்.

## பிரார்த்தனைக் கூட்டம்

— கிண்டி ராஜ்பவன் —

## காந்தி மண்டபத்தில்

ஜூன் 29-ந் தேதி வெள்ளிக்கிழமை மாலை 5-30 மணி முதல் 7 மணி வரையில்

- தக்கர்பாபா வித்தியாலய மாணவர்கள் நூற்பு யக்ஞம் நடத்துவார்கள்.
- மயிலாப்பூர் ஸ்ரீ மாசிலாமணி குழுவினர் நாகஸ்வர இசை வழங்குவார்கள்.
- அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ ஐயங்காரின் சிஷ்யர்களான ஸ்ரீ ராஜம் சகோதரர்கள் திருப்பாவை திருவெம்பாவைப் பாடல்களைப் பாடுவார்கள்.
- கீதை பாராயணமும் ராமநாம பஜனையும் நடைபெறும்.

இந்தப் பிரார்த்தனைக் கூட்டத்தில் ராஜாஜி அவர்கள் கலந்து கொள்கிறார்கள்.

பொதுமக்கள் அனைவரும் வருக!

# என்ன செய்தி?

## வழிகாட்டும் ஒப்பந்தம்

ருஷ்யாவில் யூகோஸ்லேவியா ஜனாதிபதி மார்ஷல் டிட்டோவின் திக்விஜயம் முடிந்து அவர் தமது நாட்டுக்குத் திரும்பி விட்டார். ருஷ்ய சர்வாதிகாரி ஸ்டாலினின் அந்திய காலத்தில் ருஷ்யாவுக்கு விரோதியாகவும், அமெரிக்கா, பிரிட்டன் முதலிய வல்லரசுகளின் வீர நண்பராகவும் இருந்த மார்ஷல் டிட்டோ, இன்று ருஷ்யாவின் அத்தியந்த நண்பராகி விட்டார்! ஸ்டாலின் ருஷ்யாவுக்கும் இன்றைய ருஷ்யாவுக்கும் உள்ள வேற்றுமைக்கு இதைக் காட்டிலும் சான்று வேறு என்ன வேண்டும்? டிட்டோ விஜயத்தின் மூலம் யூகோஸ்லேவியா – ருஷ்யா மனஸ்தாபம் தீர்ந்து, நட்பும் நெருங்கிய உறவும் ஏற்பட்டுள்ளது என்பதை யூகோ-ருஷ்யக் கூட்டறிக்கை உலகத்துக்கு நிரூபணம் செய்திருக்கிறது.

ஜெர்மனியில் ஐக்கியம் உண்டாவதற்குக் கிழக்கு, மேற்கு ஜெர்மன் சர்க்கார்கள் கூடிச் சமரசப் பேச்சு நடத்த வேண்டும். ஆயுதக் குறைப்புப் பிரச்னை தீர அவசரமாக வழி வகை செய்ய வேண்டும். அதற்குப் பூர்வாங்கமாகப் படைகளின் தொகையை உடனடியாகக் குறைக்க வேண்டும். சர்வ தேச வர்த்தகத்துக்கு இடையூறாக உள்ள தடைகளை யெல்லாம் அகற்றி விட வேண்டும். சீனாவை ஐக்கிய நாடுகள் சபையில் சேர்த்துக் கொள்ளாதது வருந்தத் தக்கது. பார்மோசா விஷயமாகச் சீனாவின் உரிமைகளை அங்கீகரிக்க வேண்டும். அணுசக்தி ஆயுதங்களைத் தடுத்து, அணுசக்தியை மானிட வர்க்கம் அமைதியாக வாழ்வதற்கு உகந்த முறையில் உபயோகிக்க வேண்டும். ஐரோப்பாவை இராணுவ கோஷ்டிகளாகப் பிரிக்காமல் ஐரோப்பாவின் ஒற்றுமைக்கும் பாதுகாப்புக்கும் வழி செய்ய வேண்டும் — இவைதான் ஒப்பந்தத்தின் சாரம்.

இவ்வாறாக, உலகத்தின் அமைதியையே சீர்குலைக்கும் பல்வேறு பிரச்னைகளை யொட்டியும் அவ்விரு நாடுகளுக்கும் ஏற்பட்டுள்ள நல்ல ஒப்பந்தத்திலுள்ள ஷரத்துக்களின்படி யூகோ நாடும் ருஷ்யாவும் மாத்திரமல்ல, அமெரிக்கா பிரிட்டன் போன்ற வல்லரசுகளும் நடக்க முற்படுமாயின், உலக நாடுகளிடையே போட்டி, பொறாமை, துவேஷம், யுத்தபீதி யாகிற அந்தகார நிலை ஒழிந்து, நல்லுறவு, நல்லெண்ணமாகிற ஒளி உதயமாகும்.



ஸ்ரீ டி. பாலசுந்தரம் ஐ. ஏ. எஸ். அவர்கள் சென்னை நகரசபைக் கமிஷனராக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

## தட்சிணப் பிரதேசம்

ராமநாதபுரம் ராஜாவை அவசரப்பட்டு யார் பேசச் சொன்னார்கள்? பிறகு யார் பயப்படச் சொன்னார்கள்?

சிக்கலில் சிக்கிக் கொண்டிருப்பவர்கள் பேசாமலிருப்பதே சாமர்த்தியம். சுதந்திர நிலையை விரும்பவர்களின் அறிவினாலும், முயற்சியினாலும், தட்சிணப் பிரதேச இயக்கம் வெற்றி பெற வேண்டும். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் உபதலைவர் திரு வெங்கடகிருஷ்ண ரெட்டியார் அவர்கள் தட்சிணப் பிரதேசத்தை ஆதரித்து ஒரு அறிக்கையை வெளியிட்டார். அவரது தைரியத்தைப் போற்றுகிறோம்.

## பிரிட்டிஷ்-ருஷ்யக் கூட்டுறவு

புகழ் பெற்ற ஆங்கிலப் பத்திரிகை 'மான்செஸ்டர் கார்டியன்' ஒரு ருசிகரமான யோசனையை ஜூன் 23-ம் தேதி இதழில் கூறியிருக்கிறது. "ருஷ்யாவைச் சேர்ந்த ஆசிய நாடுகளில் புதிதாகச் சாகுபடிக்குக் கொண்டு வரப்பட்ட பெரும் பிரதேசங்களில் அறுவடை வேலைக்காக இரண்டு லட்சம் யுவர்களும் யுவதிகளும் வேண்டுமென்று அழைத்திருக்கிறார்கள். பிரிட்டனிலிருந்து, இந்த வேளாளப் படையில் சிலர் ஏன் போய்ச் சேரக் கூடாது? பிரிட்டிஷ் வாலிபர்களையும் இந்தச் சாத்துவிகப் படையில் சோவியத் அரசாங்கத்தார் சேர்த்துக் கொள்ளலாமே. இதனால் உலக நாடுகளிடைச் சமாதானத்துக்கு இது ஒரு சிறந்த வழியாகும். பிரிட்டிஷ் இளைஞர்களுக்கு இது ஒரு நல்ல புது முறையான விடுமுறையாகும்."

இதை ஒரு பிரிட்டிஷ் பார்லிமெண்ட் அங்கத்தினரும் மிக நல்ல யோசனை என்று சொல்லியிருக்கிறார்.

# வெறியர்களுக்கு எச்சரிக்கை

கொழும்பு, ஜூன், 24—

இலங்கை பார்லிமெண்டிலிருக்கும் தமிழ் அங்கத்தினர்கள் தங்களுடைய பதவிகளை ராஜினாமா செய்வதினால் யாருக்கும் லாபமில்லை யென்றும், பார்லிமெண்டுக்குள் இருந்து கொண்டே தொடர்ந்து உரிமைப் போராட்டம் நடத்த வேண்டு மென்றும் தமிழரசுக் கட்சி தீர்மானித்திருக்கிறது. பாஷைப் பிரச்னையில் அரசாங்கக் கொள்கையை ஆட்சேபிப்பதற்காக எல்லாத் தமிழ் அங்கத்தினர்களும் பார்லிமெண்ட் ஸ்தானங்களை ராஜினாமா செய்ய வேண்டு மென்று ஸ்ரீ ஜி. ஜி. பொன்னம்பலமும் ஸ்ரீ வி. சுந்திரலிங்கமும் ஒரு வேண்டுகோள் விடுத்திருந்தார்கள். இந்த வேண்டுகோளுக்குப் பதிலளிக்கும் முறையிலேயே தமிழ்ப் பிரதிநிதிகள் ராஜினாமா செய்யக்கூடாது என்று தமிழரசுக் கட்சி ஒரு அறிக்கையை வெளியிட்டிருக்கிறது. இந்தக் கொள்கையை ஆதரித்துப் பல தமிழ்த் தொகுதிகளில் தீர்மானங்களும் நிறைவேற்றப் பட்டிருக்கின்றன.

இதற்கிடையில் பிரதம மந்திரி ஸ்ரீ பண்டாரநாயகா தமது கட்சிக் கூட்டத்தில் இவ்வாரம் பேசிய பொழுது பாஷை வெறியர்கள் அரசாங்கத்தின் முதல் நம்பர் விரோதிகளென்று கூறினார். பாஷைப் பிரச்னையில் அளவுக்கு மீறிய அக்கறை காட்டித் தீவிர நடவடிக்கைகளில் இறங்குபவர்கள் புதிய புதிய பிரச்னைகளைத் தோற்றுவித்து அரசாங்கத்தைத் திணற அடிப்பதாயும் அவர் புகார் செய்தார். அவர் தம்முடைய கட்சியைச் சேர்ந்த சிங்கள பாஷை வெறியர்களைப் பற்றியே இவ்விதம் சொன்னார். பாஷைப் பிரச்னை நெருக்கடியான நிலைமையை அடைந்ததற்குத் தம் வகுப்பைச் சேர்ந்த தீவிரவாதிகளின் வெறியாட்டம்தான் காரணம் என்பதைச் சொல்லாமல் சொல்வதைப்போல் இருந்தது பிரதம மந்திரியின் பிரசங்கம்.

* * *

காமன் வெல்த் பிரதம மந்திரிகளின் மகாநாட்டுக்காக இலங்கைப் பிரதம மந்திரி ஸ்ரீ பண்டாரநாயகா இவ்வாரம் புறப்பட்டுப் போயிருக்கிறார். இலங்கை சம்பந்தப்பட்ட மட்டில் புதிய இலங்கை அரசாங்கத்தின் அபிப்பிராயங்களை எடுத்துரைக்க இவ் வருடத்திய காமன்வெல்த் பிரதம மந்திரிகளின் மகாநாடு விசேஷ முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இலங்கையிலுள்ள பிரிட்டிஷ் தளங்களை வெளியேற்றுவது, இலங்கையை இந்தியாவையும் பாகிஸ்தானையும் போல காமன்வெல்திற்குள் ஒரு சுதந்திரக் குடியரசாக்குவது ஆகிய இவ்விரு முக்கியப் பிரச்னைகளும் லண்டன் மகாநாட்டில் விவாதிக்கப்பட இருக்கின்றன. இதைத் தவிர இலங்கைப் பிரதமர் லண்டனிலிருக்கும்பொழுது இந்தியப் பிரதம மந்திரி நேருஜியைச் சந்தித்து இலங்கை இந்தியர் பிரச்னையைப் பற்றியும் சம்பாஷணை நடத்தத் திட்டமிட்டிருக்கிறார்.

—ரஜனி

# பனித்துளி

"இந்தூரில் விற்கப்படும் வெற்றிலைகளில் சிவப்புச் சாயம் பூசி விற்கிறார்கள்."

—ஒரு செய்தி

இந்தூர் என்னும் ஊரிலா? நல்ல வேளை; இந்த ஊரில்தான் அப்படி யெல்லாம் செய்கிறார்களோ என்று பார்த்தோம்.

★

"அம்பர் சர்க்கா உற்பத்தியினால் இந்தியாவில் கதரியக்கம் பெரும் அளவில் நடைபெறும்."

—செய்தி

அணுகுண்டு உற்பத்தியினால் உலகத்தில் கதிரியக்கம் பெரும் அளவில் நடைபெறும்.

★

"போளூர் உயர்நிலைப்பள்ளியில் உள்ள கொட்டகைகள் நிக்கிரையாகி விட்டதால் மேற்படி பள்ளிக்கூடத்தில் இடமில்லாமல் ராஜாஜியின் 'ஷிப்டு' முறைக் கல்வித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்துள்ளனர்."

—செய்தி

எல்லாப் பள்ளிக்கூடங்களும் நிக்கிரையாவதற்கு முன்பே 'ஷிப்டு' முறையைக் கொண்டு வரலாம்!

"ரயில்களில் பாட்டுப் பாடிப் பிச்சை எடுக்கும் பிச்சைக்காரர்கள் தட்சிணப் பிரதேசத்தை ஆதரிக்கும் பாட்டுக்களைப் பாடுகிறார்கள். இவர்களுக்குக் காசு அதிகம் கிடைக்கிறது."

—கோவைச் செய்தி

நமது முதல் மந்திரியின் பாஷையில் இந்தப் பிச்சைக்காரர்களையும் இவர்களுக்குக் காசு போடுகிறவர்களையும் சுத்த 'உதவாக்கரைகள்!' என்றுதான் அழைக்க வேண்டும்.

★

"அலுமினியத்தில் ஓர் பிடில் தயாராகி உள்ளது. இதன் விலை மிகவும் குறைவாக இருப்பதால் பலர் இதை வாங்குவார்கள்."

—செய்தி

பிடில் கெட்டுப் போனாலும் பரவாயில்லை; பேரீச்சம் பழ வியாபாரிகள் இதை நிச்சயம் வாங்குவார்கள்!



# தலைநகரிலே! சுப்புடு

## அரியக்குடியின் அரிய சிஷ்யர்

இன்று இன்னிசை இசைத்து வரும் இளம் வித்வான்களில், பாலக்காடு கே. வி. நாராயணஸ்வாமிக்கு முன்னணிக்கு வரும் அம்சங்கள் நிறைய உண்டு என்பதை நிரூபிக்கும் வாய்ப்பு தக்ஷிண பாரத சமாஜத்தில் அவர் செய்த கச்சேரியில் கிடைத்தது. உழைத்துப் பாடுகிறார்; இழைத்தும் பாடவேண்டும். பாடப் பாடத்தான் ராகம் அல்லவா? பெரியவரின் அனுக்கிரகம் பரிபூரணமாயிருக்கிறது என்பதற்கு நிறையச் சான்றுகள் கச்சேரியில் பரிணமித்தன. பாலக்காடு மணி அய்யரின் உறவினரும் மரபினருமாயிருக்கும் போது தாளக்கட்டுக்குக் கேட்பானேன்! லய வின்யாசங்கள் ரொம்பச் சிறப்பாயிருந்தன. விரிவான சங்கராபரணம் பரிவாயிருந்தது. தொடர்ந்து வந்த அக்ஷயலிங்கமோ எப்படியிருக்க வேண்டுமோ அப்படியிருந்தது.

டும்? சிவபிரானின் வாகனமான நந்தி பகவானின் கிருபை ஒன்றுதான் வேண்டும்.

## நாஸ்திகம் தழைக்குமா?

புது தில்லிக்கு விஜயம் செய்திருக்கும் பல பிரமுகர்களில் திரு சிவனாண்டித் தேவர் பலர் கவனத்தைப் பெரிதும் கவர்ந்திருக்கிறார். தென்னாட்டில் தற்போது தழைத்து வருவதுபோல் தோற்றமளிக்கும் நாஸ்திகப் பேயைப் போகிற போக்கில் விட்டால் சமூகத்துக்கே அழிவு நிச்சயம். இது சம்பந்தமாய் ராஷ்டிரபதியிடம் ஒரு மகஜர் சமர்ப்பிக்கத் திரு தேவர் வந்துள்ளார். கடவுள் உண்டா இல்லையா என்கிற விவாதம் வேறு; நம்பிக்கையில்லாத சிறுபான்மையார் பெரும்பான்மையான ஆஸ்திகரை வலுக் கட்டாயப்படுத்தியும் துன்புறுத்தியும் தம் கட்சியை நிலைநாட்டப் புகுவது வேறு விஷயம். மதப் பற்றற்ற

# மகா புருஷர்களின்



## தாமோதர்தாஸ்

(விநோபாஜியின் காரியதரிசி)

**வி**நோபா அடிகள் மூன்று நாட்கள் உண்ணாவிரத தவமிருந்து விட்டு ஜூன் மாதம் 7-ம் தேதி மீண்டும் தமது பூதான யாத்திரையைத் தொடங்கினார்.

அன்று களக்காட்டூர் என்ற கிராமத்தில் விநோபா அடிகள் தங்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அக்கிராமம் காஞ்சிபுரத்திலிருந்து நாலரை மைல் தூரத்தில் இருக்கிறது. இந்தக் கிராமத்துக்குப் போகும் வழியில் பக்கத்திலிருந்தவர்களை, "மணி என்ன?" என்று கேட்டார் விநோபா அடிகள்.

"ஏழுமணி!" என்று கூறினார்கள்.

"இதே நேரத்தில்தான் நான் முதன் முதலில் பாபுவை (காந்தி மகானை)ச் சந்தித்தேன்" என்றார் விநோபாஜி.

ஆம்; நாற்பதாண்டுகளுக்கு முன்பு ஒரு ஜூன் மாதம் 7-ம் தேதி யன்று தான் விநோபா அடிகள் காந்தி அடிகளைச் சந்தித்தார். அந்தச் சந்திப்புத்தான் எவ்வளவு புனிதமானது! அந்த சுதினம் மீண்டும் இந்த வருஷம் ஜூன் மாதம் 7-ம் தேதி யன்று அவருடைய நினைவுக்கு வந்தது!

இந்த ஜூன் மாதம் 7-ம் தேதியும் மற்றொரு நிகழ்ச்சியின் காரணத்தால் என்றும் மறக்க முடியாத புனித தினமாகி விட்டது.

ஆதி சங்கரர் ஸ்தாபித்த காஞ்சி காமகோடி பீடத்தின் இன்றைய அதிபதியாய் விளங்கும் ஞானச் சுடராகிய ஜகத் குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளை விநோபா அடிகள் அன்று தரிசித்தார்.

இரண்டு மகா புருஷர்களும் ஒரு சின்னஞ் சிறு கீற்றுக் கொட்டகையில் சந்தித்தார்கள். இருவரும் ஒரு சில நிமிஷங்களே பேசிக் கொண்டிருந்தார்கள். என்றாலும் எவ்வளவு பரஸ்பர அன்போடு பேசிக்கொண்டிருந்தார்கள்! அவர்கள் பேசிக்கொண்டிருந்த விஷயம் தான் எவ்வளவு உயர்ந்த கருத்துக்களைக் கொண்டதாக இருந்தது! இருவரும் சம்ஸ்கிருதத்தில்

आचार्यः—नारायण, नारायण ! कांचीपुरवासः कश्चित् शारीरकष्टदायी अभवत् !

विनोबाजी—नैव ।

आचार्यः—आगमने कष्टं अभवत् किम् ! अस्मिन् दिने अत्रैव स्थातव्यं यदि भवान् प्रीतः !

विनोबाजी—नैव………………उपकर्तुं कंचित् बोधं श्रोतुम् इच्छामि ।

आचार्यः—मम एवं बोधो भाति । सेवया लोकस्य उपकार इति न भाति । लोकः स्वस्वभावानुसारेण अनेकविधं सेवाकार्यं करोति । तत्र न दोषास्पदं किंचित् । किंतु तया विविधया सेवया अपि आत्मशुद्धिरेव

# மகத்தான சந்திப்பு



பேசிக் கொண்டார்கள். அந்த அபூர்வ சம்பாஷணை தேவ நாகரி எழுத்துக்களில் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

ஆசார்ய சுவாமிகள் வினோபாஜியை, "நாராயணா! நாராயணா!" என்று கூறி வரவேற்றுத் தமது பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டார். பிறகு ஒரு தந்தையின் அன்போடு வினோபா அடிகளின் உடல் நிலையைக் குறித்து விசாரித்தார். அந்தச் சம்பாஷணையைத் தமிழில் கேளுங்கள் :

**ஆசார்ய:**—நாராயண, நாராயண! காஞ்சீபுர வாசத்தினால் தேக அசௌக்கியம் ஏதாகிலும் ஏற்பட்டதா?

**வினோபா :**—இல்லை.

**ஆசார்ய:**—வருகிறபோது கஷ்டமாக இருந்ததா? வேண்டுமானால் இன்றைக்கு இங்கேயே இருந்து விட்டுப் போகலாம்.

**வினோபா :**—இல்லை......நான் முன்னேறுவதற்குத் தங்களிடம் ஏதாகிலும் உபதேசம் பெற்றுப் போகலாம் என்று வந்தேன்.

**ஆசார்ய :**—தொண்டு செய்வதனால் உலகத்துக்கு ஏதோ நன்மை ஏற்பட்டு விடுவதாக எனக்குத் தோன்றவில்லை. மனிதன், அவனவன் தனக்குப் பிடித்த வகையில் பற்பல தொண்டுகளைச் செய்து வருகிறான். அதில் யாதொரு தவறுமில்லை. ஆனால் அந்தப் பலவகையான தொண்டுக்கு ஆத்ம சுத்தி ஒன்றே லட்சியமாக இருக்க வேண்டும். அனேகருக்கு யாருமே ஒரு தொண்டும் செய்வதில்லை. இருந்தாலும் அவர்கள் தங்கள் வாழ்க்கையை நடத்திக் கொண்டுதான் போகிறார்கள். காட்டிலே மிருகங்கள், பறவைகள் இருக்கின்றன. யாரும் அவற்றிற்குச் சேவை செய்வதில்லை. அங்கு கவர்ன்மெண்ட் (சர்க்கார்) இல்லை. ஆயினும் அவை மனிதனைவிட அதிக சுகமாகத்தான் இருக்கின்றன. ஒவ்வொரு மனிதனும் சுத்த மனத்தோடு பிறருக்கு உபகாரம் செய்ய முயல வேண்டும். அதன் பயன் பிறருக்குச் சுகத்தைத் தருவதல்ல. தன்னுடைய ஆத்மாவைச் சுத்தி செய்து கொள்வதே அதன் பயன். எங்கும் அந்தர்யாமியாய் (உள்ளிருந்து ஆட்சி செலுத்திக்கொண்டு) பரமாத்மா இருக்கிறான். ஒவ்வொருவனும் தனக்கு ஏற்பட்ட கடமையைச் செய்வதே அந்தப் பரமாத்மாவைச் சேவிப்பதாகும்.

**வினோபா :** அப்படித்தான் நானும் எண்ணுகிறேன்.

**ஆசார்ய :** நாராயண, நாராயண, ஸந்தோஷம்.

लक्ष्यम् । अनेकजनानां तु कोऽपि सेवां न करोति, तथापि ते जीवितं निर्वहन्ति । वने मृगाः सन्ति, पक्षिणश्च, न कोऽपि तेषां सेवां करोति । तत्र गवर्नमेंट् नास्ति । तथापि तानि मनुष्यापेक्षया अधिकं सुखिन एव भवन्ति । परं तु एकैकेनापि पुरुषेण शुद्धभावेन परोपकारे यत्नः कर्तव्य एव । तस्य फलं न परेषां सुखं किन्तु आत्मशुद्धिरेव । सर्वत्र अन्तर्यामी परमात्मा अस्ति । स्वेन स्वेन कर्तव्येन स सेव्यो अस्ति ।

विनोबाजी—तदेव ममापि सम्मतम् ।

आचार्यः—नारायण, नारायण ! संतोषः ।

# கடல் கொண்ட கனவு




அத்தியாயம் 12

## யாழின் நரம்புகள்

சித்திராங்கனுக்கு அதற்கு மேல் சங்கீதத்தில் மனம் செல்லவில்லை. கொடும்பாளூர்க் குங்கும மாளிகைக்குள்ளே, இசைக் கூடத்தில் குழுமியிருந்த பிரமுகர்களுக்கு மத்தியிலே போய் ஆசனத்தில் அமர்ந்தான் அல்லவா? யாழ் நங்கையின் அற்புதமான இசையிலும், அவளுடைய மேனியின் மோகன எழிலிலும் மனத்தைத் திளைக்க விட்டுக் கொண்டே இருந்தவனுக்கு, அந்த நங்கையின் முகத்திலே துவண்ட வேதனை வியப்பையும் குழப்பத்தையும் தந்தது. நேரம் ஆக ஆக, இந்தக் குழப்பமும் 'வேதனை ஏனோ?' என்ற சிந்தனையும் அவன் உள்ளத்தைச் சாறு பிழிந்தன! எந்தப் பேரியாழுக்காக அவன் கடல் கடந்து இத்தனை தூரம் வந்திருக்கிறானோ, அந்தப் பேரியாழின் இசை கூட அவனுடைய செவியில் நுழையவில்லை. தன் எதிரேயிருந்து யாழ் வாசித்துக் கொண்டிருந்த அந்த நங்கையின் முகத்திலே, இசையின் லயத்தையும் மீறிக் கொண்டு இத்தனை வன்மையாக ஒரு வேதனை தெளிய வேண்டுமானால், அது என்ன என்ற சிந்தனையிலேயே பூபதி ஈடுபட்டான்!

சித்திராங்கன் அந்த இசைக் கூடத்திலேதான் இருந்தான். ஆனால் அவனுடைய மனம் அங்கில்லை. அது யாழ் வாசித்த எழில் நங்கையின் வாழ்க்கையைப் பற்றிய கற்பனைகளிலே வட்டம் சுற்றி வந்து கொண்டிருந்தது.

அதே நேரத்தில் குங்கும மாளிகையின் வாசலிலே ஒரு ரதம் வந்து நின்றது. அந்த ரதத்திலிருந்து நமக்கு ஏற்கனவே

சோமு

அறிமுகமான ஒருவர் இறங்கினர். ஆடம்பரமான பொன் சரடுகளால் அலங்கரிக்கப்பட் டிருந்த பீதாம்பர அங்கியை அணிந்திருந்த அந்த ஆஜானுபாகுவான மனிதரை, இதற்கு முன்பு நாம் பார்த் திருக்கிறோம். ஆனால் அப்பொழுது அவர் இந்தப் பட்டாடைகளிலும் பீதாம்பர அங்கி களிலும் தோற்றம் அளிக்கவில்லை. போர் வீரனைப் போல உடை வாளோடு காணப்பட்டார். ஒரு விநாடியில் வெள்ளைக் குதிரையில் ஏறி நம் கண் முன்னல் இருந்து மறைந்து விட்டார் அவர்! இப்பொழுது ரத சாரதி அவருக்கு முன்னல் இறங்கி வழி நடத்தவும், பின்னல் ஒரு வீரன் உத்தரவை எதிர்நோக்கிப் பயபக்தி யோடு தொடரவும், கம்பீரமாகக் குங்கும மாளிகைக்குள்ளே நடக்கிறார் அவர்!

ஆமாம்! அந்தப் பெரும் வீரரை நாம் இதற்கு முன்பு பார்த்தது, காஞ்சிமா நகரிலிருந்து பிரிந்த நெடுஞ் சாலையிலேதான்! ஆலமரத்தின் அடி யிலே கருங் குதிரையிலே மறைந்த இரண்டு மனிதர்களை, வேறு ஒரு மரத்தி லிருந்து வேவு பார்த்துக் கொண்டே குதித்து வந்தார் அல் லவா? பிறகு ஏதோ ஓர் அடையாள ஓசையைக் கூவி இன்னும் நான்கு வீரர்களையும் ஐந்து குதிரைகளையும், வரவழைத்தார் அல்லவா? பின்னர் வெள்ளைக் குதிரையிலே ஏறி அந்தக் கருங்குதிரை வீரர்கள் இருவரையும் பின்தொடர்ந்து சென்றார் அல்லவா? அதே வீரதீர புருஷர்தான் இப்பொ ழுது அத்தனை கோலாகலமான விமரிசையோடு, ஆழ்ந்த யோசனைகள் செய்த வண்ணம் குங்கும மாளிகைக் குள்ளே நுழைகிறார்!

அந்த வீரர் இசைக்கூடத்தின் முகப் பிலே வந்ததும், சபையில் ஒரு பர பரப்பு உண்டாகிறது. நாலைந்து பேர் எழுந்து அவரை நோக்கிப் பணி வோடு வந்து வரவேற்கிறார்கள். கூடத்தில் 'கசமுச' என்று ஒருவ ரோடு ஒருவர் சொல்லிக் கொள்ளு கிறார்கள், 'உதய சந்திரர் வருகிறார்' என்று! குங்கும மாளிகையிலே பூபதியை வரவேற்ற கிழவர் 'விறு விறு' என்று ஓட்டமும் நடையுமாகச் சென்று உதய சந்திரரைக் கூப்பிய கைகளோடு வணங்கி உள்ளே அழைக் கிறார். யாழ் நங்கைக்கு அருகே இருந்த அவளுடைய அன்னை எழுந்து நின்று வணங்குகிறாள். யாழ் நங்கையும் ஒரு கணம் யாழிலே ஓடிய விரல்களை நிறுத்தி விட்டு, அந்த யாழை உட லோடு அணைத்தவாறு இரண்டு கைகளையும் கூப்பி வணங்குகிறாள்.

உள்ளே நுழைந்த உதயசந்திரர் சபையை அப்படியும் இப்படியும் பார்த்துக் கொண்டே ஒரு விநாடி நிற்கிறார். இதற்குள் ஆசனங்களில் இருந்தவர்களில் சிலர் எழுந்து அவரை அமரும்படி இருக்கை வழங்கு கிறார்கள். உதயசந்திரர் வலப் பக்க மாக நடந்து சென்று ஓர் ஆசனத்தில் அமர்ந்து கொள்கிறார்.

ஒரே வேகமாகச் சென்று கொண் டிருந்த சித்திராங்க பூபதியின் சிந்தனை இந்தப் பரபரப்பிலே தடைபட்டு நின்றது. புதிதாக வந்து அமர்கிற அந்த மனிதர் யார் என்று, அவரை ஒரு தரம் ஏற இறங்கப் பார்த்தான் பூபதி. நல்ல உயரம். வன்மையான தேகக் கட்டு. கடினமான உடற் பயிற்சிகளினால் முறுக்கேறி யிருந்த நரம்புகள், புறங்கையிலே தென்னி ஓடிக் கொண்டிருந்தன. முகத்தில் இரத்தத்தின் தெளிந்த ஓட்டம் ஒரு குங்கும வர்ணத்தைப் பூசி யிருந்தது. கண்களிலே ஆண்மைக் கும், உள்ளத்தின் வலிமைக்கும், புத்திக் கூர்மைக்கும் சான்றாக ஒரு பிரகாசம் மினுமினுத்துக் கொண் டிருந்தது. 'யாரோ முக்கியமான படைத் தலைவராக இருக்க வேண்டும்! ஆனால் இவருடைய வரவை இந்தச் சபையினர் இப்பொழுது எதிர்பார்த்த தாகத் தெரியவில்லை. ஏனென்றால் இந்தக் குங்கும மாளிகையின் கிழவர் இவரை வரவேற்ற விதத்தில் ஒரு திகைப்பும், படபடப்பும் நன்றாகத் தெரிகின்றன'—இவ்வாறு மனத்துக் குள் எண்ணிக் கொண்டான் சித் திராங்கன்.

சங்கீதம் தொடர்ந்து நடக்க ஆரம் பித்தது. சபையில் அமர்ந்திருந்த பெரிய பெரிய பிரமுகர்கள் எல்லா ரும் இதுவரை முற்றிலும் இசையி லேயே ஈடுபட்டிருந்தவர்கள், இப் பொழுது அடிக்கடி உதயசந்திரரைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்

டார்கள். பூபதிக்கு அருகிலே கிழவர் வந்து அவனுடைய ஆசனத்திலே சாய்ந்து கொண்டு நின்ற வண்ணம் அவன் காதில் இரகசியமாகச் சொன்னார்: "இவர்தான் உதய சந்திரன். வில்லிவள நாட்டின் அதிபதி. இப்பொழுது பல்லவ சாம்ராஜ்யத்துக்கே இவர்தான் ஜீவநாடி. இவர் சீறிய கோட்டை நந்திவர்மரோ அவருடைய தந்தை இரணிய வர்மரோ மீறித் தாண்ட மாட்டார்கள்! இவருடைய பெயரைக் கேட்டாலே மக்கள் எழுந்து நின்று விடுவார்கள். அத்தனை மரியாதை!"

இவ்வாறு பூபதியின் காதிலே ஒவ்வொரு வார்த்தையாகக் கொண்டு பதித்தார் கிழவர். அவருடைய பேச்சின் ஊடாகத் தவழ்ந்த உணர்ச்சியைப் பார்த்தால், இத்தனை முக்கியமான மனிதர் அங்கே இந்த நேரத்தில் வருவார் என்று எதிர்பார்க்கவேயில்லை போலத் தோன்றிற்று. அந்தத் திகைப்புக்கும் வியப்புக்கும் மத்தியிலுங்கூட அவர் வரவினால் ஒரு பெருமிதமும், குங்கும மாளிகைக்கே ஒரு கௌரவமும் ஏற்பட்டது போல இருந்தது. கிழவரின் உணர்ச்சியோடு கூடிய வார்த்தைகளிலே இழைந்த கர்வம்! அந்தக் குங்கும மாளிகை அவ்வளவு செல்வாக்கு நிரம்பிய இடம் என்பதைப் பூபதி உணர்ந்து கொள்ள வேண்டும் என்ற நினைப்பு, கிழவருக்கு மிகவும் முனைப்பாக இருந்தது.



சித்திராங்க பூபதி கிழவரின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருக்கும் போதே, அவனுடைய மனம் அந்த உதயசந்திரன் என்ற வார்த்தையில் பதிந்து நின்றது. 'இந்தப் பெயரை இதற்கு முன் எங்கேயோ கேட்டிருக்கிறோமே, யார் சொன்னார்கள் நம்மிடம்? விடுதித் தலைவன் இவரைப் பற்றி என்ன நோக்கத்தோடு சொல்லியிருக்க வேண்டும் என்று தெரியவில்லையே! அவன் இவரைப் பற்றிச் சொல்லுவதற்கு முன்பே இந்தப் பெயரைக் கேட்டிருக்கிறோமே.'

இப்படி நினைத்துப் பார்த்த பூபதிக்குச் சட்டென்று ஞாபகம் வந்தது. மரக்கலத்தில் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது, புலவரையர்தான் முதன் முதல் உதய சந்திரனைப் பற்றித் தன்னிடம் சொன்னார். ஆமாம்! பல்லவ சாம்ராஜ்யத்தில், பட்டத்துக்கு இளவரசு இல்லாமல் பரமேசுவர வர்மர் இறந்ததும், உதயசந்திரனுடைய முயற்சியினால்தான் நந்திவர்மன் என்ற சிறுவன் பட்டம் சூடினான் என்று புலவரையர் விவரமாகச் சொன்னார்! அப்படியானால் இப்பொழுது இந்தத் தமிழ் நாட்டின் செங்கோலே இந்த வீரருடைய கையிலேதான் இருக்கிறதா! அத்தனை முக்கியம் பொருந்திய பெரியவரா இவர்! இவர்கூட இந்த மர்ம மாளிகைக்கு வருகிறாரே! இவருக்குங்கூட இந்தப் பேரியாழின் இசையிலே இத்தனை ஈடுபாடா!

சித்திராங்க பூபதி சித்தர் சொன்ன வார்த்தைகளை நினைத்துப் பார்த்தான். 'இந்தப் பல்லவ சாம்ராஜ்யம் இன்றிருக்கிற நிலையில் பாட்டாவது கலையாவது களிமண்ணாவது என்றெல்லாம் சித்தர் கூறினாரே! அப்படியானால் இந்த உதய சந்திரர் காஞ்சிமா நகரிலிருந்து நைவளம் என்ற ராகத்தைப் பேரியாழிலே வாசித்துக் கேட்பதற்காகவா இத்தனை தூரம் வந்திருக்கிறார்! அதிலும் ராஜ்யம் முழுதும் ஏகப்பட்ட குழப்பங்களிலே சிக்கித் தவிக்கும் இந்தச் சமயத்தில் இதற்காகவா இவர் இங்கே வந்திருக்கிறார்! இராது! இந்தக் குங்கும மாளிகைக்குள்ளே அடியெடுத்து வைத்ததுமே தனக்கு எத்தனை பெரிய விபரீதங்கள் எல்லாம் நேர்ந்து விட்டன! இத்தனை பெரிய பொல்லாத மாளிகைக்குள்ளே, இவ்வளவு பெரிய ராஜ தந்திரி, சங்கீதம் கேட்பதற்கு என்றா வரப்போகிறார்! அப்படி ஆசையிருந்தால் அரண்மனைக்கு அழைத்து அல்லவா ஒரு இசை விருந்து ஏற்பாடு செய்வார்!

பூபதிக்கு இப்பொழுது விஷயம் தெளிவாகப் புரிந்தது. இந்தக் குங்கும மாளிகையிலே வந்து கூடியுள்ள மனிதர்களைப் பற்றியும், இங்கே நடைபெறும் காரியங்களைப் பற்றியும் இந்த உதயசந்திரருக்கு உள்ளத்தில் ஏதோ ஐயப்பாடு உண்டாகி யிருக்கிறது. ஏதோ ஒரு பெரிய இரகசியத்தை உளவு காண வேண்டும் என்று அவருடைய உள் மனத்தில் ஓர் எண்ணம் வேலை செய்கிறது. நிச்சயம், அதற்காகத்தான் இப்பொழுது இங்கே வந்திருக்கிறார்.

இப்படி நினைத்ததும் பூபதிக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஒரு வேளை உதய சந்திரருடைய சந்தேகத்துக்கும் ஆராய்ச்சிக்கும் வலம்புரித்தீவின் அரசகுமாரனாகிய தானே தான் இலக்காகி இருக்கக் கூடுமோ?— இந்த மாதிரி நினைத்ததும், அவன் அமர்ந்திருந்த ஆசனமே ஆட்டம் கொடுத்தது பூபதிக்கு. அப்படியும் இப்படியும் நகர்ந்து உட்கார்ந்து கொண்டு நிலைமையைச் சமாளித்துக் கொண்டான்.

இதன் பிறகு சங்கீதம் நீண்ட நேரம் நடைபெற வில்லை. அங்கே கூடியிருந்த இசையன்பர்களின் மனம் உதய சந்திரனுடைய வரவினால் கலக்கம் அடைந்ததாக மிக நன்றாகத் தெரிந்தது. அதிலும் அந்தக் குங்கும மாளிகைக் கிழவர் பட்ட பாடு பரிதாபமாக இருந்தது. கலவரப்பட்டது கூட அத்தனை பரிதாபமாக இல்லை. அந்தக் கலவரத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் மறைத்துக் கொண்டு, முகத்தில் சிரிப்பையும் பெருமையையும் வரவழைத்துக்கொள்வதற்காக அவர் பட்ட அரும்பாடு, யாருடைய மனத்திலும் இரக்கம் உண்டாக்குவதாக இருந்தது! பாவம், பூபதி இதைக் கவனித்தான். அதோடு மட்டும் இல்லை. உதய சந்திரரும் இதைக் கவனித்து அவ்வப்போது தமக்குள்ளேயே புன்முறுவல் செய்து



கொண்டதையும் சித்திராங்கன் பார்த்தான்.

ஒரு நாழிகை நேரத்தில் 'சங்கீத விளிகை' என்று பெரும் பெயரில் அழைக்கப்பட்ட அந்த இசை விருந்து கலைந்தது. சபையிலிருந்து ஒவ்வொரு பிரமுகராக வெளியே வந்தார்கள். ஆச்சரியம் என்ன வென்றால், கூட்டம் முழுதும் கலைகிறவரை உதய சந்திரர் தமது இடத்தை விட்டு நகரவே இல்லை. இசைக் கூடத்திலிருந்து வெளியே செல்லும் ஒவ்வொரு மனிதரும் அவரை வணங்கிச் செல்லும் போது, இவரும் கையைக் கூப்பிக் கொண்டே அந்த மனிதர்களின் தோற்றத்தையும் முகக் குறிப்புக்களையும் மௌனமாக ஆராய்ந்தார்! இதைப் பூபதி நன்றாகப் பார்த்தான்—கடைசியாகத் தன்னுடைய முறையும் வருமே, தான் என்ன செய்வது என்ற எண்ணத்தில்!

சபை கலைந்ததும், யாழ் நங்கையும் அவளுடைய தாயாரும் உதய சந்திரருடைய இருக்கையை நோக்கி நடந்து வந்தார்கள். அவர் எழுந்து நின்று கொண்டார்.

"கைவளம் அபாரமாக இருக்கிறது. அகத்தியருடைய இசை நூலில் இந்தப் பண்ணைப் பற்றி மிக உயர்வான இலக்கணங்களோடு சொல்லியிருக்கிறது. இன்று அதன் உண்மையைச் செவி குளிர உணர்ந்தேன். இசையை ஏட்டிலே பார்த்து அநுபவிக்க முடியுமா! ஏடு எழுந்து வந்து விளையாட வேண்



டிய இடம் பேரியாழ்தான்! அகத்தியர் எழுதி வைத்துப் போன இசைத் தமிழ் ஏடு, இன்று எங்களுக்கு முன்னால் ஒலி வடிவிலே எழுந்து நின்று பேசியது!''—இவ்வாறு பாராட்டினார் உதயசந்திரன்.

கிழவர் குறுக்கே வந்து பேச ஆரம்பித்தார்.

"தங்களைப் போன்ற பிரமுகர்களும், அரசியல் மேதைகளும் இசையிலே இத்தனை ஆர்வம் கொண்டு, இத்தனை காத தூரம் வந்து நமது குங்கும மாளிகைக்கு எழுந்தருளியது நாங்கள் செய்த புண்ணியம்!" என்றார் கிழவர். இந்த இடத்தில் அந்த அம்மாள்—நங்கையின் தாயார்—பேசினாள்.

"நாம் செய்த புண்ணியம் மட்டுமா! சங்கீதமே புண்ணியம் செய்திருக்கிறது என்றல்லவா சொல்ல வேண்டும்!''

அப்படிச் சொல்லிவிட்டு, முகஸ்துதி செய்யும் போது, ஒரு சிரிப்பு வருமே அந்தச் சிரிப்பைச் சிரித்தாள் அந்த அம்மாள். உதய சந்திரர் சிரிக்கவில்லை. புன்முறுவல்கூட இல்லை. நிதானத்தோடு அந்த அம்மாளையே கூர்ந்து பார்த்துக் கொண்டே சொன்னார்:

" அம்மா! என்னிடம் நீங்கள் இத்தனை மதிப்பு வைத்திருந்தால் அது பற்றி மகிழ்ச்சிதான். எனினும் ஓர் உண்மையை உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். இசை இசைக்காகவே இருக்கும்வரை நமது நாட்டுக்கும் இசைக்குமே நல்லதுதான்!''

இப்படி ஒரு வாக்கியம் வந்ததும் தாயாருடைய முகத்தில் ஏனோ கலவரம் ஏற்பட்டது! இதைக் கவனித்து நன்றாக மனத்தில் வாங்கிக் கொண்டே, உதயசந்திரன் அடுத்த வாக்கியத்தைச் சேர்த்தார்.

"இசை இசைக்காகவே என்று இருக்க வேண்டும். என்னைப் போன்ற மனிதர்கள் அதை மதிக்கிறார்கள் என்பதை ஒரு பெரிய காரியமாகப் பாவிக்கக் கூடாது. அதற்காகச் சொல்லுகிறேன். பிறர் பாராட்ட வேண்டும் என்ற நோக்கத்தோடு இயங்க ஆரம்பித்து விட்டால், எந்தக் கலையும் தேய ஆரம்பித்து விடும்! நமக்கு நாம் லயப்பட்டு ஒரு காரியம் செய்தால், பிறருடைய லயமும் தானாகவே ஏற்படும். குயில் எதற்காகப் பாடுகிறது! நம்முடைய பாராட்டை எதிர்பார்த்தா?''

இப்படிப் பேசினார் உதயசந்திரன். பூபதி தன்னுடைய ஆசனத்திலிருந்து எழுந்து நின்று கொண்டிருந்தவன், இந்த வார்த்தைகளைக் கேட்டதும், இப்பொழுது அந்த இடத்தை விட்டு நகர்ந்து விடலாமா அல்லது மேலும் என்ன நடக்கிறது என்பதைக் கேட்கலாமா என்று புரியாமல் ஒரு விநாடி தயங்கினான். இதற்குள் உதயசந்திரன் இவன் பக்கமாகத் திரும்பி விட்டார். வேறு வழியின்றிக் கைகூப்பி வணங்கினான் பூபதி. உதயசந்திரரும் மிக்க பரிவோடு கைகூப்பினார்.

கிழவர் குறுக்கே வந்து பேச ஆரம்பித்தார்: "இவர் தொலை தூரத்திலிருந்து வந்திருக்கிறார். யாழ் இசை என்றால் இவருக்கு உயிர்!''

சித்திராங்க பூபதிக்கு அந்தக் கிழவரைக் கடித்து விழுங்கி விடலாம் போல ஆத்திரம் வந்தது. ஆனாலும் வலம்புரித் தீவு என்ற வார்த்தையை உபயோகப் படுத்தாமல் விட்டாரே, அதற்காகவாவது பொறுமையாக இருக்க வேண்டும் அல்லவா?

உதய சந்திரர் கிழவருடைய வார்த்தையை அத்தனை அக்கறையோடு கேட்டதாகத் தெரியவில்லை.

"மகிழ்ச்சி" என்று சொல்லிக் கொண்டு, அதற்குமேல் பூபதியைப் பார்த்து ஒன்றுமே பேசாமல், யாழ் நங்கையை நோக்கிக் கீழ்க்கண்டவாறு சொன்னார்:

"அம்மா! உன்னுடைய இசையில் உன் திறமையை மட்டுமல்லாமல், உன் உள்ளத்தின் நிலைமையையும் உன்னுடைய இயல்பான பண்புகளையுமே கண்டு கொண்டேன். மனப் பூர்வமாக உன்னையும் உன் இலட்சியங்களையும் ஆசீர்வதிக்கிறேன். நான் அடுத்த முறை இந்தப் பக்கமாக வரும்போது இரண்டு பெரியார்களை இங்கே அழைத்து வருகிறேன். அந்த இருவரும் இலக்கியமும் இசை இலக்கணமும் நன்றாகக் கற்றுத் தேர்ந்த பண்டிதர்கள். ஒருவர் வைஷ்ணவப் பெரியார். இன்னொருவர் இலங்கைத் தீவிலிருந்து வந்துள்ள சிவப் பழம்! இருவரும் இந்த இசையைக் கேட்

## ஜூலை 6-ந் தேதி முதல்

தென்னாடெங்கும் வெளிவருகிறது



அன்னபூர்ணாவின்

# திருட்டு ராமன்

நடிகர்கள்: A. நாகேஸ்வர ராவ் ~ சாவித்திரி ~ ஜக்கய்யா
ஜமுனா ~ ரேலங்கி ~ சூர்யகாந்தம் ~ R. நாகேஸ்வர ராவ்



நடிகைகள்:

குசலகுமாரி • மாலதி • வனமாலா

டைரக்ஷன்:

K.V. ரெட்டி B.Sc., (Hons)



பூரண உரிமையாளர்கள்:

**தல்லம் பிக்சர்ஸ் சர்க்யூட்**

சென்னை. 4

G.H. Rao

விநியோகஸ்தர்கள்: * சென்னை நகரம், வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு, செங்கல்பட்டு: பெல் பிக்சர்ஸ் (மதராஸ்) லிமிடெட், மதராஸ்-2. * மதுரை, ராமனாதபுரம், திருநெல்வேலி: எவரெஸ்ட் பிக்சர்ஸ், மதுரை. * சேலம்: எம். ஏ. வி. பிக்சர்ஸ், சேலம். * மலபார் & திருவாங்கூர்-கொச்சி ராஜ்யம்: ஜியோ பிக்சர்ஸ் (பிரைவேட்) லிமிடெட், கோட்டயம்

இதர பிரதேசங்களுக்கு அணுகுக: தல்லம் பிக்சர்ஸ் சர்க்யூட், மதராஸ்-4, பெங்களூர்-9

# நாம் பஞ்சசீலத்தை ஆதரிக்கிறோம்..

அரசியலில் உள்ளதைப் போலவே தொழில் துறையிலும் சில அடிப்படையான நியமங்களை அனுசரித்தல் அவசியம்...

நாங்கள் முக்கியமாக கவனிக்கும் விஷயங்கள்...

(1) மிகச்சிறந்த மூலப் பொருள்களைத் தேர்ந்தெடுத்தல்.
(2) நவீன உற்பத்தி முறைகள்.
(3) நல்ல சுகாதாரம்.
(4) உயர்ந்த தரக் கட்டுப்பாடுகள்.
(5) மிகக் குறைந்த விலை.

மிகச்
சிக்கனமான
வாங்குவது நல்லது.

# ஸாதே பிஸ்கோத்துக்களையும் சாக்லெட்டுகளையும்

HEROS'
No. 53
TAMIL

ஸாதே பிஸ்கட் அண்டு சாக்லெட் கம்பெனி லிட்., பூனா 2.

டால் எதிர்காலத்தில் நமது நாட்டுக்கே பயன் உண்டு!''

இப்படிச் சொல்லிவிட்டு அங்கிருந்து புறப்பட்டார் உதயசந்திரன்.

சித்திராங்கன் மௌனமாக இந்த நடப்புக்களையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தபோது, ஒரு நுட்பத்தைக் கூர்மையாகக் கவனித்தான்.

''உன்னையும் உனது இலட்சியங்களையும் மனப்பூர்வமாக ஆசிர்வதிக்கிறேன்'' என்று நங்கையிடம் உதயசந்திரன் சொன்னபோது, அன்னையின் முகம் சுருங்கியது. அந்த முகத்தில் வேதனை துவண்டது. நங்கையோ? சற்று முன்புவரை வேதனை தெளிந்த அவளுடைய முகத்தில் இந்த வார்த்தைகள் வந்ததும், வேதனை மறைந்து ஒரு மலர்ச்சி ஏற்பட்டது. இந்த விநோதமான மாறுபாட்டைப் பூபதி நன்றாகப் பார்த்தான்.



உதய சந்திரன் அங்கிருந்து சென்றதும் கிழவர் மிகவும் தைரியத்தோடு, மறுபடியும் குறுக்கே வந்து பேச ஆரம்பித்தார்.

''என்னம்மா! தாயும் மகளும் இப்படிப் பேசாமல் நிற்கிறீர்களே! இந்த இளைஞர் நம்முடைய மாளிகையின் விருந்தாளி! அவரை உபசரிக்கும் அழகு நன்றாயிருக்கிறதே! மாமல்லபுரம் விடுதித் தலைவராக்கும் இவரை அனுப்பி வைத்திருக்கிறார்!'' என்றார் கிழவர்.

''ஓ! தெரியுமே!'' என்று ஏககாலத்தில் இருவரும் சொல்லிக் கரம் கூப்பினார்கள். அப்பொழுது நிலவுப் பெண்ணான அந்த யாழ் நங்கையின் முகத்தில் அரும்பிய மோகனப் புன்னகை பூபதியை என்னவோ செய்தது!

''வலம்புரித்தீவின் அரச குமாரர்!'' என்றார் கிழவர் அடுத்தபடியாக! இந்த வார்த்தைகள் நங்கையைவிட அவளுடைய தாயாரை மயக்கின என்பது அவளுடைய முகக் குறிப்பில் தெரிந்தது. கண்களை அகல விரித்துக் கொண்டே, ''அந்த விவரத்தை நீங்கள் ஒருவரும் இதுவரை சொல்லவில்லையே!'' என்றாள் அவள், வியப்போடு.

''அது பெரிய இரகசியம் அம்மா! விடுதித் தலைவர் அந்த இரகசியத்தை வெளியே சொல்லக்கூடாது என்று கண்டிப்பாகக் கட்டளையிட்டிருக்கிறார்!'' என்று சொல்லிக் கொண்டே ஒரு பைத்தியச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே கிழவர் மேலும் பேசினார்:

''காஞ்சிமா நகரத்திலுள்ள கடிகையிலே சேர்ந்து கல்வி கற்பதற்காக வந்திருக்கிறார்!''

கிழவரின் இந்த வார்த்தைகள் பெரிய அம்மாளுக்கு ஒரு பொருட்டாகவேபடவில்லை. ஆனால் நங்கை இந்த வார்த்தைகளைக் கேட்டதும் முகம் மலர்ந்தாள். அந்த மலர்ச்சி பூபதியின் முகத்தையும் அகத்தையும் மலரச் செய்தது.

''கல்வி கற்க வந்திருக்கிறேன் என்று பொய்யாகச் சொல்வதே இந்த நங்கைக்கு இத்தனை ஆனந்தம் தருகிறதே! பொய்யே இத்தனை மகிழ்ச்சி தருமானால், மெய்யாகவே நான் கல்வி கற்றால் எத்தனை மகிழ்ச்சி அடைவாள் இவள்!''—இவ்வாறு எண்ணிக் கொண்டே புன்முறுவல் செய்தான் பூபதி, நங்கையை நோக்கி.

கிழவர் பேச ஆரம்பித்தார்.

''தம்பி! நாழிகை ஆகிவிட்டது. நீங்கள் எல்லாம் அரச குமாரர்கள். பசியும் தாகமும் தாங்க முடியாது உங்களால். மாடிக்குப்போய் உணவை முடித்துக் கொண்டு, நிலா முற்றத்திலே கொஞ்சம் சிரம பரிகாரம் செய்து கொள்ளலாமே!''

கிழவருடைய இந்த வார்த்தைகள் நாராசமாக இருந்தன! பெரியாளானது

பெண்ணுருவம் எடுத்துத் தனக்கு முன்னால் வந்து நின்று பேசுவது போலக் காட்சி தரும் அந்த நங்கைக்கு முன்னால் பசியாவது, தாகமாவது! கிழவர் இப்பொழுது சொன்ன பிறகு தான், இன்னும் உணவு உண்ணவில்லை என்ற விஷயமே ஞாபகம் வருகிறது. அதே சமயம் அந்த உணவு எதற்கு என்றும் தோன்றுகிறது! ஆனாலும் இந்த எண்ணத்தையெல்லாம் வெளியே காட்டிக் கொள்ளலாமா? 'சரி' என்றான் பூபதி.

சற்று முன்னால் ரதங்களும் புரவிகளும் பிரதானியர் கூட்டமுமாக மொய்த்து நின்ற குங்கும மாளிகை, இப்பொழுது மனித நடமாட்டமே இல்லாத மர்ம மாளிகையாக மாறியது. தன்னந் தனியாக மாடியிலே ஏறிப் படிம விலாசத்துக்குள்ளே நுழையும்போது, சித்திராங்கன் இந்தக் காட்சி மாற்றத்தையே நினைத்து நினைத்து அதிசயித்தான். கடலில் பிரயாணம் செய்த காலத்தில் மரக்கலத்திலே அமர்ந்தவாறு, அன்றொரு நாள் புலவரையா பூபதிக்கு ஒரு திருக்குறளை எடுத்துச் சொன்னார். 'நிலையாமை' என்பது பற்றி வள்ளுவர் என்ற மகான் பாடிய பாடல் அது. ஒருவருக்குச் செல்வம் வருவதும், போவதும், இசையரங்கத்தில் மனிதர்கள் கூடுவதும் கலைவதும் போல நிலையற்றது என்று திருக்குறள் சொல்லுகிறது. அதைப் புலவர் ஐயா பூபதிக்கு விளக்கம் செய்தார்.

**கூத்தாட்(டு) அவைக்குழாத் தற்றே**
**பெருஞ்செல்வம்:**
**போக்கும் அது. விளிந் தற்று**

பெருஞ் செல்வம் வருவதானது, கூத்தாட்டு அவைக்குழாம் போலத்தான். அரங்கிலே மக்கள் நெருக்கமாகக் கூடுவது போலத்தான். பிறகு, போக்கும், அந்தச் செல்வம் போவதும், அது விளிந்தற்றே—அந்த அரங்கம் மறுகணத்தில் அறவே கலைந்து போவது போலவேதான்!

புலவரையா இந்தக் குறளுக்கு அரை நாழிகை நேரம் மரக்கலத்திலே அருமையாக விளக்கம் சொன்னார்! இப்பொழுது அரை நொடியிலே ஏற்பட்ட காட்சிமாற்றம் அந்தக் குறளுக்குப் பதவுரையும், பொழிப்புரையுமாகச் சித்திராங்கனுடைய கண் முன்னே நிதரிசனமாகத் தோற்றமளித்தது! சற்று நேரத்துக்கு முன்பு வரை அந்த இசைக்கூடத்திலே நடைபெற்ற கோலாகலம் என்ன! அடடா! எத்தனை பெரிய பிரமுகர்கள்! எத்தனை ஆர்ப்பாட்டங்கள்! இப்பொழுது ஒரு விநாடியில், எல்லாம் மறைந்து சூன்யமாகி விட்டதே! ஒரு மனிதனுக்குச் செல்வம் வருவதும் போவதும் இப்படித்தானே! எத்தனை உண்மையான வார்த்தை!

சித்திராங்க பூபதிக்கு இது மனத்தை என்னவோ செய்தது. இரண்டு மூன்று நாழிகை நேரம், இசைச் சூழ்நிலையிலே அழகுப் பிம்பத்தின் எதிரே இருந்து விட்டு வந்ததும், இப்படிப்பட்ட ஒரு சோக நினைவு எழுந்து பூபதியை வேதனைப் படுத்தியது.

'செல்வம் நிலைக்காது. உண்மை தான்! அழகு மட்டும்?' இப்படி ஒரு சிந்தனை பூபதிக்கு உண்டாயிற்று.

'அழகும் செல்வத்தைப் போலத் தான். இங்கே கூடிய மனிதர்களில் எத்தனை பேருக்கு மெய்யான இசை ஞானம் இருக்கப் போகிறது? அரங்கிலே கூடிய இத்தனை பிரமுகர்களில் யாழைக் கேட்பதற்கு என்றே வந்தவர்கள் எத்தனைபேர் இருக்கக் கூடும்! பேரியாழ், பேரியாழ் என்று துடி துடித்துக் கொண்டிருந்த தன்னையே அந்த நங்கையின் எழில் என்னவோ செய்ததே! தன்னுடைய சிந்தனையே எங்கெல்லாமோ வட்டம் சுற்றி விட்டதே! அப்படியானால் மற்றவர்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? இதையெல்லாம் எண்ணித்தான் அந்த ராஜதந்திரி உதயசந்திரர் அப்படி ஒரு போடு போட்டாரோ! இசை இசைக்காகவே இயங்க வேண்டும் என்று சொன்னாரே! வேறு யார் இத்தனை துணிவோடு இதைச் சொல்ல முடியும்! ஆனால் இந்த வார்த்தைகள் நங்கையின் தாயாரைக் கலவரப்படுத்துவானேன்? அதே சமயம் நங்கை மட்டும் ஏன் சந்தோஷப்பட்டாள்? யாழ் வாசித்துக் கொண்டிருக்கும் போது முகத்தில் ஏதோ ஒரு வேதனை ரேகையாகப் படர்ந்ததே, அதே முகத்தில் உதய சந்திரனின் இந்த வார்த்தைகள் எத்தனை மலர்ச்சியைக் கொடுத்தன? இதற்கெல்லாம் என்ன

காரணம்? அன்னைக்கும் மகளுக்கும் ஒரே வாக்கியம் இரண்டு வித மன வேகங்களைத் தருவானேன்!'

பூபதி படிம விலாசத்தில் கட்டிலின் மேல் இருந்து நெற்றியைப் பிசைந்தவாறு ஒரே மோனச் சிந்தனையில் ஆழ்ந்திருந்த போது, படிக்கட்டுகளில் குமிழ்க் கட்டையின் சத்தம் கேட்டது. நிமிர்ந்து உட்கார்ந்து கேட்பதற்குள், அந்தக் குமிழ்க் கட்டையின் ஓசை படிப்படியாக இறங்கித் தொலை தூரத்திலே மறைந்து விட்டது.

"ஐயா!" என்று குரல் கேட்டுத் திரும்பினான். பணியாள் நின்று கொண்டிருந்தான்.

"உணவு சித்தமாக இருக்கிறது!" என்றான் அவன். இதற்குள் கிழவர் படிம விலாசத்துக்குள்ளே வந்து விட்டார்.

"நீங்கள் எழுந்து சாப்பிட வரலாம். இந்தப் பணியாளை அனுப்பியது போதாது என்று நானே வந்ததன் காரணம் அதுதான். இவன் ஒரு செவிடன். அழைத்து வா என்று சொன்னால், அடித்து வா என்று அவன் காதில் விழும்! மனிதர்களை அடித்துவிட்டு வந்து விடுவான்! அரை மந்தம். அதாவது அரைகுறையாகக் கேட்கும். உயிரான வார்த்தைகள் மட்டும் காதில் விழாது. விழுந்தாலும் கொஞ்சம் மாறி விழும்! மற்றப்படி முழுச் செவிடு இல்லை. முழுச் செவிடாவதற்கு இன்னும் கொஞ்சம் நாள் ஆகும்! சாத்தன் என்று பெயர்!"

இப்படிச் சொல்லிக் கொண்டே கிழவர் அவருடைய வழக்கமான பைத்தியச் சிரிப்பைச் சிரித்துக் கொண்டு குலுங்கினார். ஏனோ பூபதிக்கு அந்தச் சிரிப்பு அறவே பிடிக்கவில்லை. இந்தச் சாத்தனைப் பற்றி இத்தனை முக்கியத்தோடு இவ்வளவு சாங்கோபாங்கமாகக் கிழவர் பேசியது ஆத்திரத்தைக் கொடுத்தது.

"இதோ வருகிறேன். நீங்கள் செல்லுங்கள்!" என்று சொல்லி விட்டு உடையை மாற்றுவதற்காகத் தன் உடைமைப் பொருள்களை நெருங்கினான் சித்திராங்கன்.

பூபதியின் பொருள்களுக்கு மத்தியிலேயிருந்த சிறிய மூட்டைக்கு மேலே விடுதித் தலைவனுடைய நிருப ஓலை சுருண்டு கிடந்தது. கட்டிலிலே வைத்துப் பிரித்துப் பார்த்தான் அல்லவா, அது இப்பொழுது காற்றிலே பறந்து வந்து அந்த மூட்டையின் மேல் விழுந்து கிடக்கிறதா? இராதே. திண்டுக்கு அடியிலே செருகி வைத்ததாக அல்லவா பூபதியின் நினைவு? அப்படியானால் அதை யாரோ உலைத்துப் பார்த்து விட்டு அவசரத்தில் அங்கே போட்டு விட்டுப் போய் விட்டார்களா, என்ன?

'விடுதித் தலைவன் கூட இங்கே இசை விருந்துக்கு வரக்கூடும்' என்று கிழவர் சொன்னாரே. அந்தப் படுபாவி இந்த வினாடிவரை வரவில்லையே. என்ன காரணமாக இருக்கக் கூடும்? இசை விருந்துக்கு வருவதாக அவன் முதலில் திட்டம் போட்டிருக்க வேண்டும். இல்லையென்றால் இந்தக் கிழவர் அப்படி ஒரு செய்தியைத் தன்னிடம் கூறியிருக்க மாட்டார். இசை விருந்துக்குப் புறப்படுவதாக ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கும் போதே, எதிர்பாராமல் ஏதாவது நடந்திருக்க வேண்டும். அல்லது இங்கே புறப்பட்டு வரும்போது வழியில் ஏதாவது விபரீதம் நடந்திருக்க வேண்டும். ஒரு வேளை இந்த உதயசந்திரன் வருவது தலைவனுக்கு முதலில் தெரிந்திருக்காது. பிறகு இதுபற்றிய செய்தி அவனுக்கு இரகசியமாக எட்டியிருக்க வேண்டும். அதனால்தான் அவன் இங்கு வருவதை நிறுத்தியிருப்பான். ஆனாலும் அத்தனை தூரம் ஒருவருக்குப் பயந்து கொண்டு அதனால் தன்னுடைய சூழ்ச்சிகளையோ திட்டங்களையோ நிறுத்தி விடுகிறவன் இல்லையே, அந்தப் பொல்லாத விடுதித் தலைவன்!

இப்படிக் குழம்பிக் கொண்டே தன்னுடைய மூட்டையை நெருங்கினான். நடுநாயகமாக நின்றது அன்னை கொடுத்தனுப்பிய தந்தப் பேடகம். உடனே தாயின் நினைவினால் கண் கலங்கியது. தன்னையும் மீறிய பாசத்தினால் அந்தப் பேடகத்தை எடுத்து, மீண்டும் ஒரு முறை அதைத் திறந்து பார்த்தான் பூபதி.

'இந்த மூன்றையும்
என்றும் மறந்திடு மகனே!'

என்ற மூவர்ண எழுத்து அவனுடைய கண்களை உறுத்திற்று. (தொடரும்)




சிறந்த அழகு சாதனங்கள்

# ரெமி

தயாரிப்புகள்

ஸ்னோ, பவுடர், ஹேர் ஆயில்

# பூதான யாத்திரையில் ஒரு புனித க்ஷேத்திரம்



எஸ்.வி.எஸ்

தெய்வ பக்தியோடு தீர்த்த யாத்திரை செய்பவர்களுக்குக் காசி, ராமேசுவரம் முதலியன புனித க்ஷேத்திரங்கள்.

தேச பக்தி மிகுந்தவர்களுக்கு ஜாலியன் வாலா பாக், டண்டி, வேதாரண்யம் முதலிய ஊர்கள் மெய் சிலிர்க்கச் செய்யும் புனித க்ஷேத்திரங்கள்.

பூதான இயக்கத்தில் தீவிரப் பற்றுதலும் உணர்ச்சியும் கொண்டவர்களுக்குக் கிராமதானமாக வழங்கப்பட்ட கிராமங்கள் எல்லாமே புனித க்ஷேத்திரங்கள். அப்படிப்பட்ட புனித க்ஷேத்திரங்களில் ஒன்று சென்னைக்கு அண்மையில் செங்கல்பட்டு ஜில்லாவிலுள்ள வயலூர்.

இந்தப் புனித க்ஷேத்திரத்துக்கு வினோபா அடிகள் ஜூன் 17உ விஜயம் செய்கிறார் என்று அறிந்த மாத்திரத்தில் பூதானத்தில் பற்றுக் கொண்ட யாருக்குமே அந்தக் கிராமத்தையும் அங்கு வினோபாஜியையும் தரிசிக்க வேண்டுமென்ற உணர்ச்சி ஏற்படும். இப்படிப்பட்ட உணர்ச்சியினால் உந்தப்பட்டு ராஜாஜியின் குமாரர் ஸ்ரீ ஸி. ஆர். நரசிம்மனும் நானும் நண்பருமாகச் சென்னையை விட்டு 17–ம் தேதி விடியற்காலை 4–30 மணிக்கு வயலூரை நோக்கிக் காரில் புறப்பட்டுச் சென்றோம்.

காலை 6-30 மணிக்கு வயலூர் கிராமத்தை வினோபா அடிகள் நெருங்கிக் கொண்டிருந்த போது நாங்களும் போய்ச் சேர்ந்து விட்டோம். வயலூரைக் கிராமதானம் செய்த திரு ராமகிருஷ்ண ரெட்டியார் எங்களை முகமலர்ந்து வரவேற்றார். நாங்கள் வண்டியை விட்டு இறங்கி வினோபா அடிகளின் பாத யாத்திரையில் கலந்து கொண்டோம்.

கிராமத்தை அடைந்ததும் அடிகளுக்குக் கதர் மாலை அணிந்துப் பெண்கள் மங்கல ஆரத்தி சுற்றி வரவேற்றார்கள். பின்னர் அடிகள் ஒரு சிற்றுரை நிகழ்த்தினர்.

தமிழ் நாட்டில் முதல் கிராம தானமாகக் கிடைத்துள்ள இக் கிராமத்துக்குத் தாம் வந்ததில் மகிழ்ச்சி தெரிவித்தார்.

"கிராமதானத்தின் முக்கிய லட்சியம் அன்பையும் அறத்தையும் மக்களிடையே வளர்ப்பதுதான். கிராமத்தைப் பொருளாதாரத் துறையில் மேம்படச் செய்துவிடலாம். கிராமத்தைச் செல்வம் கொழிக்கச் செய்து விடலாம். அதனால் மட்டும் கிராமம் உயர்வதில்லை. லக்ஷ்மிதேவி விஷ்ணுவின் மனைவி. லக்ஷ்மியை விஷ்ணுவிடமிருந்து பிரித்துவிட்டால் சோபிப்பதில்லை. தர்மமே பரமாத்மா. அன்போடும் தர்மத்தோடும் இயைந்த செல்வ நிலையே கிராமத்தை உயர்த்துகிறது!

தமிழ் நாட்டில் இப்படிப்பட்ட கிராமதானப் பணி சுலபமாகும். இதற்கு ஆதாரம் உங்கள் தமிழ் இலக்கியம். அதில் அன்பையும் தர்மத்தையுமே அதிகமாக வற்புறுத்தப் பட்டிருக்கிறது. உங்கள் மகாகவி பாரதியார்கூட,

" தனியொருவனுக்கு உணவிலையெனில்
ஜகத்தினை அழித்திடுவோம் !"

என்று மனம் உருகப் பாடி யிருக்கிறார்.

கிராமதானம் ஓர் அன்புப்பணி. இத்தகைய பணிகள் பலாத்காரத்தினால் பரவுவதில்லை. அன்பினாலேயே பரவுகிறது. இக் கிராமம் ஞானோதயம் பெற்றிருக்கிறது. இதன் ஞானக் கிரணங்கள் நாற்புறமும் பரவி வீசும்! எங்கும் கிராமதான உணர்ச்சி மேலோங்கும். ஒருவர் முன்னால் சென்றால், மற்றவர்கள் பின்னால் செல்வதில் கஷ்டமில்லை. தமிழ் நாட்டுக்கு வயலூர் கிராமதானப் பணியில் வழி காட்டியிருக்கிறது! விரைவில் மற்றக் கிராமங்களும் இப் பணியில் ஈடுபடும்" என்றார்.

இந்தப் பேச்சைக் கேட்டபோது, வினோபா அடிகள் மேற்கோளாக எடுத்துக் காட்டிய பாரதியாரின் மணி வாக்கியங்களின் பொருள் 'இன்றுதான் புலப்பட்டது' என்ற உணர்ச்சி

ஏற்பட்டது. பாரதியார் அன்பைத்தான் சொல்லுகிறார் என்பது மனத்துக்குப் பட்டது!

* * *

வயலூர் ஒரு சின்னஞ் சிறு கிராமம். இந்தக் கிராமத்தின் ஜனத்தொகை 290 பேர் தான். மொத்த குடும்பங்கள் 42. வீடுகள் 36. கிராமத்திலுள்ள நிலத்தை, டால்ஸ்டாய், காந்திஜி, விநோபாஜி, ஜெயப்பிரகாஷ், சங்கர் ராவ் தேவ் ஆகியவர்களின் பெயரில் ஐந்து பண்ணைகளாகப் பிரித்திருக்கிறார்கள். இந்தப் பண்ணைகளில் நன்செய் நிலமும் உண்டு; புன்செய்நிலமும் உண்டு. ஒவ்வொரு பண்ணையிலும் விவசாயம் செய்ய வேண்டிய பொறுப்பு சில குடும்பங்களிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. டால்ஸ்டாய் பண்ணையை விவசாயம் செய்யவேண்டிய பொறுப்பு ஆறு குடும்பங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. டால்ஸ்டாய்ப் பண்ணையை விடச் சிறிது பெரிதான விநோபாஜி பண்ணை எட்டு குடும்பங்களிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. மொத்த மகசூலில் கிராமத்தின் தேவை போக மிகுதியைக் கிராமப் பொது நலத்துக்கான காரியங்களில் செலவிட்டு வருகிறார்கள்.

இந்தக் கிராமம் சென்ற ஆண்டு காந்தி மகான் பிறந்த தினமாகிய அக்டோபர் இரண்டாம் தேதி ஸ்ரீ ராமகிருஷ்ண ரெட்டியாரும், அவரது தர்ம பத்தினி ஸ்ரீமதி சுப்புரத்தினம்மாளும் விநோபா அடிகளுக்குக் கிராமதானம் வழங்கி விட்டார்கள். அதிலிருந்து கிராமம் பல துறைகளிலும் முன்னேறி யிருக்கிறது.

விநோபா அடிகள் தமது ஜாகைக்குள் போனதும் ஸ்ரீ ஸி. ஆர். நரசிம்மனிடம் ராஜாஜியின் உடல் நிலையைப் பற்றி விசாரித்தார். (இந்தக் காட்சியைப் படத்தில் ஆரம்பத்தில் பார்க்கலாம்.) "கிராம தானமாக வழங்கப்பட்ட கிராமம் எப்படி யிருக்கிறது" என்று பார்த்து விட்டு வர நானும் என் நண்பருமாகப் புறப்பட்டோம்.

எத்தனையோ கிராமங்களை நானும் பார்த்திருக்கிறேன். ஆனாலும் வயலூர் கிராமம் மாதிரி ஆகாது. கிராமவாசிகள் அத்தனை பேரும் குதூகலமாகக் காணப் பட்டார்கள். வீட்டையும் தெருவையும் சுத்தமாக மெழுகிக் கோலம் போட்டு வைத்திருந்தார்கள். சுத்தமாக உடையுடுத்தி எங்களை யெல்லாம், "வணக்கம், வாருங்கள்!" என்று வரவேற்றார்கள். பிறகு அவர்கள் க்ஷேம நலத்தை விசாரித்தோம். அவர்கள் "முன்னெல்லாம் பல நாட்கள் உண்ண உணவில்லாமலே போய்விடும். இப்பொழுது எல்லா நாட்களிலும் எங்களுக்குச் சாப்பாடு கிடைக்கிறது" என்றார்கள். தோல் வேலை செய்யும் ஒரு கிழத் தொழிலாளி, மிகுந்த உற்சாகத்தோடு தங்களுக்கு ஏற்பட்டுள்ள பாக்கியங்களை வர்ணித்தார். "இவ்வளவுக்கும் காரணம் விநோபாஜி. அவர்தான் எங்கள் சாமி!" என்று கூறினார்.

விநோபா அடிகள் எத்தகைய மகத்தான காரியம் சாதித்திருக்கிறார் என்பது மிக நிதர்சனமாக வயலூர் கிராமவாசிகளுடன் அளவளாவிக் கொண்டிருந்தபோது தெரிந்தது. சர்க்காரின் பெரிய காரியாலயங்களின்றி, அதிகாரமின்றி, சட்ட திட்டமின்றி, காலால் நடந்து சென்று அன்பையே போதித்து ஒரு தனி மனிதர் எத்தனை மகத்தான அன்புப் புரட்சியை உண்டாக்கி யிருக்கிறார்.

* * *

அன்று காலை பத்து மணிக்கு விநோபாஜி அந்தக் கிராமப் பஞ்சாயத்தார்களைச் சந்தித்தார். பஞ்சாயத்தார்களில் ஒருவர் கிராம தானம் செய்த ஸ்ரீ ராமகிருஷ்ண ரெட்டியார். மற்ற நால்வரும் கிராமத்து விவசாயிகள் — கப்பன், பொன்னன், முனிகிருஷ்ணன், திருவேங்கடம். இந்தக் கிராமவாசிகளிடம் விநோபா அடிகள் சுமார் ஒன்றேகால் மணி நேரம் பேசிக் கொண்டிருந்தார். அவர்கள் குடும்பத்தில் ஒருவராகத் தம்மைப் பாவித்து அவர்கள் கஷ்ட சுகங்களை அன்புடன் விசாரித்து யோசனைகள் கூறியதை வாழ்நாளில் மறக்க முடியாத சம்பவமாகும். எப்பொழுது நினைத்தாலும் உள்ளத்தில் இன்ப ஊற்று பெருகச் செய்யும் நிகழ்ச்சியாகும்.

வயலூர் சர்வோதய கிராமமான பிறகு எப்படி நிர்வகிக்கப்பட்டு வருகிறது என்பதை ஒரு அறிக்கையாக அச்சிட்டிருந்தார்கள். அதை விநோபா அடிகளிடம் கொடுத்தார்கள். அதைக் கூர்ந்து படித்து விட்டு, "இந்தக் கிராமத்தில் ஆண்களை விடப் பெண்கள் அதிகமாக இருக்கிறார்களே, ஏன்!" என்று கேட்டார்.

கிராமப் பஞ்சாயத்தார், "நான்கு ஆண்டுகளுக்கு முன்பு காலரா வந்ததில் ரொம்பப் பேர் இறந்து விட்டார்கள்!" என்றார்.

"ஆண்களுக்கு மட்டும் தான் காலரா வந்ததா என்ன!" என்றார் பாவே.

"இல்லை. இறந்தவர்களில் ஆண்கள்தான் அதிகம்" என்றார் கிராமத்தார்.

"பள்ளி வயதுப்பிள்ளைகள் ஆண்-14; பெண்கள்-24 என்றிருக்கிறது. இதிலும் பெண்கள்தான் அதிகம்!" என்றார்.

எல்லோரும் சிரித்தார்கள். பிறகு விநோபா, "தொத்து நோய்களை எதிர்க்கும் சக்தி ஆண்களைவிடப்பெண்களுக்கே அதிகம். அதனால் பெண்கள் பிழைத்து விடுகிறார்கள்" என்று கூறி விட்டு,



திரு ராமகிருஷ்ண ரெட்டியார்

"இந்தக் கிராமத்தில் நூல் நூற்பது உண்டா!" என்று கேட்டார்.

"உண்டு. பெண்கள்தான் அதிகமாக நூற்கிறார்கள்!" என்றார்கள்.

வினோபா, "நூற்பது பெண்கள்; உடுப்பது ஆண்கள். இதில் பெயரும் புகழும் கூட ஆண்களுக்குத்தான் கிடைக்கும்!" என்றார்.

அடுத்தாற்போல் "கிராமத்தில் எத்தனை எருதுகள் இருக்கின்றன!" என்று கேட்டார்.

"பதினாறு ஜோடிகள்; அவை தேவைக்குப் போதவில்லை" என்றார்கள்.

வினோபா விவசாயிகளை நிலத்தை உழ எருதுகளையே நம்பி யிருக்கக்கூடாது. மண் வெட்டியினால் கையினாலேயே நிலத்தை வெட்டிப் பயிர் செய்யும்படி கேட்டுக் கொண்டார். தாமே கையினால் கொத்திச் சாகுபடி செய்திருப்பதாகக் கூறினார். வேலை செய்வதில் நல்ல தேக பலமும் கிடைக்கும் என்றார்.

பசுமாடுகள் அக்கிராமத்தில் கிடையாது என்பதைக் கேட்டதும் வினோபா மிகுந்த ஏமாற்றமடைந்தார். "எருதுகள் இறந்து விட்டால், என்ன செய்வீர்கள்!" என்று கேட்டார். சரியான பதில் சொல்ல முடியாமல் கிராமவாசிகள் திணறினார்கள்.

"எருது வாங்குவதற்காகப் பணத்தை எடுத்துக்கொண்டு இன்னொரு கிராமத்துக்கு போகக் கூடாது. கிராமம் சுய தேவைப் பூர்த்தி செய்து கொள்ளக் கூடியதாக இருக்க வேண்டுமென்றால் கிராமத்தில் பசுக்களும் இருக்க வேண்டும். நீங்கள் குழந்தைகளுக்கு வெண்ணெய் கொடுக்க வேண்டும். உங்களுக்குப் பாகவதம் தெரியுமல்லவா! கண்ணனுக்கு வெண்ணெயின் மீது அளவு கடந்த ஆசை. உங்கள் கிராமமும் வெண்ணெயும் பாலும் நிரம்பிய கோகுலமாக விளங்க வேண்டும். உங்களுக்குப் பசுமாட்டை வளர்க்கத் தெரியுமா!" என்று கேட்டார் முடிவில்.

"தெரியும்!" என்றார்கள்.

"என்ன செய்வீர்கள்!"

"புல் போடணும், தண்ணீரில் குளிப்பாட்டணும், பிண்ணாக்கு வைக்கணும்" என்றார்கள்.

"பிண்ணாக்கு எங்கே கிடைக்கும்!"

"இங்கேயே கிடைக்கும். எங்கள் நிலங்களில் வேர்க்கடலை சாகுபடி செய்கிறோம். வேர்க்கடலைப் பிண்ணாக்கு கிடைக்கும்!"

"மாட்டு வண்டி யிருக்கா!"

"இல்லை."

"டவுனுக்குப் போவீர்களா!"

"ஓ! போவோம்!"

"எப்படி! பஸ்ஸிலா! நடந்தா!"

"காஞ்சீபுரம் போகணும்னா நடந்தேதான் போய் விடுவோம். பதினெட்டு மைல். விடியற்காலையில் மூன்று மணிக்குப் புறப்பட்டால் எட்டு மணிக்குப் போய் விடுவோம்!"

"இதற்குப் பஸ் சத்தம் எவ்வளவு!"

"எட்டணா!"

"ஆமாம், எட்டணா பஸ்ஸுக்குக் கொடுப்பதைவிட நடந்து போய் லட்டு அல்லது வேறு பண்டங்கள் வாங்கிச் சாப்பிடுங்கள்! நூறு மைல், ஐம்பது மைல் போக வேண்டுமென்றால் ரயிலில் போங்கள்" என்றார்.

ஒரு பஞ்சாயத்தார், "ஐம்பது மைல்கூட நடந்தே போய் விடுவோம்!" என்றார்.

காய்கறிகள் நிறையப் போட்டுச் சாப்பிட வேண்டுமென்றார் வினோபா. ஜப்பானில் பால் கிடையாது. அந்தக் குறையை ஜப்பான்காரர்கள் நிறையக் காய்கறிகள் சாப்பிட்டு நிவர்த்தி செய்து கொள்ளுகிறார்கள் என்றார்.

"கிராமத்தில் கடன் இருக்கிறதா!" என்றார்.

"ரூபாய் 1600 கடன் இருக்கிறது."

"கடன் கொடுத்தவர்கள் யார்!"

"பக்கத்துக் கிராமங்களிலுள்ளவர்கள். உறவினர்கள்!"

"வட்டி உண்டா!"

"உண்டு!"

"யார் அதிகமாக வட்டி வாங்குகிறார்கள்!"

"சொந்தக்காரர்கள்தான்."

வினோபாவுக்குச் சிரிப்பு வந்து விட்டது.

"கடன் வாங்கி எத்தனை நாள் இருக்கும்!"

"இருபது வருஷங்கள் இருக்கும்!"

"அசலுக்கு மேலேயே வட்டி கொடுபட்டிருக்குமே! பூதான ஊழியர்கள் கடன் கொடுத்தவர்களிடம் சென்று இக் கிராமவாசிகளைக் கடன் தொல்லையிலிருந்து விடுவிக்கும்படி கேட்டுக் கொள்ள வேண்டும்" என்று பூதான ஊழியர் திரு ஜகந்நாதனிடம் கூறினார்.

பிறகு கிராமப் பள்ளிக்கூடத்தைப் பற்றிப் பேச்சு வந்தது. பள்ளி ஆசிரியர் திரு மாணிக்கம் கிராமத்தில் ஒரு மணி நேரப் பள்ளிக்கூடத்துக்குக் கூட மாணவர்கள் வருவதில்லை, காலை எட்டு மணிக்கே வேலைக்குப் போய் விடுகிறார்கள் என்றார்.

"அதிகாலை ஆறு மணியிலிருந்து ஏழு மணி வரை பள்ளியை நடத்த வேண்டும்" என்றார்.

"அதிகாலையில் குழந்தைகள் எழுந்திருப்பதில்லையே!"

"தமிழில் பள்ளிக்கூடம் என்றால் படுத்துத் தூங்குமிடம் என்று கூடப் பொருள்படும். அதனால் குழந்தைகளை முதல்நாளிரவே பள்ளிக்கூடத்துக்கு அழைத்து வந்து படுக்க வைத்து விடியற்காலை ஒரு மணி நேரம் பாடம் சொல்லிக் கொடுத்து வீட்டுக்கு அனுப்பலாம். இன்றைய ஐந்து மணி நேரப் பள்ளிக்கூடங்களில் வாத்தியார், பிள்ளைகள் எல்லோரும் தூங்கி விடுகிறார்கள்!" என்றார் நகைச்சுவையோடு.

முதியோர் கல்வி பற்றிப் பேச்சு வந்தது. "மாலை நேரங்களில் கிராமப் பெரியோர்களுக்கு, ஆண்களுக்கும் பெண்களுக்கும், ராமாயணம், பாரதம், பெரிய புராணம், காந்தி மகான் சரித்திரம் முதலியன சொல்ல வேண்டும். அப்போதுதான் அவர்கள் ஆர்வத்தோடு வருவார்கள். இதற்கெல்லாம் "சக்கரவர்த்தித் திருமகன்," "வியாசர் விருந்து" முதலிய சுலபமாகப் படித்துக் கிராம மக்களும் புரிந்து கொள்ளக்கூடிய வசன நூல்களை இருக்கின்றனவே" என்றார்.

இப்படிப் பல நல்ல யோசனைகளைக் கிராமவாசிகளுக்கும், கிராமத்தில் வேலை செய்பவர்களுக்கும் அன்று வினோபா அடிகள் நகைச்சுவையுடனும் பொருட் செறிவுடனும் எல்லாவற்றுக்கும் மேலாக அன்போடும் சொல்லிக் கொண்டிருந்தார். அதைக் கேட்ட போது பாமர மக்களிடையே ஆண்டவனைத் தரிசிக்கும் மகான் இவர். இவரைப் பார்க்க நமக்குக் கொடுத்து வைத்தது என்ற உணர்ச்சியுடன் அன்று பிற்பகல் சென்னைக்குத் திரும்பினோம்.



விருதுநகர் இண்டஸ்டிரியல் ஒர்க்ஸ் அண்டு கோவில்பட்டி. ஜெனரல் மெட்டல் டிரேடிங் கம்பெனி கூட்டாளி V. A. A. லக்ஷ்மணநாடார் அவர்களின் புதல்வி சௌ. வசந்தா தேவிக்கும், விருதுநகர் பிரபல பஞ்சு வியாபாரி N. K. V. S. மாரியப்ப நாடார் அவர்களின் புதல்வர் சிரஞ்சீவி ரத்தினவேல் B. E. [ஜூனியர் இஞ்ஜினியர் T. L. C. கரூர்] அவர்களுக்கும் 10-6-56ல் திருமணம் விமரிசையாக நடந்தேறியது. ஏராளமான நண்பர்களும், உறவினர்களும் விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினர்கள். வாழ்த்துக்களும் அன்பளிப்புகளும் வந்து குவிந்தன. வாழ்க மணமக்கள்



அன்புள்ள சுப்பையாவுக்கு

நீ ஊரை விட்டுப் போனது முதல் உன் தாயார் உடல் நலம் குன்றி மிகவும் மோசமான நிலையில் உள்ளார். ஆகையால் இந்த விளம்பரத்தைப் பார்த்தவுடன் நீ புறப்பட்டு வரா விட்டால் உன் தாயாரையும் அக்காவையும் காண முடியாது. உன் விலாசம் எழுதினுல் பணம் அனுப்பி வைக்கிறேன். நீ போனதைப் பற்றி நாங்கள் உன்னைக் கோபிக்கவில்லை.

இப்படிக்கு

பா. பிச்சைப் பிள்ளை

பாலரெங்காநாதபுரம், பசுமலை போஸ்ட்

மதுரை ஜில்லா

குறிப்பு:—இந்தப் படத்தில் கண்டவரைப் பார்த்தவர்கள் தயவுசெய்து மேலேகண்ட விலாசத்திற்குத் தகவல் கொடுத்தால் மிகவும் உதவியாக இருக்கும்.



# காலணாப் பேட்டி

விடாக்கண்டர்

ஒரு புதுக் காலணாவை எடுத்துச் சுண்டிக் கொண்டே நிதி மந்திரி ஸ்ரீ தேசமுக் முன்னால் போய் நின்றேன்.

"ஓ! நயா பைசா!" என்றார் தேசமுக்.

"இல்லை பழைய பைசாதான்; பார்ப்பதற்குத்தான் நயா பைசா!" என்றேன்.

"ஓஹோ! நயா பைசா எப்படி?" என்று கேட்டார் தேசமுக்.

"உங்கள் புதிய நயா பைசாக் கணக்கு ஒரு புரியாத குழப்பக்கணக்காயிருக்கிறது."

"அதற்கு என்ன செய்யச் சொல்கிறீர்?"

"ராஜாஜியின் யோசனைப்படி ரூபாய்க்கு 100 காலணாக்கள். ரூபாய்க்கு 25 அணா. இப்போதுள்ள நாணயங்கள் எதையுமே மாற்ற வேண்டாம். ஒரு காலணா என்பது ஒரு நயா பைசா. எந்தக் குழப்பமும் இல்லை. ராஜாஜி கணக்குக்கும் உங்கள் கணக்குக்கும் உள்ள சின்ன வித்தியாசம் இதுதான்."

"என்ன அது?"

"நீங்கள் மேலேயிருந்து கீழே வரவேண்டும் என்கிறீர்கள். அவர் கீழேயிருந்து மேலே போக வேண்டும் என்கிறார். எப்போதும் கீழேயிருந்து மேலுக்குப் போவதுதானே சரியான வழி?" என்றேன்.



"ராஜாஜி கணக்குப்படி செய்தால் சர்க்காருக்குப் பல கஷ்டங்கள் ஏற்படுமே என்று யோசிக்கிறேன்" என்றார் நிதி மந்திரி தேசமுக்.

"சர்க்கார் கஷ்டப்படலாம். ஜனங்கள் கஷ்டப்படக் கூடாதல்லவா? ஜனங்களுக்காகத் தானே சர்க்கார் இருக்கிறது?" என்றேன்.

"விடாக்கண்டரே! நீர் சரியான பேர்வழி!" என்று கூறிக் கொண்டே கீழே விழுந்த காலணாவைக் குனிந்து பார்த்தார் நிதிமந்திரி. அதில் பூ இருந்தது.

"அப்படியானால் விட்டு விடுவீர்கள் போலிருக்கிறதே" என்றேன்.

"எதைச் சொல்லுகிறாய்? பம்பாயைத் தானே? ஒரு போதும் விட மாட்டேன். அது மகாராஷ்டிரர்களின் பிறப்புரிமை" என்றார் நிதி மந்திரி.

"பம்பாயைச் சொல்லவில்லை; அதை நீங்கள் ஒருநாளும் விட மாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும்; நிதிமந்திரிப் பதவியைச் சொல்கிறேன்" என்றேன்.

"ஓஹோ! அதை விட்டு விடத்தான் போகிறேன். நேருஜி மேல் நாட்டிலிருந்து திரும்பியதும் நான் என் பதவியை ராஜிநாமா செய்து விடப் போகிறேன்."

"ஒன்று, இரண்டு, மூன்று!" என்று விரல்களை மடக்கினேன்.

"என்ன எண்ணுகிறாய்?"

"சுதந்திர சர்க்காரின் நிதிமந்திரிப் பதவியிலிருந்து ஏற்கனவே ஜான் மத்தாய், ஷண்முகம் செட்டியார் ஆகிய இரண்டு பேரும் விலகி விட்டார்கள். இப்போது தாங்கள் மூன்றாவது மந்திரி! நாலாவது மந்திரிப் பதவியை யார் வகிக்கப்போகிறார்களோ? நான் போகட்டுமா?"

"எங்கே போகிறீர்? நிதிமந்திரிப் பதவி வகிக்கவா?" என்று விசாரித்தார் தேசமுக்.

"இல்லை; அந்தத் தலைவலிப் பதவி எனக்கு வேண்டவே வேண்டாம். நான் என் சொந்தக் காரியமாக அவசரமாக டில்லிக்குப் போகிறேன்" என்றேன்.

புது டில்லி பிளாட்பாரத்தில் ஒரே கூட்டமாக இருந்தது. பாலம் விமான நிலையத்தில் அதை விடக் கூட்டமாயிருந்தது.

பாலம் விமான கூடத்தில் நமது பிரதமர் நேருஜியை லண்டனுக்கு வழி அனுப்புவதற்காக ஜனாதிபதி ராஜன்பாபு, உள்நாட்டு மந்திரி வல்லப பந்த், இதர மந்திரிகள், எம். பி.க்கள், வெளிநாட்டு ஸ்தானீகராலய அதிகாரிகள் எல்லோரும் கூட்டமாக வந்திருந்தார்கள். நேருஜியைப் பேட்டி காணச் சென்றிருந்த நமது என். ஜி. ஓ.க்கள் சென்னைக்குத் திரும்புவதற்காகப் புதுடில்லி ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் கூட்டமாகக் காத்திருந்தார்கள்.

பாலம் விமான நிலையத்திலிருந்தவர்கள் அனைவரும் ஆகாசத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இங்கே பிளாட்பாரத்தில் இருந்த என். ஜி. ஓ.க்கள் தலையைக் குனிந்த வண்ணம் தரையைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

என்னைக் கண்ட என். ஜி. ஓ. தோழர்கள் "பார்த்தீர்களா!" என்று பதறினார்கள்.

"நேருஜியைத்தானே! இப்போதுதான் பார்த்தேன். லண்டனுக்குப் போய்க் கொண்டிருக்கிறார். முதலில் உங்களைப் பார்த்து விட்டுப் போகலாமென்றுதான் வந்தேன்" என்றேன்.

"அதைச் சொல்லவில்லை ஐயா! நேருஜி செய்ததைப் பார்த்தீர்களா என்றுதான் கேட்டோம். எங்களுக்குப் பேட்டி அளிக்க மறுத்துவிட்டார்!" என்றார் என் ஜி. ஓ. சங்கத் தலைவர்.

"இதில் பார்ப்பதற்கு என்ன இருக்கிறது? எதிர்பார்த்ததுதானே!"

"விடாக்கண்டரே! உமக்கு நேருஜியின் பேட்டி நினைத்த நேரமெல்லாம் கிடைக்கிறது என்கிற கர்வமோ!" என்றார் ஒரு என். ஜி. ஓ.

"நான் காரணமின்றி அவரைப் பேட்டி காண வருவதில்லை. சந்தர்ப்பம் சரியில்லாத போதும் பார்ப்பதில்லை" என்று சொன்னேன்.

"அப்படியானால் நாங்கள் வந்த காரணம்......"

"காரணம், நேரம் இரண்டுமே சரியில்லை" என்றேன்.

"அது எப்படி?"

"சென்னை ராஜ்ய சர்க்கார் செய்ய வேண்டிய காரியத்தை மத்திய சர்க்காரிடம் வந்து கேட்டு என்ன பயன்?" என்றேன்.

"எங்கள் சம்பளமும், அலவன்ஸும் மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்குக் கொடுப்பதைப் போலவே உயர்த்தப்பட வேண்டும் என்பதை நேருஜியிடம் எடுத்துச் சொல்லவே வந்தோம்!"

"நீங்கள் சின்னக் குழந்தைகள்......!"

"நாங்களா சின்னக் குழந்தைகள்...?"

"இல்லை; இல்லை. உதாரணத்துக்குச் சொல்கிறேன். விஷயத்தைக் கேளுங்கள். நீங்கள் சின்னக் குழந்தைகள்மாதிரி. தாய்ப் பாலைக் குடித்து வளர வேண்டிய குழந்தைகள் தாயார் தங்களுக்குப் பால்கொடுக்கவில்லையென்றால் அதைத் தகப்பனாரிடம் போய்ச் சொல்லி என்ன செய்வது...? இது மாதிரி தான் இருக்கிறது. நீங்கள் நேருஜியிடம் முறையிட வந்ததும்..." என்றேன்.

"அது எங்களுக்கும் தெரிந்த விஷயம்தான்" என்று என். ஜி. ஓ.க்கள் என்னை விறைப்பாகப் பார்த்தார்கள். நான் அடுத்த கணம் அந்த இடத்திலிருந்து அவர்கள் கண்ணில் படாமல் மறைந்து விட்டேன்.

ருஷ்யத் தலைவர் குருஷ்சேவ், அமெரிக்க ஜனாதிபதி ஐஸன்ஹவர், பிரிட்டிஷ் பிரதமர் ஈடன் மூவருக்கும் தனித்தனியாக டில்லி ராஜபவனத்திலிருந்து டிரங்க் டெலிபோன் செய்தேன்.

ஒவ்வொருவரும், "நாங்கள் பரீட்சையில் பாஸ் செய்து விட்டோம். வெற்றி! வெற்றி!" என்று பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள்போல் பதில் கூறினார்கள்.

"இல்லை; தோல்வி! தோல்வி! படுதோல்வி!" என்றேன் நான்.

மூப்பெரும் தலைவர்களும் தங்கள் பரீட்சையில் வெற்றி பெற்றதாகப் பெருமையடித்துக் கொண்டது வேறு எதைப் பற்றியும் அல்ல! அவரவர்கள் விடாமல் நடத்தி வரும் அணுகுண்டு ஹைட்ரஜன் குண்டு பரீட்சைகளைப் பற்றியேதான்!

"எப்படித்தோல்வி?" என்று கேட்டார் ஐஸன் ஹவர்.

"அணுகுண்டும் ஹைட்ரஜன் குண்டும் வெற்றி பெற்றால் அது உலக மக்களின் தோல்வியே அல்லவா? இந்தச் சின்ன விஷயம், தெளிவான விஷயம், அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்கும் பிரிட்டனுக்கும் தெரியாமல் இருப்பது அதைவிடப் பெரும் தோல்வியே அல்லவா!" என்றேன்.

"விடாக்கண்டரே! அதிருக்கட்டும், நேருஜி வாஷிங்டனுக்குப் புறப்பட்டு விட்டாரா?" என்று கேட்டார் அமெரிக்க பிரஸிடெண்ட் ஐஸன் ஹவர்.

"அவர் இப்போது லண்டனில் இருக்கிறார். நான் டில்லியில் இருக்கிறேன். இன்னும் சில தினங்களில் நேருஜி வாஷிங்டனில் இருப்பார். நேருஜியும் தாங்களும் சந்திக்கும் போது உலகத்தின் கவனம் முழுதும் உங்கள் இருவரிடமும் இருக்கும். நானும் அப்போது அங்கே உங்கள் மத்தியில் இருப்பேன்" என்றேன்.

"விடாக்கண்டரே! நீரும் நேருஜியுடனேயே சேர்ந்து வருவதற்கென்ன?" என்று கேட்டார் ஐஸன் ஹவர்.

"ஏற்கனவே நேருஜி செல்லும் மார்க்கங்களிலெல்லாம், சைப்ரஸ் கொந்தளிப்பு, காமன்வெல்த் குளறுபடி, அல்ஜீரியா நெருக்கடி எல்லாம் இருக்கின்றன. ஆகவே நானும் நேருஜியுடன் வந்து குட்டை குழப்ப வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன். அத்துடன் நேருஜி இல்லாத சமயத்தில் இந்தியாவைக் கவனித்துக் கொள்வதற்கும் ஒருவர் வேண்டுமல்லவா?" என்றேன்.

"வெரி குட்!" என்றார் பிரஸிடெண்ட்.

"வெரி வெரி குட்!" என்றேன் நான்.

# வேதாவின் தலைவன்





மைதிலி

மணி மூன்று அடித்தது. பத்து நிமிஷங்களாக வாசல் அருகே இருந்த ஜன்னலில் அமர்ந்தவாறு ரஸ்தாவைப் பார்த்துக் கொண்டிருந்த வேதா, பொறுமை யற்றவளாய்க் கடிகாரத்தைத் திரும்பிப் பார்த்தாள். மறுபடியும் கண்களை ரஸ்தாவில் திருப்பினாள். அவளுடைய ஆவலைத் தணிப்பது போல் ஒரு டாக்ஸி அதிவேகமாக வேதாவின் வீட்டைக் கடந்து, நாலைந்து வீடுகளுக்கப்பால் ஒரு வீட்டின் முன் சென்று நின்றது. வேதா அதிவிரைவாக வாசற்புறத்துக்கு வந்தாள். அருகில் இருந்த தூணில் சாய்ந்தவாறு காரில் இருந்து இறங்கியவர்களைக் கவனித்தாள். டாக்ஸி நின்றவுடன், அவ் வீட்டிலிருந்தும் இருவர் வந்தவர்களை வரவேற்றவாறு வாசற்புறம் வந்தனர். பின்புறக் கதவைத் திறந்து கொண்டு ஒரு வயதான சுமங்கலி முதலில் இறங்கினாள். அவளைப் பின் தொடர்ந்து சுமார் பதினைந்து வயது மதிக்கத் தகுந்த ஒரு யுவதி இறங்கினாள். அவள் அந்த அம்மாளின் பெண்ணாக இருக்கும் என்று வேதா ஊகித்தாள். இதற்குள் முன் பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு, நாகரிகமான உடையுடன் வேதா எதிர்பார்த்த வாலிபனும் இறங்கினான். இதற்குள் காரிலிருந்து இறங்கிய அவர்கள் உள்ளே சென்று விட்டனர். அதைத் தொடர்ந்து அவ் வீட்டில் நடைபெறப்போகும் அரை மணி நேர நாடகத்தை நினைத்ததும் முன் தினம் நடந்த சம்பாஷணையை நோக்கி வேதாவின் மனம் தாவியது.

அன்று காலையிலிருந்து சுமதியை வேதா பார்க்கவே யில்லை. மனசும் வேதாவுக்குச் சரியில்லை. சுமதியுடனாவது சிறிது நேரம் பேசிவிட்டு வரலாம் என்று வேதா மாலை அங்கு வந்தாள். அவள் அறையில் அமர்ந்து ஏதோ சுமதியுடன் பேசிக் கொண்டிருந்தாள். அச்சமயத்தில் "என்ன, சுமதி!" என்று கூவியவாறு குதூகலத்துடன் உள்ளே நுழைந்தான் கண்ணன். அதைத் தொடர்ந்து, "சுமதி! உனக்கு ஒரு செய்தி சொல்லப் போகிறேன்! அது என்ன சொல் பார்க்கலாம்!" என்றான்.

அப்பொழுதுதான் நினைவு வந்தவள்போல், "அடாடா! இன்று என்னைச் சினிமாவுக்கு அழைத்துப் போவதாகச் சொன்னாயல்லவா! அதை நான் மறந்தே விட்டேன். கிளம்பலாமல்லவா!" என்று கூறி எழுந்தாள்.

"இல்லையம்மா, இல்லை! எனது அருமைத் தங்கையைப் பார்க்கக் கோட்டையூரிலிருந்து பிள்ளை வீட்டார் நாளை மத்தியானம் மூன்று மணிக்கு இங்கு வருகிறார்கள். அதற்குள் நாம் தயாராய் இருக்க வேண்டும்! இதுதான் விஷயம்!" என்று குறும்புடன் சிரித்தவாறு கூறி விட்டுக் கண்ணன் வெளியே சென்று விட்டான்.

எதிர்பாராத இவ்விஷயத்தைக் கேட்டதும் சுமதியின் முகத்தில் செம்மை படர்ந்தது.

அச்சமயத்தில் அங்கு வந்த சுமதியின் தாயார், "நாளைக்கு நம்ம சுமதியைப் பெண் பார்க்க வரப் போகிறார்கள். நீயும் வா. உன் சிநேகிதியின் அகத்துக்காரரை நீ பார்க்க வேண்டாமா!" என்றாள் வேதாவிடம்.

"சரி, மாமி! நான் போய் வருகிறேன்!" என்று கூறி வேதா கிளம்பி விட்டாள்.

உண்மையில் சுமதியைப் பார்க்கப் பிள்ளை வீட்டார்கள் வரும் சமயத்தில் சுமதியின் வீட்டுக்குச் செல்ல அவளுக்கு விருப்பமில்லை. ஆகவே அவர்களைத் தன் வீட்டிலிருந்தே பார்த்து விட்டு உள்ளே சென்றாள்.

*

சுமதியும் வேதாவும் ஏறக்குறைய ஒரே வயதினர். இணை பிரியாத் தோழிகள். ஒரே தெருவில் அவர்களுடைய வீடுகள் இருந்ததால் அவர்களுக்கு இடையே இருந்த அன்பு அதிகரிக்கப் பல சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. சுமதியும் பெற்றோர்களுக்கு ஒரே பெண். வேதாவும் பெற்றோர்களின் செல்லப் பெண்ணாக வளர்ந்தாள். சுமதிக்கு ஒரே ஒரு அண்ணா; அவன் தான் கண்ணன். வேதாவுக்கும் ஓர் அண்ணா இருந்தான்; பெயர் ஆனந்தன். எவ்வளவுக் கெவ்வளவு கண்ணன் தன் தங்கை சுமதியிடம் அன்பாக - உயிராக நடந்து கொண்டானோ அவ்வளவுக்கும் எதிராக வேதாவுக்கும் ஆனந்தனுக்கும் இடையே அதிக இடைவெளி இருந்ததை வேதா உணர்ந்தாள். பெயர்தான் ஆனந்தனே தவிர அவனுடைய சுபாவமே விசித்திரமாக இருந்தது. தான் உண்டு, தன் வேலை உண்டு என்று இருப்பான். ஒருவருடனும் அதிகமாகப் பேச மாட்டான். அதற்கேற்றாற்போல் அவனுக்கு உத்தியோகமும் கிடைத்தது அதிசயந்தான். ரயில்வேயில் ஒரு பெரிய துரையின் கீழ் வெளியூர்செல்லும் குமாஸ்தாவாக இருந்தான். மாதத்தில் குறைந்தது இருபத்தைந்து நாட்கள் வெளியூருக்குக் கிளம்பி விடுவான்.

அந்த வருடம் வேதா எஸ். எஸ். எல். ஸி. தேறி யிருந்தாள். அதே வருடத்தில் வேதாவின் கல்யாணத்தையும் முடித்துவிட வேண்டுமென்று அவளுடைய தந்தையும் முனைந்து வரன் தேட ஆரம்பித்தார். பல வரன்கள் வந்தன. ஒன்றாவது சரியாகக் குதிரவில்லை.

ஆனால் அதற்கு முற்றுப்புள்ளி வைத்தாற் போல் எதிர்பாராத விதமாக அவள் தந்தை திடீரென்று மாரடைப்பால் காலமானார்.

★

**உ**ள்ளே வந்த வேதா நேரே தன் அறைக்குச் சென்று அமர்ந்தாள். திரும்பவும் பழைய பல்லவியை உள்ளம் பாட ஆரம்பித்துவிட்டது. சுமதிக்கு விவாகம் நிச்சயமாகிவிட்டால்......!

இதற்குள் உள்ளே அண்ணா ஆனந்தனும் அவன் தாயாரும் பேசும் சம்பாஷணை அவள் கவனத்தைக் கவர்ந்தது.

"ஏண்டா, ஆனந்தா! இன்றைக்குக் கூடச் சுமதியைப் பார்க்கக் கோட்டையூரிலிருந்து யாரோ வருகிறார்களாமே!"

"வந்தால் வரட்டுமே! ஊர் விசாரமெல்லாம் நமக்கு எதற்கு!"

"அதற்குச் சொல்லவில்லை, அப்பா! நம்ப வேதாவுக்கும் எங்கேயாவது வரன் பார்க்க வேண்டாமோ!"

"பார்த்தால் போகிறது!"

'அடே, அப்பா! என்ன அலட்சியம்!' என்று வேதாவுக்குத் தோன்றியது.



"நாம் பத்து இடத்தில் கல் விட்டெறிந்தால் ஒரு இடத்திலாவது பதில் கிடைக்காதா!"

"அம்மா! கல் விட்டெறிந்தால், வீணாக மண்டைதான் உடையும்!"

"இல்லேடா! நீ உனக்குத் தெரிந்த பத்துப் பேர்களிடம் சொன்னால் அவர்கள் தங்களுக்குத் தெரிந்ததைச் சொல்லுவார்கள். பிறகு கடவுள் விட்ட வழி!"

"அதையேதான் நானும் சொல்லுகிறேன். ஆண்டவன் அருள் எப்பொழுது கூடுகிறதோ அப்பொழுதுதான் நம் வேதாவுக்கு விவாகமும் நடைபெறும். நாம் ஏன் வீணாக அலைய வேண்டும்!"

"நன்றாயிருக்கிறதடா, நீ சொல்றது! நாம் கையைக் கட்டிக்கொண்டு சும்மா உட்கார்ந்திருந்தால் காரியம் தானே ஆகிவிடுமா!"

"பின்னே, என்னம்மா! கையிலே பணம் இல்லாமல் கலியாணம், கலியாணம் என்றால் என்ன செய்வது! நான் ஒருவரிடமும் கை நீட்டிக் காசு வாங்க மாட்டேன். ஏதாவது பணம் கிடைத்தால்தான் நான் வேதாவுக்கு விவாகம் செய்வேன்" என்றான் ஆனந்தன்.

இதைக் கேட்ட வேதாவின் உள்ளம் சுக்கல் சுக்கலாக உடைந்தது. கண்களில் நீர் தளும்பியது. உதட்டைக் கடித்துக் கொண்டாள். சூடான கண்ணீர் கன்னங்களை நனைத்தது. 'ஓர் இளம் மனத்தின் ஆசைக் கனவுகளை, இன்பக் கோட்டைகளை உடைத்தெறிகிறாயே, உனக்குத் துளியாவது ஈவு, இரக்கம் இருக்கிறதா! அட, கல் நெஞ்சமே!' என்று வேதா ஒரு வசை புராணம் பாடி முடித்தாள்.

மாலை ஆறு மணிக்கு ஆனந்தன் தன் பெட்டி படுக்கைகளுடன் கிளம்பினான்.

"அம்மா! நான் திரும்பி வர இருபது நாட்களாகும். அதற்கு மேலும் ஆகலாம். நான் போன காரியம் முடிந்த பிறகுதான் வருவேன். அதுவரையில் ஜாக்கிரதையாக இரு!" என்று கூறி ஆனந்தன் கிளம்பி விட்டான்.

★

**ஆ**னந்தன் வெளியூர் சென்று இருபது தினங்களுக்கு மேல் ஆகிவிட்டன.

அன்று நன்றாக அலங்கரித்துக் கொண்டு சுமதி வேதாவை அழைக்க வந்திருந்தாள்.

"என்ன வேதா! டீ பார்ட்டி ஐந்து மணிக்கு. மணி நாலே முக்கால் ஆகி விட்டது. நீ 'டிரஸ்' செய்து கொள்ளவில்லையே!" என்றாள்.

"என்ன சுமதி பிரமாதம்! ஒரு நிமிடத்தில் கிளம்பி விடுவேன்!" என்று கூறி அவளை ஒரு நாற்காலியில் அமர்த்தி, தானும் அருகே அமர்ந்தாள். சுமதி நல்ல ஆடைகளுடனும், நல்ல ஆபரணங்கள் அணிந்தும் இருந்த பொழுதிலும், அவளிடம் முன்பு காணப்பட்ட குதூகலம் இல்லை. மகிழ்ச்சிக் கிடையேயும் முகத்தில் வருத்தம் நிரம்பி இருப்பதை வேதா கவனித்து விட்டாள். அதனால் மெதுவாகச் சுமதியிடம், "சுமதி! நாம் எதிர்பார்ப்பது ஒன்று; நடப்பது வேறாக இருக்கிறது என்பது எவ்வளவு உண்மை. நாம் எதிர்பார்த்தது இந்த வருடம் உன் வீட்டில் உன் விவாகத்தை. ஆனால் நடந்தது உன் அண்ணாவின் கலியாணம். உன்னுடைய மன்னியின் நடை, உடை, பாவனையைப் பார்த்தால், எனக்கு என்னவோ அவளுடன் பழகுவதே கடினம் என்று தோன்றுகிறது. அதுவும் தவிர, உன்னுடைய கலியாணத்துக்கு என்று தேடிக் கொண்டு இருக்கும் பொழுது, உன் கலியாணத்தை முடிக்காமல், எப்படித்தான் உன் அருமை அண்ணா தான் கலியாணம் செய்து கொள்ளச் சம்மதித்தாரோ, எனக்கு அதை நினைத்தால் ஆச்சரியமாக இருக்கிறது" என்று கூறி வேதா நிறுத்தினாள்.

"வேதா! அண்ணாவுக்கு விவாக வேளை வந்து விட்டது. இல்லாவிட்டால் எவ்வளவோ வரன்கள் பார்த்தும், ஏன் ஒன்றும் எனக்குச் சரியாக அமையவில்லை!...... கோட்டையூரிலிருந்து என்னைப் பெண் பார்க்க வந்தனர். என் கலியாணம் நடைபெறாவிட்டாலும் அதே வேளையில் அவர்களுடைய பெண்ணை அண்ணா

வுக்குப் பிடித்தது. எங்களுக்கும் அவர்களைப் பிடித்தது. விவாகமும் முடிந்து விட்டது. என்னைப் பொறுத்தவரையில் கண்ணன் என்றுமே மாறமாட்டான் என்று இறுமாந்திருந்தேன். ஆனால் அது தவறு என்பதை இந்தக் குறுகிய காலத்துக்குள் எவ்வளவோ சம்பவங்கள் எனக்குத் தெரியப்படுத்தி விட்டன. அண்ணாவும் மன்னியும் சந்தோஷமாக இருப்பதைப் பார்க்க எனக்குச் சந்தோஷம்தான். ஆனால் என்னைக் கண்டால் ஏன் அண்ணா தூர விலக வேண்டும்! அதை நினைத்தால் எனக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது!'' என்று கூறிச் சுமதி கண்ணீர் விடத் தொடங்கி விட்டாள்.

சுமதியின் கண்ணீரைப் பார்த்ததும், வேதாவுக்கு ரொம்பப் பரிதாபமாக இருந்தது. அவள் கண்ணீரைத் துடைத்தவாறு, ''சுமதி, என்ன இது அழுகை! இதுதான் உலகம். விவாகம் என்பது ஒவ்வொருவருடைய வாழ்க்கைக்கும் ஒரு திருப்பம் அம்மா! நேற்று வரையில் கண்ணன் பிரம்மச்சாரி; அதனால் அவன் உள்ளத்தில் அன்புப் பிரவாகம் உன்னிடம் சென்றது. இன்றோ விவாகமானவன். அவன் ராதாவின் கணவன்; நேற்று வரை உன் பக்கம் சென்ற அந்த அன்புப் பிரவாகத்துக்கு உரியவள் வந்து விட்டாள். நீ இதை அறிந்து கொண்டு, நாசூக்காகத் தூர விலகி விட்டால், உனக்கும் சௌகரியம்; அவர்களுக்கும் குதூகலம் ஏற்படும்'' என்று கூறி வேதா வறட்சியாகச் சிரித்தாள்.

★

அன்று மாலை ஐந்து மணிக்கு ஆனந்தன் வரப்போகிறான் என்ற கடிதத்தைப்பார்த்ததும், வேதாவின் உள்ளம் ஆனந்தத்தால் மலர்ந்தது. என்னதான் ஆனந்தன் அவளை விட்டு விலகியே இருந்தாலும் அவளால் அதுபோல் இருக்க முடியவில்லையே! அவனிடம் ஒரு மரியாதையும் பயமும் தானாகவே உண்டாகி இருந்தன. ஐந்து மணிக்குப் பிறகு தன் பெட்டி படுக்கைகளுடன் உள்ளே வந்த ஆனந்தனைப் பார்க்க வேதாவுக்குப் பாவமாக இருந்தது. ஒரே அலைச்சல் போலிருக்கிறதே, உடம்பு இளைத்து உருமாறி விட்டானே! அவன் முகத்தைப்பார்த்தாள். கண் இடுங்கி இருந்தது. ரயிலில் ராத்தூக்கம் இல்லையோ என்னவோ!

நேரம் மெல்லச் சென்றது. அந்தியும் இரவும் ஒன்று கூட ஆரம்பித்தது. வேதா தன் அறையை விட்டு வெளியே வந்தாள்.

''வேதா! இங்கு வா!'' என்ற அண்ணனின் கட்டளைக்குப் பணிந்து, பயந்தவாறு அவனைப் பின் தொடர்ந்தாள்.

''வேதா! இதைப் பார். உனக்குப் பிடித்திருக்கிறதா, சொல்!'' என்று கூறி ஒரு போட்டோவைக் காண்பித்தான்.

அது ஓர் அழகிய இளம் வாலிபனின் போட்டோ. முகத்தில் கண்யமும், கம்பீரமும், இளமையும் ஒருங்கே நிறைந்திருந்தன. போட்டோவைப் பார்த்த வேதாவுக்கு அதிலிருந்து கண்களை அகற்ற முடியவில்லை.

''என்ன வேதா! பதில் சொல்லவில்லையே! சம்மதமா! உன் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்டால் தான் மேலே விஷயத்தைச் சொல்ல முடியும்!'' என்றான் அவன்.

வேதா சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். அவளுக்கு வாயைத் திறந்து சொல்ல வெட்கமாக இருந்தது. ஆனந்தன் விடாப்பிடியாகக் கேட்கவே, ''அண்ணா! உனக்கும் அம்மாவுக்கும் பிடித்திருந்தால் எனக்கும் சம்மதம்!'' என்று நாணத்துடன் கூறினாள்.

''வேதா! உனக்கு நிச்சயித்திருக்கும் பையன்தானம்மா இவர். மதுரையில் நல்ல கம்பெனி ஒன்றில் மாதம் இருநூற்றைம்பது ரூபாய்க்கு மேலே சம்பாதிக்கிறான். இங்கிருந்து 'காம்ப்' கிளம்புவதற்கு முன்பே ஒரு நண்பர் மூலம் எனக்கு இந்தப் பையனுடைய ஜாதகம் கிடைத்தது. இதையும் உன் ஜாதகத்தையும் சேர்த்துப் பார்த்ததில் ஜாதகப் பொருத்தம் நன்றாக அமைந்திருக்கிறது என்று தெரிந்தது. மதுரையில் எனக்கு ஒரு வாரம்தான் ஆபீஸ் வேலை இருந்தது. என் சொந்த லீவில்தான் இத்தனை நாள் அங்கு இருந்தேன். பையனை முதல் பார்வையிலேயே எனக்குப் பிடித்துவிட்டது. பார்க்க அழகாக இருந்தான். ஆனால் வெளித் தோற்றத்தைக் கண்டு மயங்கி விடக்கூடாது என்பதற்காக அவனுடன் கூட நெருங்கிப் பழகினேன். அவனுடைய பழக்க வழக்கங்கள் எனக்கு ரொம்பப் பிடித்திருந்தன. பையனும் என்னிடம் ரொம்பச் சிநேகமாகிவிட்டான். இந்த மாதிரி சமயத்தில் ஒரு நாள் உன் போட்டோவை அவனிடம் காட்டி என் அபிப்பிராயத்தைக் கூறினேன். உன்னைப் பற்றியும் சொன்னேன். போட்டோவைப் பார்த்ததுமே பையன் உன் அழகில் மயங்கி விட்டான். அவனுக்கு அப்பா, அம்மா இருவருமில்லை. பந்துக்களும் இருப்பவர்களும் தூர உறவினர்களே. பையனும் 'சரி' என்று தன் சம்மதத்தை உடனே தெரிவித்து விட்டான். பையனின் பெயர் மூர்த்தி. முகூர்த்தமும் இன்றைக்குப் பதினைந்தாம் நாள் வெள்ளிக்கிழமை வைத்து விட்டேன்!'' என்றான் ஆனந்தன்.



வேதாவுக்கு விஷயத்தைக் கேட்கக்கேட்க, ஆச்சரியம் அதிகரித்துக் கொண்டே வந்தது.



"பொது விஷயங்களை விவாதிக்கும் சங்கத்"தின் சார்பில் சென்ற ஜூன் மாதம் 15-ம் தேதி சென்னை மயிலாப்பூரில் "துவேஷ வளர்ப்பு" என்னும் பொருள் பற்றி ராஜாஜி பேசினார். ஸ்ரீமான் நாராயணசாமி ராஜாஜிக்கும் சபையோர்களுக்கும் நல்வரவு கூறினார்.

---

"அண்ணா! இவர் வரதட்சிணை என்ன கேட்பாரோ......!"

"அதைப்பற்றி உனக்கு என்ன கவலை! மூர்த்தியை உனக்கும் பிடித்திருக்கிறது. உன் வாழ்வு, உன் எதிர்காலம் மூர்த்தியுடன் இன்பமாகச் செல்லும் என்று எனக்குத் தோன்றியது. மூர்த்தி உன் போட்டோவைப் பார்த்துச் 'சரி' என்று சொன்னதும், அடுத்தபடியாக என் மனத்திலும் இந்தக் கேள்விதான் எழுந்தது. நம் குடும்ப நிலைமையைப் பற்றிக் கூறி, வரதட்சிணையைப் பற்றியும் அவனிடம் கேட்டேன். அதற்கு அவன், 'ஆனந்தன்! எனக்கு வரதட்சிணை வாங்கும் உத்தேசம் என்றுமே கிடையாது. என் கையில் நீங்கள் காலணாக் கூடக் கொடுக்க வேண்டாம். அப்புறம் உங்கள் தங்கைக்குச் செய்வது உங்களுடைய விருப்பம்!' என்றான். உடனே முகூர்த்தத்தை நிச்சயம் செய்து விட்டேன். பணத்துக்கும் ஏற்கனவே ஏற்பாடு செய்தாகி விட்டது. கிராமத்தில் இருந்த நம்முடைய நிலத்தை விற்றேன். எல்லாம் இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் கிடைத்தது. நான் என் சம்பளத்தில் மாதா மாதம் கொஞ்சம் பாங்கில் போட்டுக் கொண்டே வருகிறேன். அதில் ரூபாய் ஆயிரத்து ஐந்நூறு இருக்கிறது. எல்லாம் போட்டுச் செய்துவிடுவேன்" என்றான்.

"என்ன! நிலத்தை விற்று விட்டாயா! உனக்கு என்று பூர்வீகமாக இருந்த அந்த ஒன்றையும் விற்று விட்டாயா!"

வேதாவுக்கு அண்ணாவின் உள்ளத்தை அறிந்ததும் கண்களில் நீர் முட்டியது.

"உன்னுடைய சந்தோஷத்துக்கு உபயோகப்படுத்தாமல், அதை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்! என்னை ஒரு சுயநலக்காரன் என்று தீர்மானித்து விட்டாயா, வேதா!" என்று கேட்டான்.

அண்ணாவின் இந்தக் கேள்வி வேதாவின் மனத்தை உறுத்தியது. அதனால் வேறு விதமாகப் பேச்சைத் திருப்ப முயன்றாள். உடனே, "அண்ணா, நான் ஒன்று கேட்கிறேன், பதில் சொல்லுவாயா!" என்றாள்.

"தாராளமாகக் கேள்! எது வேண்டுமானாலும் கேள். என்னால் முடிந்தால் கண்டிப்பாகச் சொல்கிறேன்!"

"முதலில் நீ கல்யாணம் செய்து கொள், எனக்கு ஒரு மன்னி வரட்டும். அவளுடன் நான் சிறிது நாள் சேர்ந்து இருக்கிறேன். பிறகு என் விவாகம் நடக்கட்டுமே!" என்று வேதா சிறு குழந்தை போல் கேட்டாள்.

"ஐயோ, வேதா! அது நடக்காது அம்மா! நீ விவாகம் செய்து கொண்டு எவ்வளவு தினங்கள் வேண்டுமென்றாலும், உன் கணவருடன் இங்கு இரு. அதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. ஆனால் விவாகம் செய்யாமல் இனிமேல் வைத்துக் கொள்ள மாட்டேன். அத்துடன் உன் வேண்டுகோள் என் சபதத்தையே மாற்றி விடும் போல் இருக்கிறது. அதனால் உன் வேண்டுகோளை என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது" என்றான் ஆனந்தன்.

"என்ன சபதம்! யாருக்கும் உனக்கும்!" என்றாள் வேதா ஆர்வத்துடன்.

"ஆமாம்! இந்த வீட்டுக்கு ஒரு மாப்பிள்ளையைத் தேடி விட்டு, பிறகுதான் நான் ஒரு வீட்டுக்கு மாப்பிள்ளையாக மாற வேண்டும் என்று சபதம் வைத்திருந்தேன். இது நியாயமா இல்லையா! நீயே சொல்லு!" என்று கூறினான் ஆனந்தன்.

"உன் சபதம் தவறுதான். நான் நிச்சயமாகச் சொல்வேன்!" என்றாள் வேதா.

"ஏன் பொய் சொல்கிறாய் வேதா! கலியாணத்தை எதிர்பார்த்துப் பெண் இருக்கும் இடத்தில், மணமான இளம் தம்பதிகள் வேறு இருந்து விட்டால் அப் பேதையின் உள்ளம் எத்தனை வேதனைப்படும் என்று நானே அடிக்கடி யோசனை செய்வேன். யதேச்சையாக ஒரு நாள் நீயும் சுமதியும் பேசுவதைக் கவனித்தேன். உங்கள் சம்பாஷணையிலிருந்தும் என் முடிவே 'சரி' என்று உறுதிப்பட்டது. உடனே என் மனத்துக்குள், என் சபதத்தை உறுதிப்படுத்திக் கொண்டேன். நல்ல வேளையாக என் சபதமும் நிறைவேறி விட்டது. வேதா! உண்மையில் நீ அதிர்ஷ்டசாலி!" என்று சந்தோஷமாகக் கூறினான் ஆனந்தன்.

வேதா சடாரென்று குனிந்து, அண்ணாவின் கால்களைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டாள். அவளுடைய ஆனந்தக் கண்ணீர்ச் சொட்டுகள் ஆனந்தனின் பாதத்தில் விழுந்தன.

# வட்ட மேஜை

இவ்வாண்டு நடைபெற்ற ஈ.எஸ்.எல்.ஸி. தேர்வின் முடிவு திருவிடைமருதூர்ப் பகுதியைச் சார்ந்துள்ள பள்ளிகளுக்குப் பயங்கர நிலைமையை ஏற்படுத்தியுள்ளது. அதாவது பெரும்பாலான மாணவர்கள் தமிழ்த் தேர்வில் தோல்வி கண்டுள்ளனர். தமிழ் ஆற்றல் மிக்க மாணவர்களும் வடிகட்டப் பட்டுள்ளனர். தமிழ்த் தாள்கள் யாரோ பண்பட்ட புலவரிடம் சென்றுள்ளதாலேயே இம்முடிவு ஏற்பட்டுள்ளது. இவ்வாசிரியர் நன்முறையில் ஆய்ந்தாய்ந்து கூடுதல் குறைதல் இன்றி நடுநிலைமைப் பண்பு மாறாவகையில் அம்சங்களை (மார்க்குகளை) அள்ளிக் கொடுத்திருக்கிறார், பெருந் தன்மையோடு! இவரைப் போன்ற உயர்ந்த புலவர்கள் தோன்றியதும் இல்லை, தோன்றப் போவதும் இல்லை! இவராகிலும் பிறந்தமைக்கு அன்னாருக்கு எவ்வகையில் நன்றி செலுத்துவதென்றே புரியவில்லை! மொழி வளர, மாணவர்கள் சிறக்க இவரைப் போன்ற புண்ணியமூர்த்திகள்தான் இப்புவிக்குத் தேவை! அப்புனிதப் புலவரை அறியத் தமிழகம் ஆசைப்படுகிறது. அவர் மூலம் ஏடுகள் திருத்தும் முறையையும் தெரிந்து கொள்ள விரும்புகிறது, நாடு! ஏன் என்றால் அவர் ஒரு சிறந்த ஆசான் அல்லவா!

தேப்பெருமாநல்லூர்
18—6—56

நா. கார்முகில்வண்ணன்

★

பத்திரிகைகளின் தொண்டு, எல்லாத் தேசத்துக்கும் மிகவும் முக்கியமானது. பத்திரிகைக்காரர்களின் கூட்டங்களைத் தனியாகத் தேசத் தலைவர்கள் அடிக்கடி கூட்டிப் பேசுவது திரு காமராஜர் அறியாதது அல்ல. பிற்போக்கான பத்திரிகைகள் நம் நாட்டில் நடத்துவது எவ்வளவு கடினம் என்பதை நாம் நடைமுறையில் பார்த்து வருகிறோம். வெளி நாட்டின் சில பத்திரிகைகளை நேரு சில சமயங்களில் கண்டனம் தெரிவித்து இருப்பது எதற்காக என்பதையும் உணர வேண்டும்.

'நியூயார்க் டைம்ஸி'ல் அமெரிக்க வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ டல்லஸின் 'Brink of war' என்ற வார்த்தைக்கு உலகத்தின் பற்பல பாகங்களில் இருந்து வந்த எதிர்ப்பை நாம் படித்திருக்கிறோம். நம் பத்திரிகையாளர்களை என்றும் அரசாங்கம் அபிவிருத்தித் திட்டங்களைச் சுற்றிக் காண்பிக்க அழைத்துச் செல்கிறார்கள் என்பதையும் உணர வேண்டும்.

கார்ட்டூன் போடுவது பத்திரிகையில் செய்தி எழுதுவது எல்லாம் பணத்துக்குத்தான் என்று ஸ்ரீ காமராஜர் குறிப்பிட்டிருக்கிறார். சர்ச்சில் ஒரு சமயம் தேர்தலில் ஜெயித்ததற்கு, "நான் லோ (கார்ட்டூன் போடுவதில் உலகப் பிரசித்தி பெற்றவர்) வினால் கார்ட்டூன் வரையப்படும் தகுதியை அடைந்தேன்" என்றார். சர்ச்சில் அரசியலை இன்று நேற்று கற்றுக் கொண்டவரல்ல. சமீபத்தில் 'ஹிந்து'வில் வந்த 'ஜினீவா ஸ்பிரிட்' என்ற கார்ட்டூன் ஐஸன்ஹோவரைக் கவர்ந்தது என்றால் அது வெறும் தமாஷுக்காகச் சொல்வதாகாது.

பல வருஷங்கள் அனுபவமுள்ள வெளிநாட்டுப் பத்திரிகைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் நம் நாட்டுப் பத்திரிகைகள், தரத்தில் ஒன்றும் குறைந்து விடவில்லை.

குமாரபாளையம்
18—6—56

ஜி. கிருஷ்ணமூர்த்தி

★

நமது நாடு சுதந்திரம் பெற்று எட்டு ஆண்டுகள் முடிந்து விட்டன. சாதி, மத, பேதமின்றி எல்லோரும் ஒரே சமுதாயமாக வாழ வேண்டுமென்று அரசாங்கம் சட்டம் இயற்றியது. சட்டத்தினால் சாதி ஒழியவில்லை என்பதைக் கண்ட தேசத் தலைவர்கள் மனம் வெதும்பி, எப்படியாவது சாதி வெறியை நம் நாட்டை விட்டு விரட்டியே தீருவது என்று சபதமேற்று அப்பணியில் மும்முரமாக முனைந்திருக்கிறார்கள். அப்படியும் சாதி வெறி ஒழியும் வழியாகத் தெரியவில்லை.

தமிழ் நாட்டின் தலைநகரான சென்னையிலே இன்றும்கூட, மேல் சாதிக்காரர்கள் குடியிருக்கும் வீடுகளிலுள்ள பகுதியைத் தலையலங்காரத் தொழிலாளர்களுக்கு வாடகைக்கு விட

# “கல்கி” ஜூலை மாதச் சிறுகதைப் போட்டி

## பரிசு ரூபாய் நூறு

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம். தமிழ் நாட்டின் சூழ்நிலையை வைத்துச் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். போட்டிக்கு ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

கதைகள் “கல்கி”யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டு பக்கத்துக்குள் இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாத மூன்றாவது வாரத்தில் வெளியாகும். பிரசுரத்துக்குத் தகுதியுள்ள மற்றக் கதைகளும் “கல்கி”யில் பிரசுரமாகும்.

கதைகள் அந்தந்த மாதம் 20-ம் தேதிக்குள் “கல்கி” காரியாலயத்துக்கு வந்து சேர்ந்து விடவேண்டும்.

**பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திருப்பி அனுப்ப இயலாது என்றும், எழுத்தாளர்கள் தங்கள் கதைகளுக்கு மற்றொரு பிரதி யெடுத்து வைத்துக் கொள்ளுமாறும் கேட்டுக் கொண்டிருந்தோம். இந்த மாற்றத்துக்குப் பல எழுத்தாளர்கள் வருத்தம் தெரிவித்தும், பழையபடி தபால் தலை வைத்து அனுப்பினால் கதைகளைத் திருப்பி யனுப்புமாறும் கேட்டிருக்கிறார்கள்.**

**எழுத்தாளர்களின் விருப்பத்துக் கேற்ப இப் புது விதியைத் திருத்தி விட்டோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.**

**கதைகளைத் திரும்பப்பெற விரும்பும் எழுத்தாளர்கள் கதைகளுடன் போதிய தபால் தலைகள் வைத்து அனுப்ப வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.**

மறுத்து விடுகிறார்கள். கலியாணச் சத்திரங்கள் போன்ற இடங்களைக்கூட வாடகைக்கு விட முடியாதென்று, தட்டிக் கழித்து விடுகிறார்கள். தலைநகரிலேயே தலையலங்காரத் தொழிலாளர்களுக்கு இத்தனை அவமதிப்பு என்றால், கிராமங்களில், ஆதரவின்றி அநாதைகளைப் போல, அவதியுடன் வாழ்ந்து வரும் தலையலங்காரத் தொழிலாளர்களின் நிலை எப்படி இருக்கும் என்பதை ஊகித்துக் கொள்ளுங்கள். இது தமிழ் நாட்டின் பண்பாட்டுக்கே பெருத்த அவமானமல்லவா!

சென்னை
18—6—56

என். சிவானந்தம்

★

தட்சிணப் பிரதேச அமைப்பு யோசனை குறித்து மக்கள் விருப்பம் மாறுதலாக இருப்பதால் அதைத் தாற்காலிகமாகக் கைவிடவேண்டியதாக இருக்கிறது என முதன் மந்திரி காமராஜ் நாடார் அபிப்பிராயம் தெரிவித்துள்ளார். ஜனநாயகத் துறையில் மிகுந்த அநுபவமுள்ள சென்னை முதன் மந்திரி இவ்வாறு கருத்து தெரிவித்திருப்பது பெரும் ஆச்சரியத்தை விளைவிக்கிறது. ஜனநாயகம் என்பது மக்கள் விருப்பப்படி மட்டும் நடப்பது அல்ல. மக்களை நன்மை பயக்கும் வழியில் நடத்திச் செல்வதும் ஜனநாயகத் தலைவர்களின் முக்கிய கடமைகளில் ஒன்றாகும். மக்கள் விருப்பப்படியே தலைவர்கள் நடந்து வருவதுதான் ஜனநாயகம் என நினைத்தால், அது ஒரு பெரும் கேலிக்கூத்தேயன்றி வேறல்ல. சிற்சில சமயங்களில் எந்த ஒரு நல்ல கருத்துக்கும் சந்தர்ப்பங்களின் காரணமாக மக்களிடமிருந்து ஆதரவு கிட்டாமல் போகலாம். ஆனால் அதையே முடிவான நிலைமையாகக் கருதி ஒன்றும் செய்யாமல் விட்டு விடுவது தலைவர்களின் திறமையைக் குறிக்காது. குறைவையே காட்டும். தட்சிணப் பிரதேச அமைப்பின் யோசனையை மக்கள் ஏற்றுக் கொண்டால், என்ன என்ன வகைகளில் நன்மை ஏற்படும் என்பதை முதன் மந்திரியும் மற்றும் அவரது சகாக்களும் மக்கள் உணரும்படி மக்கள் மத்தியில் பிரசாரம் செய்ய வேண்டும். இது அவர்களுடைய முதற் கடமை.

கொழும்பு
23—6—56

எஸ். கருணாநிதி

★

புதுதில்லி லேடி இர்வின் கல்லூரியிலிருந்து இரு மாணவிகள் கல்வி சம்பந்தமாக ஜப்பானுக்குப் பிரயாணம் செய்தவர்கள், 'ஜப்பானில் பூச்செடிகளை ஒழுங்காக வைப்பது எப்படி!' என்பதைப் பற்றிக் கற்றுக் கொண்டிருப்பதைக் காட்டும் படத்தை ஒரு பத்திரிகையில் மிகவும் பிரமாதமாகப் பெரிய அளவில் விளம்பரப்படுத்தப் பட்டிருக்கிறது. பாரத நாட்டு மக்கள் தொன்று தொட்டே அழகுக் கலையில் எந்நாட்டினரையும் விட மேம்பட்டவராக இருந்து வந்திருப்பது அஜந்தாக் குகை சித்திரங்களினாலும், எல்லோரா எழில் ஓவியங்களினாலும், மொகஞ்சதரோ, ஹரப்பா ஆகிய இடங்களின் புதை பொருள் ஆராய்ச்சியினாலும் வெள்ளிடை மலைபோல் தெள்ளிதின் தெரியும். இவ்வாறு பலவிதத்திலும் மேம்பட்ட பாரத நாட்டிலிருந்து இரு மாணவிகள் ஜப்பானுக்குப் போய்த்தானா பூச்செடிகளை ஒழுங்குபடுத்துவதற்குக் கற்றுக் கொள்ள வேண்டும்!

இடும்பாவனம்
18—6—56

எஸ். குருமூர்த்தி

தேவியின் கடிதம்

# கோபம் வேண்டாம்

**வசுமதி ராமசாமி**

அன்புக்குரிய சுஜாதா,

கோபம் பல காரணங்களால் வருகிறது. சில சமயம் முக்கியமான சந்தர்ப்பத்தில் நமக்கு வேண்டிய அவசியமான சாமான்கள் காணாமல் போனாலும் பிரமாதமான கோபம் வருகிறதல்லவா?

ஒரு சமயம் உறவினர் வீட்டுக் கல்யாணத்துக்குப் போயிருந்தேன். திடீரென்று கல்யாணப் பெண் கழுத்து மாங்காய் மாலையைக் காணோம் என்றார்கள். 'அது ஒவ்வொருவருக்குத் தெரிந்து சம்பந்தி வீட்டு வரை பரவிவிட்டது. அந்த நகை பெண்ணுக்கு மாமியார் வீட்டில் மணவறையில் அளிக்கப்பட்டது. பெண்ணின் தாயார் சிறிது நிதானமாகத் தேடி இருக்கலாம். சமையல்காரர்கள், வேலைக்காரர்கள் எல்லோரையும் மிரட்டி ஆர்ப்பாட்டம் செய்து சோதனை போட்டார்கள். அனைவரும் மனம் நொந்து விட்டார்கள். கொஞ்சம் ஏழைமையாயுள்ள உறவினர்கள் பெட்டிகளெல்லாம் சோதிக்கப்பட்டன. போலீஸுக்கும் தகவல் கொடுத்து விட்டார்கள். ஆசீர்வாத சமயமும் வந்து விட்டது. கல்யாணப் பெண் ஆணியில் மாட்டியிருந்த பூமாலையைப் போட்டுக் கொள்ள எடுத்தாள். கூடவே ரத்னமாலை விழுந்தது. அன்று இரவு விருந்துக்குச் சமையல்செய்யச் சமையல்காரர்கள் மறுத்து விட்டார்கள். எவ்வளவோ நாட்கள் ஆசையாக ஏற்பாடுசெய்த விருந்து நின்று விட்டது. பதட்டமாகப் பேசுவதோ, நடப்பதோ தவறல்லவா? இதனால் பின்னால் வருந்த நேருகிறது.



கொத்துச்சாவி இருக்கிறதே அது அடிக்கடி நம்மைப் பழி வாங்கும். ரயிலுக்குப் புறப்படுகிற சமயம், கல்யாண வீட்டுக்குக் கிளம்புகிற சமயம், எல்லாம் நம்மை ஒரு கை பார்க்கும். அந்தச் சமயம் சற்று நிதானமாக இருந்து தேடுவதற்குப் பயின்று கொள்ள வேணும்.

விருந்தினர்களை அழைக்கிறோம். வழக்கமாகச் சமையல் நன்றாகத் தயார் செய்யும் நம்முடைய சமையல்காரர்கள் அன்று சரியாகச் செய்திருக்க மாட்டார்கள். அவர்களுடன் சாப்பிடும்போதே, 'அது தவறு, இது நன்றாக இல்லை' என்றெல்லாம் சொல்வது பண்புக் குறைவுதான். ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் ஒரு பெரிய விருந்தில் தம்முடைய சமையல்காரன் மோசமாக நடந்து கொண்டது பற்றி எழுதியிருக்கிறார். காந்திஜியின் பொன்மொழிகளை நினைத்துத் தான் சாந்தமாக இருந்து வெற்றி அடைந்ததைப் பற்றி ஒரு பிரபல பத்திரிகையில் எழுதியிருக்கிறார்.

சில பெண்கள் பிறர் அபூர்வமாக வந்திருக்கும் சமயம் குழந்தைகளை அடிக்கிறார்கள். பாவம்! வந்தவர்கள் தங்கள் முதுகில் அடிபட்ட மாதிரி கருதுகிறார்கள்.

ஒரு தோழி எப்பொழுதும் தன்னுடைய கோபத்தைப் பற்றிப் பெருமையாகச் சொல்லுவாள். 'நன்றாக டோஸ் கொடுத்து விட்டேன். விளாசி விட்டேன். சுடச்சுடக் கேட்டு விட்டேன்' என்றெல்லாம் அடுக்கு மொழிகளில் சொல்லுவாள். 'அதற்கெல்லாம் ஏதாவது பயனுண்டா?' எனச் சிந்திப்பதில்லை. விபரீத பலன்தான் ஏற்படும் என்பதையும் உணர்வதில்லை.

கோபத்தை முழுவதையும் வென்றுவிட இயலாது. அதனால்தான் நமது பொய்யாமொழிப் புலவரான வள்ளுவர்,

'தீயினால் சுட்ட புண்
உள் ஆறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு"

என்று கூறியிருக்கிறார். இதையே இன்னொரு அனுபவமுள்ள பெரியார், "நாக்கில் வரும் கடுசொற்களைச் சிந்தாமல் சற்று நேரம் வைத்துக் கொள். உமிழ் நீராக ஆறிக் குளிர்ந்து விடும்" என்றார். மற்றொரு அறிஞர் கோபம் வரும் போதெல்லாம் ஒன்று இரண்டு என நூறு வரை எண்ணச் சொன்னார். அவர் கணக்கு வாத்தியார் போலும்! நாமும் கோபத்தை வென்று விட முயற்சி செய்வோம். முயற்சியினால் ஆகாதது ஒன்றில்லை. வாழ்க்கையில் கூடியவரையில் சாந்தத்துடன் இருக்கவும், எல்லாரிடமும் இனிமையாகப் பழகவும் பயில வேண்டும்.

— **பூமாதேவி**

கல்கியின்

# அமர தாரா

ஜனந்தி



அத்தியாயம் 25

## விந்தை நிகழ்ந்தது

நான் உள்ளே நுழைந்ததும் ஈசுவரமூர்த்தி தலை நிமிர்ந்து என்னைப் பார்த்தார். அவருக்கு என்னைக் கண்டதும் வியப்பு ஏற்பட்டதா இல்லையா என்று சொல்ல முடியவில்லை.

அவரிடம் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்று புலப்படவில்லை. அவரும் பேசாமல் உட்கார்ந்திருந்தார். என்னை உட்காரக் கூடச் சொல்லவில்லை.

நான் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, "என்னை நீங்கள் எதிர்பார்த்திருக்க மாட்டீர்கள்?" என்றேன்.

"நாம் எதிர்பாராத விஷயங்கள் எவ்வளவோ நடக்கின்றன" என்றார்.

"நீங்கள் இந்துவைப் பார்த்துப் பயமுறுத்தியது கூட அத்தகைய எதிர்பாராத சம்பவம்தான் போலிருக்கிறது."

ஈசுவரமூர்த்தியின் முகம் சுருங்கியது. "அதைப் பற்றி நீ யார் கேட்பதற்கு? நான் இந்துவிடம் பேசுவதை நீ தடுத்துவிட முடியுமோ?" என்று அனல் வீசக் கேட்டார்.

"மிஸ்டர் ஈசுவரமூர்த்தி! உங்களுடைய மிரட்டலுக்கு நான் பயந்துவிட மாட்டேன். சொல்ல வந்ததைச் சொல்லிவிட்டுத்தான் போவேன். நீங்கள் இனிமேல் இந்துவைச் சிறையில் சென்று பார்க்கக் கூடாது. இனிமேல் எங்களுடைய வாழ்க்கையில் எந்தக் காரணம் பற்றியும் தலையிட வேண்டாம். அப்படிச் செய்தால் பின்னால் வருந்துவீர்கள்" என்றேன்.

அவருடைய முகம் இன்னும் விகாரமடைந்தது. "எனக்கு உபதேசம் செய்ய வந்திருக்கிறாயா? பயமுறுத்த வந்திருக்கிறாயா? இந்த மிரட்டலுக்கு நான் பயந்து விடுவேன் என்று நீ நினைத்தாயா? என் விஷயத்தில் நீ தலையிடாமல் விலகிக் கொண்டு விடு. இல்லாவிட்டால்......" என்று கூறிவிட்டு மேலே சொல்வதற்கு வார்த்தைகள் அகப்படாத மாதிரி திண்டாடினார்.

"இதைப் பாருங்கள். உங்களைப் பயமுறுத்த நான் வரவில்லை. ஒரு உண்மையைச் சொல்லத்தான் வந்தேன். வீணாக உங்களுடைய கோபத்தைச் செலவழிக்க வேண்டாம். உங்கள் விஷயத்தில் நான் தலையிடவில்லை. நீங்கள் எங்களுடைய விஷயத்தில் குறுக்கிட வேண்டாமென்று கேட்டுக் கொள்ள நான் வந்தேன். இந்துமதி என் மனைவி. அதைச் சொல்லத்தான் வந்தேன்."

ஈசுவரமூர்த்தியின் கோபம் அளவு கடந்து விட்டதாகத் தோன்றியது. ஒரு குதி குதித்து எழுந்து நின்றார். "ஏய்! அயோக்கிய சிகாமணியே! சுலோசனாவின் பெயரைக் கெடுத்தாகி விட்டது. இனிமேல் இந்துமதியின் வாழ்வையும் கெடுக்கப் போகிறாயாக்கும்? மானம், மரியாதை உள்ளவனாக இருந்தால் சுலோசனாவைக் கல்யாணம் செய்து கொள். அதற்குப் பிறகு எனக்கு உபதேசம் செய்யலாம்" என்றார்.

எனக்கும் ரௌத்ராகாரமான கோபம் வந்தது. அதைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு "உங்களைக் கண்டும் உங்கள் சாட்டையைக் கண்டும், பத்து வயதுச் சிறுவனாக இருந்தபோது நான் பயந்திருக்கலாம். இனிமேல் பயப்பட மாட்டேன், மிஸ்டர் ஈசுவரமூர்த்தி! என் தகப்பனாருக்கு நீங்கள் செய்த அநீதிக்கு நான் நியாயமாகப் பழி வாங்கியிருக்க வேண்டும். ஆனால் அதைப் பொறுத்துக் கொண்டேன். அவர் மீதும் குற்றம் இருந்தது என்பதனால் உங்கள் அக்கிரமத்தைப் பொறுக்க முடிந்தது. ஆனால் களங்கமில்லாத இந்துவை நீங்கள் துன்புறுத்துவதை நான் ஒருநாளும் பார்த்துச் சகித்திருக்க மாட்டேன். உங்களைப் போலீஸில் காட்டிக் கொடுக்க என்னால் முடியும். உங்கள் சமாசாரம் எனக்கு நன்றாகத் தெரியும்" என்றேன்.

ஈசுவரமூர்த்தியின் முகம் மாறுதல் அடைந்தது. ஆனால் அது என்ன மாறுதல் என்று என்னால் ஊகிக்க முடியவில்லை. கோபமும், அதிர்ச்சியும் சேர்ந்த மனோநிலை அப்படித்தான் இருக்க வேண்டும். என்னை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்தார்.

"அந்தத் திருடனுடைய பிள்ளையா நீ? அதனால்தான் ஊரை ஏமாற்றிப் பிழைக்கிறாய்? உன்னைப் போன்ற திருடர்களின் பிள்ளைகளுக்கும், அயோக்கியர்களின் பிள்ளைகளுக்கும் மாஜிஸ்ட்ரேட் உத்தியோகம் கொடுக்கிறார்களே, அந்தப் பரம முட்டாள்களைச் சுண்ணாம்புக் காளவாயில்தான் போடவேண்டும்" என்று கூறினார்.




"என்னுடைய பொறுமைக்கும் ஒரு எல்லை உண்டு, ஐயா. நீங்கள் சொல்லச் சொல்ல நான் கேட்டுக் கொண்டே இருப்பேன் என்று நீங்கள் நினைக்க வேண்டாம். இந்துவை விடுவித்த பிறகு..." ஈசு-வரமூர்த்தி நான் ஏதோ ரொம்ப ஹாஸ்யமான விஷயத்தைக் கூறி விட்டது போல் சிரித்தார்.

"எதற்காகச் சிரிக்கிறீர்கள்?" என்று அவரைக் கேட்டேன்.

"துரை! நான் சொல்வதைக் கேள். உன்னைப் பார்த்தால் புத்திசாலியென்று தோன்றுகிறது. இந்துமதி குற்றம் செய்யவில்லை என்பதை உன்னால் ஒரு நாளும் நிரூபிக்க முடியாது! நான் ஒருவன்தான் அதை நிரூபிக்க முடியும். அதை என்னிடம் விட்டுவிடு. கலோச

ளுவை மணந்து கொண்டுவிடு. வீண் பிடிவாதம் இந்துவைக் காப்பாற்ருது. உன் பிடிவாதம் இந்துவை மரணத்தின் வாயில் கொண்டு தள்ளுகிறது என்பதை நினைவு வைத்துக்கொள்'' என்ருர்.

எனக்குத் திடீரென்று 'இந்தப் படு பாவிதான் ஒருவேளை அந்தக் குற்றத்தைச் செய்திருப்பாஞே?' என்று சந்தேகம் உதித்தது. 'ஆனல் அதை எப்படிச் சந்தேகமறத் தெரிந்துகொள்வது? மகா பாபங்களுக்கு அஞ்சாத இந்தக் காதகன் அது வெளி வராமல் அமுக்கிவிடத் தகுந்த ஏற்பாடுகள் செய்யாமலிருப்பானு? இந்தப் படுபாவி, என் இந்துவின்மீது பழியைச் சுமத்தி அவள்



சிறையில் வாடுவதைக் கண்டு மகிழ்ந்துகொண்டிருக்கிருனே' என்று எண்ணமிட்டேன். அக்கினித் திராவகத்தை உள்ளத்தில் யாரோ கவிழ்த்து விட்டது போல் இருந்தது.

''அடப் பாவி! அவள் நிரபராதி என்று தெரிந்திருந்தும் இத்தனை நாட்கள் சும்மா இருக்க உங்களுக்கு எப்படி மனம் வந்தது? ஆனல் நீங்கள் அவளை விடுதலை செய்து இம்சை செய்வதைக் காட்டிலும் அவள் தண்டனை அடைவதே மேல். மிஸ்டர் சுகுவரமூர்த்தி! ஒரு நிரபராதி தண்டனை அடைவதை நானும் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன். எல்லாவற்றுக்கும் மேலாகக் கடவுள் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்'' என்று ஆத்திரம் பொங்கக் கூறிவிட்டு வெளியில் வந்து விட்டேன்.

நான் காரைக் கிளப்பிக் கொண்டு கேட்டைத் தாண்டிச் சென்றபோது பக்கத்துச் சந்து ஒன்றில் அந்த மஞ்சள் தலைப்பாகை மறைவதைப் பார்த்தேன். நானும் அந்தச் சந்தில் திரும்பி வேகமாகப் போனேன். ஆனல் மஞ்சள் தலைப்பாகையைக் காணவே இல்லை. என் உள்ளம் குழம்பியது.

நான் சுகுவரமூர்த்தியின் வீட்டிலிருந்து புறப்பட்ட பொழுது இருட்டத் தொடங்கியிருந்தது. எரியும் என் உள்ளத்தைக் குளிரச் செய்து கொள்ளலாம் என்ற எண்ணத்துடன் கடற்கரையில் கொண்டுபோய்க் காரை நிறுத்தினேன். குளிர்ந்த கடல் காற்று உடலுக்கு இதமாக இருந்தது. ஆனல் உள்ளத்தின் எரிச்சலைச் சிறிதும் தணிக்கவில்லை. இந்துவுடன் கை கோத்துக் கொண்டு இந்தக் கடற்கரைக்கு வருவதாக நான் பகற் கனவு கண்டதெல்லாம் ஞாபகம் வந்து என்னைத் துன்புறச் செய்தது.

அந்தக்கடிதம் என் மனத்தில் மறுபடியும் வட்டமிட்டது. அந்தக் கையெழுத்து யாருடையது? கவரில் அன்றையத் தேதிதான் போட்டிருந்தது. அப்போது நான் வந்திருக்க வேண்டும். சுகுவரமூர்த்தி ஒரு கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்தது ஞாபகம்வந்தது. ஆம்! அவர் அந்தக் கடிதத்தைத்தான் படித்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். என் உள்ளுணர்வுக்கு அந்தக் கடிதத்தில் இந்துவைக் காப்பாற்ற ஏதோ விஷயம் இருக்கிறதென்று தோன்றியது. 'இது என்ன பைத்தியக்கார எண்ணம்? தும்பை விட்டு வாலைப் பிடிப்பது போல இருக்கிறதே!' என்ற எண்ணமும் கூட எழுந்தது. ஆனலும் அந்தக் கடிதம் என் நெஞ்சை விட்டு அகலவில்லை. அதில் ஏதோ இருக்கிறது. அது என்னவாக இருக்கும்?

என்ஞல் அந்தக் கடிதத்தின் உறுத்தலைத் தாங்க முடியவில்லை. உடனே புறப்பட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் இன்ஸ்பெக்டரைத் தேடிப் பிடித்து என்னுடைய சந்தேகத்தை வெளியிட்டேன்.

இன்ஸ்பெக்டர் தாமோதரம் ரொம்பக் கண்ணியமான மனிதர். என்னுடைய ஆதாரமில்லாத சந்தேகத்தை அனுதாபத்துடன் கேட்டார். பிறகு, ''மிஸ்டர், ராய்! உங்களிடம் எனக்கு ரொம்ப மரியாதை உண்டு. ஆனல் இந்தச் சந்தே



ஆந்திர செகரடேரியட், ஹோம் டிபார்ட்மெண்ட், சூப்பரின்டெண்ட் ஸ்ரீ S. ராமசுந்தரம் அய்யர் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி கணேசன் அவர்களுக்கும், புதுடில்லி ஸ்ரீ ஏ. வி. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் குமாரி சௌ கங்காபாய்க்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க, மணமக்கள்!

த்தை வைத்துக் கொண்டு நான் எதுவும் செய்ய முடியாதென்பது உங்களுக்கே தெரிந்த விஷயம். என்றால் இயன்றவரை முயற்சி செய்கிறேன். எனக்கே அந்த சுகவரமூர்த்தி மீது வேறு சந்தேகங்கள் இருக்கின்றன. ஏதாவது ஒரு விஷயத்துக்கு ருசு இருந்தால் அவருடைய வீட்டைச் சோதனை போடலாம். ஆனால் நாளை வழக்கு நடைபெறுவதற்குள் நான் ஒன்றும் செய்ய முடியாது. எனக்கும் அமரதாரா சிறுமியாக இருந்தபோது இந்த மாதிரி ஒரு குற்றம் செய்திருப்பாளென்று தோன்றவில்லை. இருந்தாலும் பார்ப்போம். நான் சாட்சிகளைக் கொண்டு நிர்ணயிக்க வேண்டுமே தவிர என்னுடைய ஊகங்களைக் கொண்டு ஒன்றும் செய்யக் கூடாது என்பது உங்களுக்குத் தெரியும். என்றால் முடிந்ததைச் செய்கிறேன்" என்றார்.

* * *

மறு நாள் கோர்ட்டில் ஒரே கூட்டம். அமரதாரா கொலை வழக்கு அவ்வளவு தூரம் எல்லோரையும் கவர்ந்திருந்தது. அத்தனை பேரிலும் என் மனத் துடிப்பை அறிந்து ஆறுதல் காட்ட யாரும் இல்லை. இந்துமதி கூட அங்கே இல்லை.

திடீரென்று என் கண்கள் மஞ்சள் தலைப்பாகை மீது விழுந்தன. அதற்குள் வழக்கு ஆரம்பமாகி விட்டபடியால் எனக்கு மஞ்சள் தலைப்பாகையைக் கவனிக்க நேரமில்லை.

பழைய சாட்சிகளையே, அச்சடித்து வைத்துக் கொண்டு படித்துக் காட்டினார்கள். எனக்கு ஒரே தவிப்பாக இருந்தது. சுமார் பதினைந்து நிமிஷங்கள் கடந்திருக்கும். பிராஸிக்யூஷன் சாக்ஷிகளின் பலம் நன்றாக விளங்கிவிட்டது. அந்தச் சமயத்தில்தான் அந்த எதிர்பாராத சம்பவம் நிகழ்ந்தது.

மஞ்சள் தலைப்பாகை அணிந்த ஆசாமி எழுந்து நின்றார். அப்போதுதான் எனக்குப் பளிச்சென்று அவர் யாரென்று தெரிந்தது. அவர் என்ன செய்யப் போகிறார் என்று நான் யோசிப்பதற்குள், அவர் ஓடிச் சென்று சாட்சிக் கூண்டில் ஏறினார்.

அவர் என்ன செய்யப் போகிறாரென்று எனக்குத் தெரிந்து விட்டது. ஆனால் நான் செயலற்று உட்கார்ந்திருந்தேன்.

காசிலிங்கத்தின் குரல் கம்பீரமாகக் கோர்ட்டில் ஒலித்தது.

"கோர்ட்டார் அவர்களே! நான் 'பகத்சிங்' என்று பெயர் கொண்ட காசிலிங்கம். இந்த வழக்கில் குற்றம் சாட்டப்பட்டிருக்கும் இந்துமதியின் தந்தை. அவள் குற்றம் செய்யவில்லை என்பதைக் கூறவும், நான்தான் குற்றவாளி என்பதை ஒப்புக் கொள்ளவும் இங்கே வந்திருக்கிறேன்" என்றார்.

என்னையறியாமல் என் கண்களில் கண்ணீர் பொங்கி வழிந்தது. அவசரமாகத் துடைத்துக் கொண்டேன். வக்கீல் நீலகண்டன் என்னைப் பிரமிப்புடன் பார்த்தார். பிராஸிக்யூஷன் பக்கத்தில் எல்லோரும் திகைத்து நின்றார்கள்.

பிறகு சம்பவங்கள் விரைவாக நடைபெற்றன. காசிலிங்கத்திடம் வாக்குமூலம் வாங்கிக் கொண்டு அவரையும் லாக் அப்பில் வைக்கச் சொல்லி உத்தரவு பிறப்பித்தார் பிரதம நீதிபதி.

காசிலிங்கத்தின் பேரில் குற்றம் ருசுவாகும் வரையில் இந்துமதியையும் வெளியே விடமாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும். காசிலிங்கத்தைப் பார்த்தேன். அவர் கையில் விலங்கை மாட்டிக் கொண்டிருந்தார்கள். அவர் என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தார். அந்தப் பார்வை "தம்பி! இதுதான் எனக்கு ஏற்ற முடிவு. இந்துவையாவது காப்பாற்ற முடிந்ததல்லவா? எப்படியிருந்தாலும் நான் தண்டனைக்குரியவன். நீ வருத்தப்படாதே!" என்று என்னிடம் கூறுவது போலிருந்தது.

ஆம்! உண்மைதான். காசிலிங்கம் பல குற்றங்கள் செய்தவர். அவர் இந்த வழக்கில் இல்லாவிட்டாலும், வேறு




விருப்பமா . . . அவர்கள் அதை ஆசையுடன் வரவேற்கிறார்கள்

ஒவ்வொரு பினாகா டியூபுடனும் வசீகரிக்கும் விளையாட்டு ஆபரணம் இருப்பதோடு, பற்களைச் சுத்தமாய் வைப்பதிலும் பினாகா டூத்பேஸ்ட் முற்றிலும் சிறப்புடன் விளங்குகிறது.

குடும்பத்தினரால் போற்றப்பட்ட பினாகாவின் வெற்றிக்குக் காரணம் அதன் சுத்தமான பழச் சுவையே. ஆனால் சிறுவர்களிடையே பற்கள் சுத்தத்தை புகலுவதற்கான உற்சாகத்தை அளிக்க, பினாகா டூத்பேஸ்ட் தயாரிப்பாளர்கள் ஒவ்வொருவருக்கும் பிரியமான பரிசுகளை இலவசமாக வழங்கிக்கொண்டிருக்கிறார்கள்.

(நிறம் கறுக்காத பிரகாசம் மங்காத தங்கம் போன்றதொரு விளையாட்டு ஆபரணமும், பரிசு திட்டங்களைப்பற்றிய காகிதத் துணுக்கும் ஒவ்வொரு பினாகா டூத்பேஸ்டுடன் கூட அடக்கம் செய்யப்பட்டுள்ளன.)

**‘ஸிபா’வின் விசேஷ குணம் பொருந்தியுள்ள பற்பசை**

# அநுமகரத்வஜா

**ஷட்குண மகரத்வஜா**
**சக்தி வாய்ந்தது**



சுத்தமான ஷட்குணத் தங்கத்தினால் மிகவும் சிறிய அளவில் ஆனால் பிரமாத சக்தி வாய்ந்ததாக உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டுப் பிறகு மாத்திரை வடிவம் ஆக்கப்பட்டிருக்கிறது. உபயோகிப்பதற்கு மிகவும் சுலபம். மற்ற மகரத்வஜங்களை விடச் சக்தி வாய்ந்தது.

○●○

14 மாத்திரைகள் ஒரு புட்டியில் இருக்கின்றன. (7 முழு அளவுகள்)

○●○

## பெங்கால் கெமிகல்

**கல்கத்தா - பம்பாய் - கான்பூர்**

சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்
**ஆர். எல். கௌடர் & கம்பெனி**
59, பந்தர் தெரு : சென்னை - 1

ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்
**சத்ய நாராயணா பார்மஸி**
குமரி தெரு, விஜயவாடா-1 & விஜயநகரம்

## ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ் ஜலதோஷத்தை நிறுத்துக

ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ், ஜலதோஷத்தால் மூச்சுத்திணறல், இருமல், தும்மல், மூச்சடைப்பு உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் இப்போது மெண்டாகோ (Mendaco) அருந்தி அற்புத நிவாரணம் அடைகிறார்கள். இந்த நவீன, விஞ்ஞான, அமெரிக்க மருந்து இரத்தத்தின் வழியே சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக்கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் தும்மலின்றி சுகமாக சுவாசித்து குழந்தைபோல் தூங்கலாம். கெமிஸ்டிடம் மெண்டாகோ (Mendaco) வாங்குக. திருப்தி இன்றேல் பணம் வாபஸ்.

உலக மார்க்
**அசல் ஷண்முகம் பட்டணம் பொடி**




**ORIGINAL SHUNMUGAM SNUFF (ESTD-1839) CO.**
**POST BOX 140 MADRAS-1**

எத்தனையோ குற்றங்களுக்குத் தண்டனை அடைய வேண்டியவர். ஆனால் என் இந்து ஒன்றுமறியாதவள். ஆகவே அவள் தண்டனை அடையக் கூடாது. அவரே தம்மைப் போலீஸில் ஒப்படைத்துக் கொண்டது எனக்கு நிம்மதியளித்தது. பெரிய சுமை நெஞ்சிலிருந்து இறங்கியது மாதிரி இருந்தது. ஆனால் இந்துவின் மனம் எவ்வளவு வேதனைப்படும் என்று எண்ணிய போது எனக்கும் சொல்ல முடியாத துயரம் உண்டாயிற்று. நான் கோர்ட்டிலிருந்து வெளியே வந்தேன்.

காரை எடுத்துக் கொண்டு மறுபடியும் ஈசுவரமூர்த்தி வீட்டுக்குச் சென்றேன். அவரிடம் எப்படியாவது கெஞ்சிக் கேட்டு உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை என்னை அங்கே போகத் தூண்டியது. ஆனால் அவர் வீட்டில் இல்லை என்றும், முதல் நாள் இரவுதான் திருநந்திபுரம் சென்றார் என்றும் அவர்கள் வீட்டு ஆள் கூறினான். திருநந்திபுரம் என்றதும் எனக்குப் பளிச்சென்று நேற்று நான் வந்த போது ஈசுவர மூர்த்தி படித்துக் கொண்டிருந்த கடிதம் ஞாபகம் வந்தது. அந்தக் கையெழுத்து யாருடையது என்றும் விளங்கி விட்டது.

ஆகா! நான் எத்தனை நாட்களாகக் கண் இருந்தும் குருடனாக இருந்திருக்கிறேன். காசிலிங்கம் என்னிடம் நான் சந்தேகித்த ஆசாமி யார் என்று சொல்ல மறுத்ததன் காரணமும் அப்போதுதான் எனக்குப் புரிந்தது.

## அத்தியாயம் 26

# விவாகம் நடந்தது

குற்றவாளி யாரென்பது தெரிந்த பிறகு சொல்ல முடியாத தளர்ச்சி உண்டாயிற்று. வாழ்க்கையின் மீதும், உலகத்தின் மீதும் அருவருப்பு உண்டாயிற்று. நான் தங்கியிருந்த ஹோட்டல் அறையில் போய் என் படுக்கையில் தடாலென்று விழுந்தேன். ஒரு மணி நேரம் எண்ணுததெல்லாம் எண்ணித் தத்தளித்துத் தவித்த பிறகு ஒரு முடிவுக்கு வந்தேன்.

'உலகத்தில் உண்மைக்காக வாழ வேண்டும் என்றால் நெஞ்சை ஈரப்பசையில்லாமல் துடைத்துக் கொண்டு விட வேண்டும். ஆனால் இப்படி என்னை உண்மை சோதிக்கப் போகிறதென்று நான் நினைத்தேனா?' என் மனம் இரண்டாகப் பிளந்து போய் விடும் போல இருந்தது.

டெலிபோன் அறைக்குப் போய்ச் சுலோசனாவைக் கூப்பிட்டேன். நல்லவேளையாகச் சுலோசனாவே டெலிபோனை எடுத்தாள். உடனே என் அறைக்கு வரச் சொல்லி விட்டு மறுபடியும் அறையில் வந்து உட்கார்ந்தேன்.

பதினைந்து நிமிஷங்களில் சுலோசனா வந்து விட்டாள். அவளிடம் என் மனவேதனையைக் கொட்டித் தீர்த்தேன்.

''நீங்கள் அந்தக் கடிதத்தில் என்ன எழுதியிருந்தது என்று படித்துப்பார்க்கவில்லையே? கையெழுத்தின் மூலம் தானே யாரென்று தெரிந்து கொண்டீர்கள். அவர்தான் குற்றவாளி என்று நீங்கள் எப்படிக் கூற முடியும்?''

''இதைப் பாருங்கள் சுலோசனா! அன்றைய தினம் நானும், தங்கபாண்டியனும் திருநந்திபுரத்தில் வக்கீல்வீட்டில் பேசிக் கொண்டிருந்தோம். ஜமீன் அதிகாரங்கள் தங்கபாண்டியன் கைக்கு வருவதைப் பற்றிய சட்டபூர்வமான விஷயங்களை அலசி ஆராய்ந்து கொண்டிருந்தோம். நான் திரும்பவும் குங்குமத்துறை சென்று, சாமான்களை எடுத்துக் கொண்டு, இந்துவிடமும் விடைபெற்றுக் கொண்டு வரவேண்டுமென்று எண்ணியிருந்தேன். ஆனால் நேரமாகி விட்டது. முக்கியமான விஷயங்கள் பல இருந்தன. சொக்கையா வாங்கிய கடனையெல்லாம் தீர்க்கத் தங்கபாண்டியன் பொறுப்பாளி இல்லை என்று எப்படிக் கூறுவதென்பதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தோம். ஆகவே, நான் அவனைப் போய்ச் சாமான்களைக் கொண்டு வந்து விடச் சொன்னேன். அன்று டிரைவர் வராததால் அவனே காரை ஓட்டிக் கொண்டு போனான். ரயில் புறப்படும் சமயத்தில் தான் திரும்பி வந்தான். இவன் குங்குமத்துறைக்குப் போனபோது அங்கே ஏதோ நடந்திருக்கிறது. அது என்னவென்று எனக்குத் தெரிந்து கொள்ள வேண்டும். தங்கபாண்டியன் சாகக் கிடக்கிறான். அவன் இறப்பதற்கு முன்னால் நான் அவனிடமிருந்து வாக்குமூலம் எழுதி வாங்கிக் கொள்ள வேண்டும். இன்றே நான் புறப்பட்டுப் போகிறேன்'' என்றேன்.

''ஆமாம்! அதற்கும் கடிதத்துக்கும் என்ன சம்பந்தம்?''

''தங்கபாண்டியன் தானாக இப்படி ஒரு காரியம் செய்திருக்க மாட்டான்.

சகுவரமூர்த்தியின் தூண்டுதலினால் தான் செய்திருக்க வேண்டும். தங்கபாண்டியன் தான் குற்றவாளி என்பதை நிரூபிக்க அவன் எழுதிய கடிதம் ஏதேனும் சகுவரமூர்த்தியிடம் இருக்க வேண்டும். அதனால் தான் அவர் 'என் ஒருவனால் தான் இந்துவை விடுதலை செய்ய முடியும்' என்று கூறினார். தாமே செய்திருந்தால் அவ்விதம் கூறமாட்டார் அல்லவா? அது மட்டுமில்லை. தங்கபாண்டியனிடமிருந்து கடிதம் வந்ததும் அவர் உடனே திருநந்திபுரம் புறப்பட்டுப் போயிருக்கிறார். தங்கபாண்




டியனே சகுவரமூர்த்தியைப் பற்றித் தவறிக்கூட என்னிடம் ஒரு வார்த்தை பேசியதில்லை. இவையெல்லாம் தான் என் சந்தேகத்துக்கு ஆதாரங்கள்."

"குங்குமத் துறையில் இத்தனை நாட்கள் இருந்தீர்களே. தங்கபாண்டியனிடம் இதைப் பற்றி நீங்கள் ஒன்றுமே பேசவில்லையா?"

"பேசாமல் என்ன? எப்போதும் புலம்பிக் கொண்டுதான் இருந்தேன், சுலோ. அவனும் அனுதாபப்படுவான். காசிலிங்கத்தைப் பார்த்ததாகக் கூறிய போதுதான் அவன் தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான். அவர் யாரைக் குற்றவாளியென்று கருதுகிறார் என்று கேட்டான். ஆனால் அப்போது அவன் மீது எனக்குச் சிறிதும் சந்தேகம் எழவில்லை. ஏன் தெரியுமா? அவன் அதற்கு முன்னெல்லாம் வெறும் கோழையாய் இருந்தான். சொக்கையா அவனைப் பார்க்கக் கல்லூரிக்கு வருகிறார் என்று தெரிந்தால் கண்ணீர் விட்டு அழுவான். அவரைப் பார்க்கவே அஞ்சுவான். சொக்கையாவிடம் பயப்படக் கூடாதென்றும், அவரை எதிர்த்து நின்று, அவருடைய அட்டூழியங்களையெல்லாம் தடுக்க வேண்டும் என்றும் நான்தான் அவனுக்குத் தைரியம் கூறி வந்தேன். அதனால் தான் அவன் செய்திருக்கலாம் என்ற எண்ணமே எனக்கு எழாமல் போய் விட்டது. சீமை செல்வதற்கு முன் என்னை வழியனுப்ப இவன் வந்த போதுகூட 'உன் மீது குற்றம் சுமத்தப் பார்ப்பார்கள். ஜாக்கிரதையாயிரு' என்று கூறினேன்.

அவன் ஊருக்குச் சென்றதும் பெட்டி படுக்கைகளை எடுத்து வந்ததும் யாருக்கும் தெரியாது என்று அறிந்து மன நிம்மதிகூட அடைந்தேன். ஆனாலும் தங்க பாண்டியன் இப்படி என்னை ஏமாற்றக் கூடும் என்று நினைத்துப் பார்த்ததே இல்லை."

"ஒரு வகையில் அது உங்கள் நலனுக்கே இருக்கலாம் மிஸ்டர் ராய். சொக்கையாவைத் தங்கபாண்டியனுக்கு எப்போதும் பிடிக்காது. நீங்கள் அவனுடைய பயத்தைப் போக்கி, சொக்கையாவை எதிர்த்து நிற்க வேண்டுமென்று போதித்து வந்தீர்கள். அவனுக்கு ஏற்கனவே இருந்த துவேஷம் உங்கள் போதனையினால் அதிகரித்து, பழி வாங்கும் எண்ணத்தைத் தூண்டியிருக்கலாம். நீங்கள் அவனைக் கோழை என்று நினைத்ததாலேயே, தான் கோழையல்ல என்பதைத் தனக்கே நிரூபணம் செய்து கொள்ள வேண்டுமென்று அவனுக்கு வேகம் பிறந்திருக்கும். சகுவரமூர்த்தியும் சேர்ந்து தூபம் போடவே இப்படி முடிந்திருக்கலாம். எப்படியிருந்தாலும் நீங்கள் இன்ஸ்பெக்டர் தாமோதரத்தைக் கலந்து கொண்டு மீதிக் காரியங்களைச் செய்யுங்கள்" என்றாள் சுலோசனா.

"சுலோசனா! நான் இன்று ஊருக்குப் புறப்படுகிறேன். தாமோதரத்தைப் பார்க்கப் போக வேண்டியிருப்பதால் இந்துவைப் பார்க்க நேரமில்லை. அவளை இன்று பார்க்க எனக்குத் தைரியமும்

# மகத்தான விலைக் குறைவு

மிக நவீனமான 1956-ம் வருஷ ஸ்பெஷல் மாடல்கள். மிக மிக நேர்த்தியான மெஷின் & டிசைன் ஒவ்வொன்றும் 3 வருஷங்கள் உத்திரவாதம்

இலவசம்: ஏதாவது மூன்று கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு கைக் கடிகாரமும், இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு அலாரம் டைம்பீஸும், ஒரு கடிகார ஆர்டருக்கு ஒரு கோல்டு கேப் பவுண்டன் பேனாவும் இனாம்.



**நெ. 1181 வாட்டர் புரூப் 10½ சைஸ்**

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 36/- |
| 17 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 40/- |
| 17 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 54/- |
| 21 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 56/- |
| 21 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 64/- |



**நெ. 1183 வளைவு வடிவம் 7¾ சைஸ்**

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் பிரைட் க்ரோம் | 32/- |
| 15 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 38/- |
| 15 | ஜுவல்ஸ் ரோ. கோ. (விவர்) | 63/- |



**நெ. 1185 தட்டை வடிவம் 10½ சைஸ்**

| | | |
|---|---|---|
| 5 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 19/- |
| 5 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு C/S | 21/- |
| 15 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 28/- |
| 17 | ஜுவல்ஸ் க்ரோம் டேல் | 37/- |
| 17 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 42/- |



**நெ. 1186 லேடீஸ் 5½ சைஸ்**

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் பின் லெவர் R/G | 45/- |
| 17 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 48/- |
| 17 | ஜுவல்ஸ் .. (20 மைக்ரோன்) | 65/- |
| 21 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 68/- |



**நெ. 1182 வாட்டர் புரூப் 8¾ சைஸ்**

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 40/- |
| 17 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 44/- |
| 17 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 54/- |
| 21 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 58/- |
| 21 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 68/- |



**நெ. 1184 டோனோ வடிவம் 7¾ சைஸ்**

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் பிரைட் க்ரோம் | 34/- |
| 15 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 40/- |
| 15 | ஜுவல்ஸ் ரோ. கோ. (விவர்) | 65/- |



**பாக்கெட் கடிகாரம்**

ஜுவல் உள்ளது 18/- — 15 ஜுவல்ஸ் 27/-

**அலாரம் டைம்பீஸ்**

| | | |
|---|---|---|
| 3" டயல் அலாரம் | ... | 15/- |
| ஸ்மித் அலாரம் 4½" டயல் | ... | 18/- |
| உயர்ரக அலாரம் 5" டயல் | ... | 22/- |
| டபுள் பெல் 5" டயல் | ... | 18/- |

**PIONEER WATCH CO.,** POST BOX NO. 11428, CALCUTTA-6

வராது. நீங்கள் போய் அவனுக்குத் தேறுதல் சொல்லுங்கள். எல்லா விஷயங்களையும் கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்கள். நான் இரண்டு நாட்களில் வந்து விடுகிறேன்'' என்று கூறி விட்டுக் கிளம்பினேன். அறைக் கதவைத் திறந்ததும் ஒரு தந்தியைக் கொண்டு வந்து ஒரு சிப்பந்தி கொடுத்தான். அவசரமாகப் பிரித்துப் படித்தேன். ''தங்கபாண்டியன் காலமானார்'' என்ற வாக்கியம் அதில் காணப்பட்டது. என்னுடைய ஏமாற்றத்தையும், துயரத்தையும் வார்த்தைகளினால் வெளியிட முடியுமா? காசிலிங்கம் இந்துவைக் காப்பாற்ற அப்படிப் பொய் சொல்கிறார் என்று தீர்ப்பாகி, உண்மையான குற்றவாளியும் தன் குற்றத்தை ஒப்புக் கொள்ளாமல் இறந்து போய் விட்டால் இந்துவின் கதி என்ன? எனக்கு உலகம் சுழன்றது. பூகம்பமும், எரிமலையும், புயலும் பிரளயமும் என் இதயத்தில் குமுறி வெடித்தன. கடவுள் என்று ஒருவர் இருந்தால் அவர் செத்துப் போயிருக்க வேண்டும் என்று கூட நினைத்தேன்.

அதன் பிறகு நடந்ததெல்லாம் கனவில் கண்ட மாதிரி இருக்கிறது. என் மனம் அவ்வளவு தூரம் பேதலித்துப் போய் விட்டது. என்னுடைய ஒரே நண்பன் என்று நான் கருதி வந்த தங்கபாண்டியன் இப்படி ஒரு காரியம் செய்து விட்டு அதை என்னிடம் கடைசி வரையில் ஒப்புக் கொள்ளாமல் இருந்து விட்டானென்ற வேதனை என் அறிவைக் கலங்கச் செய்து விட்டது.

இன்ஸ்பெக்டர் தாமோதரத்தினிடம் எல்லா விஷயங்களையும் ஒருவாறு கூறி விட்டுக் குங்குமத் துறைக்குச் சென்றேன். தங்கபாண்டியனின் சமக்கிரியைகள் முடிந்து விட்டிருந்தன. என்னைக் கண்டதும் சின்னம்மாவும் லக்ஷ்மியும் கதறி அழுதார்கள். நானும் கண்ணீர் விட்டேன். ஆனால் முழுவதும் தங்கபாண்டியனின் மறைவுக்காக மட்டும் வருந்தினேன் என்று கூற முடியாது. என் உள்ள நிறைவில் ஒரு கள்ளம் புகுந்து கொண்டுதான் இருந்தது. அதைக் குறித்து எனக்கு வெட்கமாக இருந்ததே தவிர அதைப் போக்கிக் கொள்ள முடியவில்லை. தங்கபாண்டியன் இறந்த அன்று சகுவரமூர்த்தி அவனை வந்து பார்த்துப் பேசிக் கொண்டிருந்தார் என்று தெரிந்ததும் எனக்குக் கோபம் அதிகமாயிற்று.

தங்கபாண்டியனுடைய வக்கீல் என்னுடன் பேச வேண்டுமென்று சொன்ன போதுதான் எனக்கு அறிவு சற்றுத் தெளிவடைந்தது. அவர் அனுப்பியிருந்த காரில் திருநந்திபுரத்துக்குப் போய்ச் சேர்ந்தேன்.

வக்கீல் கூறிய விஷயங்கள் என்னை ஆச்சரியத்தில் மூழ்க அடித்து விட்டன. தங்கபாண்டியனை நான் மனப் பூர்வமாக மன்னித்து விடும்படியான விஷயங்களை அவர் கூறினார். தங்கபாண்டியன் தான் செய்த குற்றத்தை எழுதச் செய்து கையெழுத்துப் போட்டிருந்தான். திருநந்திபுரம் செஷன்ஸ் கோர்ட் மாஜிஸ்ட்ரேட்டை அழைத்து வரச் செய்து அவருக்கு எதிரில் வாக்குமூலம் எழுதினான். அவரும் கையெழுத்துப் போட்டிருந்தார். அதைத் தவிர சொக்கையா வினால் எடுத்துக் கொள்ளப்பட்ட மந்திர மூர்த்திப் பண்ணையாரின் நிலங்களை யெல்லாம் என் பெயருக்கு அவன் எழுதி வைத்திருந்தான். லக்ஷ்மியின் கணவரும் அதற்குப் பூரண சம்மதம் கொடுத்தாராம்.

''இதையெல்லாம் எனக்கு நீங்கள் ஏன் முன்னமேயே தெரிவிக்கவில்லை?'' என்று வக்கீலைக் கேட்டேன்.

''சகுவரமூர்த்திக்கு எந்த விஷயமும் தெரியக் கூடாது என்று நான் ரொம்ப ரகசியமாக இவைகளைச் செய்தேன்.''

''அப்போது நான் நினைத்தது சரி தானா? சகுவரமூர்த்தி தான் தங்கபாண்டியனைத் தூண்டி விட்டிருக்க வேண்டும் என்று நினைத்தேன். அப்படியானால் சகுவரமூர்த்திக்குத் தங்கபாண்டியன் இரண்டு நாட்களுக்கு முன்பு எதற்காகக் கடிதம் எழுதினான்?''



கிழக்கிந்திய ரயில்வே ஜெனரல் மானேஜர் ஸ்ரீ எல். சாரங்கபாணி அவர்களின் குமாரி சௌ சரோஜாவுக்கும் தஞ்சை ஸ்ரீ டி. எஸ். சாரங்கபாணி அய்யங்கார் அவர்கள் குமாரன் ஸ்ரீ டி. எஸ். கண்ணன் ஐ. ஏ. ஏ. எஸ். க்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!



வந்தவர் :— என்னய்யா ! ரேஸில் உமக்கு நாலாயிரம் ரூபாய் வந்ததாம். சந்தோஷமாக இல்லாமல் இப்படி.........!

உட்கார்ந்திருப்பவர் :— எப்படி சந்தோஷப் படுவது? நாளைக்கு ரேஸில் அந்தப் பணம் போய் விடப் போகிறதே !

---

"அவருக்கு எழுத வேண்டியது தன் கடமை என்று எண்ணினான். இந்துமதி தண்டனை அடைவதைத் தன்னால் பொறுக்க முடியாதென்றும், தான் குற்றவாளி என்பதை ஒப்புக் கொண்டு விடப்போவதாகவும் எழுதினான். ஆனால் அவருக்கு மற்ற விஷயங்கள் எதுவும் தெரியாது. ஆகவேதான் அவர் பாண்டியனைப் பார்க்க வந்த போதுகூட யாரும் அவரைத் தடுக்க வில்லை. லக்ஷ்மியின் கணவர், லக்ஷ்மி, நான் மூவரும் அருகில் இருந்தபடியால் அவரால் ஒன்றும் பேச முடிய வில்லை. தனியாக இரண்டு நிமிஷம் பேசினார்கள். அப்போது அவர் எதையும் ஒப்புக் கொள்ள வேண்டாம் என்று அவனிடம் கூறினாராம்."

"தங்கபாண்டியன் இறந்து விட்டான் என்று தெரிந்ததும் ஈசுவரமூர்த்தி இங்கு வந்திருப்பது எனக்குத் தெரிந்திருந்தபடியால் அவரே அவனைக் கொன்று விட்டாரோ என்று கூட நினைத்தேன்."

"உங்கள் மனம் ரொம்பக் குழம்பிப் போயிருக்கிறது, மிஸ்டர் ராய். கவலைப் படாதீர்கள். அமரதாராவை விடுதலை செய்வது என்னுடைய பொறுப்பு. இந்த ஊரில் அவளுடைய வழக்கை விசாரணை செய்த மாஜிஸ்ட்ரேட் தான் வாக்குமூலம் எழுதும் போது அருகில் இருந்தார். கவலையே வேண்டாம்."

"இருந்தாலும் இத்தனை குற்றங்கள் செய்த ஈசுவரமூர்த்தி தப்பித்துக் கொள்வது ரொம்ப அநியாயம். தங்கபாண்டியன் அவருடைய தூண்டுதலினால் தான் செய்ததாக எழுதவில்லையே ?"

"ஈசுவரமூர்த்திக்கு எதிராக எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன. அதைப் பற்றியும் நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. தங்கபாண்டியனின் தந்தையான பழைய ஜமீன்தாரைக் கொன்றது ஈசுவரமூர்த்தியின் ஆள் தான் என்பதும், சொக்கையா அதற்கு உடந்தை என்பதும், அரண்மனைப் பாதாளக் கிடங்கைச் சோதனை போட்ட போது தெரிய வந்தன. பாதாளக் கிடங்கில் உள்ள ஒரு ரகசிய அறையில் பல கடிதங்கள் இருந்தன. தான் எதிலாவது அகப்பட்டுக் கொண்டால் மற்றவர்களைக் காட்டிக் கொடுத்து விட்டுத் தப்பி விடலாம் என்று எண்ணிச் சொக்கையா அவற்றைப் பத்திரப் படுத்தி யிருக்க வேண்டும். இவையெல்லாம் சமீபத்தில் தான் தங்கபாண்டியனுக்கும் எனக்கும் தெரிய வந்தன.

"தங்கபாண்டியனைச் சொக்கையாவைக் கொன்று விடும்படி தூண்டிவிட்ட போது ஈசுவரமூர்த்தி, சொக்கையா தான் அவன் தந்தையைக் கொலை செய்ததாகக் கூறியிருந்தார். அதற்குக் காரணம் சொக்கையாவுக்கு ஈசுவரமூர்த்தியைப் பிடிக்காமல்போனதுதான். ஈசுவரமூர்த்தியின் ஆள் வெகு நாட்களாக ஜமீன்தாரைத் தொடர்ந்து கொண்டிருந்தது சொக்கையாவுக்குத் தெரியும். இதற்கு அவரும் உடந்தையாகவே இருந்தார். பின்னால் இருவருக்கும் மனஸ்தாபம் வந்துவிடவே சொக்கையா இந்த விஷயத்தை வெளியிட்டு விடப் போவதாக ஈசுவரமூர்த்தியைப் பயமுறுத்தி யிருக்கிறார். ஈசுவரமூர்த்தி அவர் இதை வெளியிடாமலிருப்பதற்காக வென்று பத்தாயிரம் ரூபாய் கொடுக்க ஒப்புக் கொண்டிருக்கிறார். அந்தக் கடிதம் ரகசிய அறையிலிருந்து அகப்பட்டிருக்கிறது. இதனாலேயே அவர் தங்கபாண்டியனைத் தூண்டி யிருக்கிறார். அவனுக்கும் சொக்கையா மீது துவேஷம் ஏற்பட எத்தனையோ காரணங்கள் இருந்தன. எல்லாவற்றுக்கும் மேலாக, அந்தப் பாதகன் தன் நண்பனுடைய காதலியை ஏமாற்றுகிறான் என்பதைத் தெரிந்து கொண்ட போது அவனால் தாங்க முடியவில்லை."

"என்ன, என்ன கூறினீர்கள் ?"

"ஆமாம் ! உன்னுடைய சாமான்களை எடுத்து வருவதற்காகப் பாண்டியன் குங்குமத் துறைக்கு வந்தான் அல்லவா? ஊருக்குச் சற்றுத் தூரத்தில் வண்டி பெட்ரோல் இல்லாததால் நின்று விட்டது. ஆகவே பெட்ரோல் எடுத்து வர அரண்மனைக்கு நடந்து சென்றான்.

வாசலில் நுழையப் போகும் சமயத்தில் சொக்கையாவின் அறையிலிருந்து ஒரு சிறுவன் கடிதத்துடன் வெளியே செல்வதைப் பார்த்தான். அவனைத் தொடர்ந்து போய் மிரட்டி அதைப் பிடுங்கிப் படித்திருக்கிறான். அதிலிருந்த விஷயம் அவனுடைய ஆத்திரத்தைக் கிளறி விட்டிருக்கிறது. ஆகவே பாதிரித் தோட்டத்துக்குப் போய்க் கத்தியுடன் ஒளிந்து கொண்டிருக்கிறான். முதலில் அவரைக் கொல்லும் நோக்கமே அவனுக்கு இல்லையாம். தற்காப்புக்காகத்தான் எடுத்துக் கொண்டானாம். ஆனால் இந்துமதியை அந்தப் பாதகன் நெருங்குவதைப் பார்த்துச் சகிக்க முடியவில்லையாம். அவனை நேருக்கு நேர் பார்த்தால் தன் தைரியம் பஞ்சாய்ப் பறந்து விடுவதை நினைத்து அவனைத் தீர்த்து விட்டான். இதை அவனே என்னிடம் கூறினான்.''

நான் விம்மி விம்மி அழுதேன். இந்துமதியைக் காப்பாற்ற அவன் எடுத்துக்



கொண்ட சிரத்தையை என் நெஞ்சம் போற்றியது. இருந்தாலும் தவறு தவறுதான் அல்லவா? நல்ல வேளையாக அவனைச் சீக்கிரமாகவே யமன் அழைத்துக் கொண்டு விட்டான். இல்லாவிட்டால் அவன் தண்டனை அடைவதை நான் பார்க்கும்படி நேரிட்டிருக்கும்.

இந்த விவரங்களையெல்லாம் தெரிந்து கொண்ட பிறகு என் உள்ளத்தில் ஆழ்கடலின் அமைதி நிலவியது. வெகு நாட்களாக ஓய்வில்லாமல் அடித்துக் கொண்டிருந்த சூறாவளி அடங்கிச் சாந்தம் குடி கொண்டது.

* * *

இந்துவின் கரத்தைப் பிடித்து நான் லாக் அப்பிலிருந்து அழைத்து வந்து சரியாக ஒரு மாதம் ஆனதும், குங்குமத் துறையில் பண்ணையார் மந்திரமூர்த்தியின் வீட்டில் அவளுடைய கழுத்தில் மாலையிட்டு மணந்து கொண்டேன்.

சுலோசனாவும், ரமேஷும், ராஜாராமும் வந்திருந்து உற்சாகமாக நடத்தி வைத்தார்கள். முனிசாமி கவுண்டரும் அவரது பத்தினியும் மனம் உவந்து ஆசி கூறினார்கள். சந்திரமணியும், பண்ணையார் மந்திரமூர்த்தியும் சூக்ஷ்ம ரூபத்தில் வந்து ஆசி கூறியிருப்பார்கள்.

காசிலிங்கத்தைத் திருநந்திபுரத்தில் தான் வைத்திருந்தார்கள். நாங்கள் விவாகம் செய்து கொண்ட அன்றே அவரை மணக் கோலத்துடன் சென்று பார்த்தோம். கண்களில் நீர் ததும்ப, "நீங்கள் இருவரும் மண வாழ்க்கையின் பூரண இன்பத்தையும் அனுபவிக்க வேண்டும். இறைவன் உங்களையாவது சந்தோஷமாக வைக்கட்டும்'' என்றார். நாங்களும் விம்மி விட்டோம்.

சுலோசனா அன்று மாலை எங்களுடன் பேசிக் கொண்டிருந்த போது, "இந்து! உன் தந்தையின் கதியைக் குறித்து நீ வருத்தப்படாதே. என் தகப்பனாரையும் கைது செய்து விட்டார்கள். சுகவாசமூர்த்தி தன் விசாரணையின் போது அவரையும் காட்டிக் கொடுத்து விட்டார். குற்றம் செய்தவர்கள் தண்டனை அடைவதை நம்மால் தவிர்க்கமுடியாது. அதற்காக வருந்தியும் பயனில்லை'' என்று சொன்னாள்.

இந்துவும் கண்ணீருடன் அதை ஆமோதித்தாள்.

"நானும் இந்த வழக்குகள் முதலிய விவகாரங்களில் ஈடுபடப் போவதில்லை, சுலோசனா! இனிமேல் நாங்கள் இருவரும் இங்கேயே தங்கியிருந்து நிம்மதியாக விவசாய வாழ்க்கையில் ஈடுபடப் போகிறோம்'' என்றேன்.

ராஜாராம் உடனே "ஐயையோ! இந்துமதி நடிப்பதை நிறுத்தி விட்டால் என் கதி என்ன ஆவது?'' என்று கேட்டார்.

"நான் நடித்ததெல்லாம் எனக்குப் போதும், ராஜாராம். இனிமேல் நான் வாழ்நாளில் எந்தப் படத்திலும் நடிக்கவே மாட்டேன். எனக்கு ஓய்வுதான் தேவை. பணம் வேண்டியதில்லை'' என்றாள் இந்து.

"உனக்கு நடிப்பதில் விருப்பமிருந்தால் நான் தடை சொல்லவே மாட்டேன், இந்து!'' என்றேன்.

"போதுமே, இந்தப் பேச்சு! வேறு ஏதாவது பேசுங்கள். விவசாயத்தைப் பற்றிச் சொல்லுங்கள்'' என்றாள்.

அதற்கு வள்ளி விடவில்லை. அமரதாராவின் போட்டோப் படங்கள் உள்ள ஆல்பங்களைக் கொண்டு வந்து புரட்டிப் பார்க்க ஆரம்பித்தாள். நானும் அவற்றைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்தேன்!

(முற்றும்)

# ரகுபதி ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 33

குருக்ஷேத்திர யுத்தம் ஒன்று நம் உள்ளத்தில் எப்போதும் நடைபெற்று வருகிறது. வழக்கப்பட்டுப் போன தீய குணங்களோடு சண்டையிட்டு பாவத்துக்குத் தோல்வி கொடுத்து நன்மை வெற்றி பெறச் செய்வது மனிதனுடைய கடமை; பிறந்ததன் பயன். இது நாம் செய்ய வேண்டிய யுத்தம். இந்த யுத்தத்தில் வெற்றி பெறுவதற்கு சாஸ்திரம் நமக்கு வழி காட்டுகிறது. இல்லாவிடில் அந்த சாஸ்திரத்தில் பயனில்லை. இந்த யுத்தத்தில் வெற்றியடைவதற்குக் குறுக்குப் பாதை கிடையாது. பயம் என்பதே பெரிய பாபம். கோழைத் தனத்தினால் ஹிம்சை செய்கிறோம். கொலை அட்டகாசம் முதலிய பாவச் செயல்களைவிட கோழைத்தனம் மக்களுக்குப் பெரிய சத்துருவாகும். தெய்வ பக்தி குறைந்தால்தான் கோழைத்தனம் உண்டாகிறது. ஆண்டவனுடைய குணங்கள் அறியாமலிருப்பதால் பயம் ஏற்படுகிறது. என்னுடைய அனுபவத்தை வைத்துச் சொல்லுகிறேன். உள்ளம் கரைந்து பிரார்த்தனை செய்வதே பயத்தைத் தீர்க்கும். பாவ வழக்கங்களிலிருந்து விடுபடுவோம். நமக்குள் ஆண்டவன் கோயில் கொண்டிருக்கிறான் என்கிற நம்பிக்கை இருந்தாலே தான் பிரார்த்தனை செய்து வெற்றி பெற முடியும்.

ஆண்டவனுக்கும் சைத்தானுக்கும் யுத்தம் என்று கிறிஸ்தவர்களும் இஸ்லாமியர்களும் சொல்வது உள்ளத்தில் நடக்கும் இந்தக் குருக்ஷேத்திர யுத்தத்தைத்தான். பார்ஸி மதமும் இந்த யுத்தத்தைத்தான் அஹுரமஸ்த்துக்கும் அரிமானுக்கும் யுத்தம் என்று சொல்வார்கள். இந்து புராணங்களில் சொல்லப்படும் யுத்தங்களும் இதுவே. அவர்களோடு சேருவோமா, தேவர்களோடு சேருவோமா என்பது கேள்வி. தேவர்களோடு சேருவதென்றால் அதற்கு முதல்படி பிரார்த்தனையாகும். அசுரர்களிடமிருந்து மீள வேண்டுமானால் ஆண்டவனோடு உடன்படிக்கை செய்து கொள்ளவேண்டும். அந்த உடன்படிக்கைக்குத்தான் பெயர் பிரார்த்தனை.

வாயினால் சொல்லும் மந்திரம் மட்டும் பிரார்த்தனையாகாது. உள்ளத்திலிருந்து பிரார்த்தனை தோன்ற வேண்டும். அப்போது ஒவ்வொரு செயலும் எண்ணமும்கூட பிரார்த்தனையாகும். பிரார்த்தனை செய்யும் சமயத்தில் ஒரு பாப எண்ணம் உள்ளத்தில் தோன்றினால் செய்யும் ஜெபம் மோசம் என்பதை அறியலாம். மனம், வாக்கு, காயம் மூன்றும் சுத்தம் அடைந்தால், செய்யும் பிரார்த்தனை உண்மை பிரார்த்தனையாகும். மூன்று வித பாபத்தின் தாக்குக்கும் உண்மையான பிரார்த்தனை ஒரு கேடயமாகும்.

இப்படி உண்மையாகப் பிரார்த்தனை செய்யும் முயற்சியில் முதல் முதலில் வெற்றி அடையாமலிருக்கலாம். நம்மோடு நாமே யுத்தம் செய்ய வேண்டியதாகும். வருஷக்கணக்காகவும் முயற்சி செய்ய வேண்டியதாகும். பொறுமையுடன் முயல வேண்டும். தோல்விக்கு மேல் தோல்வி இருளுக்கு மேல் இருளாயினும் தைரியத்துடன் பயமின்றிப் போர் புரிய வேண்டும். பிரார்த்தனை செய்பவனுக்கு யுத்த களத்திலிருந்து பின்வாங்கி, புறங்காட்டி ஓடுவது என்பது கிடையாது.

நாம் சொல்வது ஒரு கட்டுக் கதையல்ல; வெறும் கற்பனைச் சித்திரமல்ல. பிரார்த்தனையைக் கொண்டு எல்லா இடையூறுகளையும் தாண்டிச்

சென்ற பெரியோர்களுடைய அனுபவத்தையும் என்னுடைய அனுபவத்தையும் கொண்டு சொல்லுகிறேன். என்னைப் பொறுத்த மட்டில் பக்தியும் பிரார்த்தனையும் ஒன்றே யாகும். ஏதோ ஒரு சம்பவத்தையாவது அல்லது சில நாட்களில் நடந்த நிகழ்ச்சியைக் கொண்டாவது நான் பேசவில்லை. நாற்பது ஆண்டுகளின் அனுபவத்திலிருந்து சொல்லுகிறேன்; வாழ்க்கையில் வெற்றியும் தோல்வியும் எல்லாம் கண்டிருக்கிறேன். அந்தகாரம் மூடிய நாட்களுண்டு. நிராசையாகப் போன நாட்களும் உண்டு. அதைரியப் பட்டிருக்கிறேன். பயந்திருக்கிறேன். அகங்காரத்தால் மோசமும் போயிருக்கிறேன். ஆயினும் என்னுடைய பக்தியானது கஷ்டங்களையெல்லாம் தாண்டுவதற்கு உதவியிருக்கிறது. என்னுடைய பக்தி மிகக் குறைவான பக்தி. அது இன்னும் பூரணமடையவில்லை என்பதை அறிவேன். ஆயினும் அந்தக் குறைவுபட்ட பக்தியே இதுவரையில் நான் கண்ட இடையூறுகளை யெல்லாம் அகற்றவும் தாண்டவும் எனக்குச் சக்தி தந்திருக்கிறது.

ஆண்டவனோடு நாம் வியாபாரம் செய்ய முடியாது. நம்முடைய ஆணவத்தை அகற்றிவிட்டு நாம் நம்மைச் சூன்யமாகச் செய்து கொண்டால் தான், அவன் பாதங்களில் வேறு கதியில்லை என்று விழுந்தால்தான் நமக்குள் தோன்றும் தீய எண்ணங்கள் விலகும். உண்மை விமோசனத்துக்கு வழி வேறில்லை. முற்றிலும் நம்மை நாம் அவனுக்கு அர்ப்பணம் செய்து விட்டால்தான் விமோசனம் பெறுவோம். நம்மை நாம் முற்றிலும் அர்ப்பணம் செய்து விட்டு ஒன்றுமில்லாமல் நின்றோமானால் பிற ஜீவன்களுக்குத் தொண்டு செய்யும் தொண்டர்களாகிப் போவோம். அந்தத் தொண்டே ஆனந்தமாகி விடுகிறது. வேறு விளையாட்டும் வேடிக்கையுமே வேண்டியதில்லை. புத்துயிர் பெற்று மற்றவர்களுக்குப் பணி செய்வதிலேயே மகிழ்ச்சி கண்டு அதற்கு வேண்டிய தேக பலமும் மனோபலமும் அடைவோம். [யங் இந்தியா 20-12-28]

## ஓரியண்டல் கம்பெனியை உருவாக்கிய பிரமுகர்

இந்தியாவில் உள்ள இன்ஷூரன்ஸ் கம்பெனிகளுக்குள் மிகச் சிறந்து விளங்கும் ஓரியண்டல் லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனியின் மானேஜர் பதவியிலிருந்து விலகும் ஸ்ரீ எல். எஸ். வைத்தியநாதன், எம். ஏ., எப். ஐ. ஏ., எப். எஸ். எஸ். ஜே. பி. அவர்களைக் கௌரவிப்பதற்காக ஜூன் மாதம் 7-ம் தேதி பம்பாயில் ஒரு வைபவம் நடந்தது. அப்போது ஓரியண்டல் கம்பெனி அதிகாரிகளும் சிப்பந்திகளும் பிரசன்னமாகி யிருந்தனர். வைபவத்துக்கு சர் கோவாஸ்ஜி ஜிஹாங்கீர் தலைமை வகித்தார். அவ்வமயம் பம்பாயில் உள்ள மேற்படி கம்பெனிக் கட்டடத்தில் ஸ்ரீ வைத்தியநாதனின் உருவப்படம் திறந்து வைக்கப்பட்டது.



மானேஜர் பதவியிலிருந்து விலகும் ஸ்ரீ வைத்தியநாதனுக்கு வெள்ளிப் பேழையுடன் பட்டுச் சுருளில் அச்சடிக்கப்பட்ட உபசாரப் பத்திரம் வாசித்தளித்தனர்.

ஸ்ரீ வைத்தியநாதன் எம்.ஏ. முதல் வகுப்பில் முதலாவதாகத் தேறியதிலிருந்து அவர் இன்ஷூரன்ஸ் துறையில் செய்துள்ள அரும் பெரும் சாதனைகளைப் புதிய மானேஜரான ஸ்ரீ கே. ஆர். சீனிவாசன் விவரித்துக் கூறினர். "இந்திய இன்ஷூரன்ஸ் பற்றிய சரித்திரம் எழுதப்படும் போது மேற்படி துறையில் ஸ்ரீ வைத்தியநாதனின் முப்பது வருஷத் தொண்டு பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படும். ஸ்ரீ வைத்தியநாதனின் அப்பழுக்கற்ற நாணயமும் இணையற்ற நிர்வாகத் திறமையும் மற்றவர்களுக்குச் சிறந்த வழிகாட்டியாகும்" என்றார் ஸ்ரீ சீனிவாசன். மிகவும் அடக்கமாகவும் சாதாரணமாகவும் ஆரம்பமான ஓரியண்டல் அஷ்யூரன்ஸ் கம்பெனி இன்று அடைந்துள்ள புகழையும் மகோன்னத நிலையையும், அதில் தாமும் தமது சகாக்களும் எடுத்துக் கொண்ட பங்கையும் ஸ்ரீ வைத்தியநாதன் விவரித்த பின், தம்முடன் ஒத்துழைத்த அதிகாரிகளுக்கும், சிப்பந்திகளுக்கும் நன்றி கூற வைபவம் இனிது முடிவுற்றது.

# நவ பாரத தரிசனம்

ரதி

## 5

**தா**மோதர் பள்ளத்தாக்கு கார்ப்பொரேஷனைச் சேர்ந்த பொகாரோ அணைக்கட்டுப் பிரதேசத்தை நாங்கள் சுற்றிப் பார்த்தபோது, அஸ்தமித்து விட்டது. அப்போது சில மைல்களுக்கு அப்பால் மின்சார விளக்குகள் ஜொலிக்க ஒரு கப்பல் சென்று கொண்டிருந்தது. அதைப் பார்த்தபோது எங்களுக்கு உண்டான ஆச்சரியம் கொஞ்சநஞ்சமல்ல.

"அதோ பாருங்கள், ஒரு அழகான கப்பல் போய்க்கொண்டிருக்கிறது" என்று சுட்டிக் காட்டினார் அருகில் உட்கார்ந்து கொண்டிருந்த என் நண்பர்.

"ஆமாம், ஆமாம்!" என்றனர் சிலர் ஆச்சரியத்துடன்.

அங்கிருந்து நூறு மைல்களுக்கு அப்பால் தான் கடல் இருக்கிறது. சமீபத்தில் உள்ள நதிகளில் கப்பல் போகலாம் என்று நினைப்பதற்கும் இடமில்லை. ஏனெனில், ஒரு நதியிலாவது ஒரு சிறிய படகு போவதற்குப் போதிய தண்ணீர் கூட இல்லை.

எனவே, அவ்வளவு பெரிய அழகிய கப்பல் எங்கே இருந்து வந்தது, எங்கே போகிறது என்ற சந்தேகம் மனத்தில் எழுந்தது!

"ஒருவேளை அருகில் தான் கடல் இருக்கிறதோ, என்னவோ!" என்றார் ஒருவர்.



இதைக் கேட்டதும் எங்களுடன் மோட்டாரில் வந்த பொகாரோ அணைக்கட்டு நிர்வாக அதிகாரிக்குச் சிரிப்பு தாங்க முடியவில்லை.

"அது கப்பலுமில்லை, ஒன்றுமில்லை. பொகாரோ மின்சார உற்பத்தி நிலையம்தான் உங்களுக்கு அப்படித் தோன்றுகிறது" என்று அவர் எங்களுக்கு விளக்கினார்.

அவர் கூறியதைக் கேட்டதும் எங்கள் வியப்பு இரு மடங்கு அதிகமாகியது.

நமது இஞ்ஜினீரிங் மேதாவிகள், தூரத்தில் இருந்து பார்த்தால் கப்பல்போல் தோன்றும் படி பொகாரோ மின்சார உற்பத்தி நிலையத்தை நிர்மாணித்திருக்கிறார்கள்.

இரவில் மின்சார விளக்குகள் ஜொலிக்கும் போது அது தத்ரூபமாகக் கப்பல் போலவே இருக்கிறது!

அது மாத்திரமல்ல, மேற்படி நிலையச் சுவர்களில் கண்களைக் கவரும் அஜந்தாச் சித்திரங்களும் காட்சியளிக்கின்றன! இதிலிருந்து அவர்களுடைய மேதையுடன் ரசிகத் தன்மையும் வெளியாகிறது அல்லவா!

டி. வி. ஸி. அணைக்கட்டுகள் ஒன்றுக்கொன்று பல மைல்கள் தூரத்துக்கு அப்பால் இருக்கின்றன என்று ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறேன். எந்தெந்த நதிகளில் எந்தெந்த அணைக்கட்டுகள் இருக்கின்றன என்பதைப் படத்திலிருந்து நேயர்கள் அறிந்துகொள்ளலாம்.

திலையா, பல்பஹாரி, மெய்தான், கோனார், பாஞ்செட் மலை, பொகாரோ, ஐயார், பர்மோ, தூர்க்காபூர் அணைக்கட்டுகள் டி. வி. ஸி. யைச் சேர்ந்தவை. அவை பாரகர், தாமோதர், பொகாரோ, கோனார் முதலிய நதிகளில் நிர்மாணிக்கப்பட்டிருக்கின்றன. இரண்டொன்றைத் தவிர மற்ற அணைக்கட்டுகளின் நிர்மாண வேலைகள் யாவும் பூர்த்தியாகி விட்டன.

மெய்தானில் மின்சார நிலையம் நிர்மாணிப்பதற்காகப் பிரம்மாண்ட மலையை வெகு தூரம் குடைந்து சென்றிருக்கிறார்கள். அங்கு மேலேயிருந்து தண்ணீர் கசிந்து கொண்டேயிருக்கிறது. சிற்சில சமயங்களில் மேலேயிருந்து பாறைகளும் விழுவது உண்டாம். எனவே, இருள் ஒரு பக்கம், ஈரம் ஒரு பக்கம், பாறை விழும் ஆபத்து ஒரு பக்கம்,—இவ்விதமாகத் தொழிலாளர்கள் பல கஷ்டங்களுக்கிடையே வேலை செய்ய வேண்டியிருக்கிறது.

அத்தகைய வேலையில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள் யாவரும் தனிப் பிறவிகள் என்று வர்ணித்தார் அங்கிருந்த இஞ்ஜினீர். அதாவது

# ஜொலிக்கும் சித்தரஞ்சன்!



சிறு வயதிலிருந்து அவர்கள் மலையைக் குடையும் தொழிலில் ஈடுபட்டுத் தேர்ச்சி பெற்றவர்கள். மற்றத் தொழிலாளர்களால் அவ்வேலை செய்ய முடியாது. மக்களுக்கு ஒளி கொடுப்பதற்காக ஆயுள் முழுதும் மலைக்குகை இருளில் வேலை செய்யும் மேற்படி தொழிலாளர்கள் சிறந்த தியாகிகள் என்பதில் ஐயமில்லை.

இதைத் தவிர தாமோதர் பள்ளத்தாக்கில் தாமிரம், இரும்புக்கனி, நிலக்கரி, அப்பிரகம் முதலிய மற்றும் பல சுரங்கச் செல்வங்கள் இருக்கின்றன. அப் பிரதேசத்தில் ஏராளமான தொழிற்சாலைகளும் இருக்கின்றன.

1949-ம் ஆண்டில் இந்திய இஞ்ஜினீர்களில் சிறந்த பத்துப்பேர்களைத் தேர்ந்தெடுத்து மேற்கொண்டு பயிற்சி பெறுவதற்காக அமெரிக்காவுக்கு அனுப்பி யிருந்தார்கள். அவர்கள் திரும்பி வந்தபின் டி. வி. ஸி. யில் அவர்களுக்கே முக்கிய பதவிகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. எனவே டி. வி. ஸி. இந்தியர்களுடைய நன்மைக்காக இந்தியர்களாலேயே நிர்வாகம் செய்யப்பட்டு வருகிறது.

இவ்வாறாக இந்திய இஞ்ஜினீர்களின் மேதையை உலகத்துக்குப் பறைசாற்றும் டி. வி. ஸி. திட்டங்களை மூன்று நாட்கள் வரையில் நூற்றுக் கணக்கான மைல்கள் சென்று சுற்றிப் பார்த்துவிட்டு, அங்கிருந்து சிந்திரிக்குப் புறப்பட்டோம்.

*  *  *

முற்காலத்தில் தோன்றிய முனிவர் ஒருவர் தம்முடைய தவ வலிமையால் சுண்டெலியைச் சிங்கமாக உரு மாற்றியதாகவும் பூனை யானையாகும்படி செய்ததாகவும் கதைகள் உண்டு. ஆனால், இக் காலத்தில் உள்ள நம் தொழில் நுணுக்க நிபுணர்கள் தங்களுடைய அறிவுத் திறனால் அதைக் காட்டிலும் அதிசயமான சாதனைகளை நம் கண் முன் நிறைவேற்றி யிருப்பதைக் காண்கிறோம்.

இன்று சிந்திரி என்ற வார்த்தையைக் கேள்விப்படாதவர்கள் பாரத நாட்டில் இருக்க முடியாது. அது மாத்திரமல்ல, சிந்திரி இன்று உலகப் புகழ் பெற்று விளங்குகிறது.

சில வருஷங்களுக்கு முன் பீஹார் ராஜ்யத்தில் வெளியுலகத்துக்குத் தெரியாத ஒரு குக்கிராமமாக இருந்த சிந்திரி இன்று ஒரு பெரிய நகரமாக உருமாறி விட்டது. ஆசியாவிலேயே மிகப் பெரிய உரத் தொழிற்சாலை சிந்திரியில் நிர்மாணிக்கப்பட்டு, அது உலகிலேயே ரசாயனத் துறை அற்புதங்களில் ஒன்றாக விளங்கி வருவது இந்தியாவுக்குப் பெருமையாகும்.

இருபத்தைந்து கோடி ரூபாய் செலவில் நிர்மாணிக்கப்பட்டு 1951—ல் ஆரம்பமான சிந்திரி உரத்தொழிற்சாலை, ஐந்து ஆண்டுகளுக்குள் இவ்வளவு உன்னத நிலையை அடைந்திருப்பது மகத்தான ஆச்சரியம் அல்லவா!



ஜெயமணி






*சமீபத்தில் சீனத் தலைநகர் பீகிங்கில் பாரதக் கவிஞர் காளிதாஸர், ஜெர்மானியக் கவிஞர் ஹெய்ன், ருஷ்ய நாவலாசிரியர் டோஸ்டோவஸ்கியின் ஞாபகார்த்த தினம் கொண்டாடினார்கள். அப்போது காளிதாஸனின் சாகுந்தலத்திலிருந்து ஒரு காட்சியை நடித்தார்கள்.*

---

அங்கு வருஷா வருஷம் மூன்றரை லட்சம் டன் அம்மோனியம் ஸல்பேட் என்ற ரசாயன உரம் உற்பத்தியாவதால், பன்னிரண்டு கோடி ரூபாய் வரையில் வெளிநாடுகளுக்குப் போகாமல் மிச்சப்படுத்த முடிகிறது.

உரத்துக்கு அதிக விலை கொடுத்தும் வெளிநாடுகளையே நம்பியும் வந்த இந்திய விவசாயிகளுக்கும் தேசத்துக்கும் சிந்திரி உரத் தொழிற்சாலை ஒரு வரப்பிரசாதமாக அமைந்திருக்கிறது!

* * *

**சி**ந்திரி கூறும் ருசிகரமான கதையைக் கேட்போம் :

அபரிமிதமான சுரங்கச் செல்வத்தைப் பெற்றுள்ள பாரத நாட்டில், கந்தகம் மாத்திரம் கிடைப்பது அரிதாக இருக்கிறது. எனவே, இந்தியா வருஷத்துக்குச் சுமார் இரண்டு கோடி ரூபாய் பெறுமானமுள்ள கந்தகத்தை இறக்குமதி செய்ய வேண்டியிருந்தது. சிந்திரி தொழிற்சாலை ஏற்பட்டதிலிருந்து முதலாவதாக மேற்படி கஷ்டத்துக்கு முற்றுப் புள்ளி வைத்தார்கள். அதாவது ஜிப்ஸம் என்ற சுக்கான் மாவிலிருந்து கந்தகம் உற்பத்தி செய்யும் அற்புத வழியைக் கண்டு பிடித்தார்கள்.

எனவே, இந்தியாவின் தற்காப்புக்கு, பொருளாதார சுபிட்சத்துக்கு, இன்று நிலக்கரிக்கும் இரும்புக்கும் அடுத்தபடியாக ஜிப்ஸம் முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. சிந்திரி உரத் தொழிற்சாலையைத் தவிர மற்றும் பல ரசாயனத் தொழிற் சாலைகளுக்கும் ஜிப்ஸம் இன்றியமையாத சாதனமாகி யிருக்கிறது. ஏன், சிமெண்ட் உற்பத்திக்குக் கூட ஜிப்ஸம் அத்தியாவசிய மானதுதான்.

ஜிப்ஸமும் வேறு சரக்குகளும் பலவித யந்திரங்களின் வழியாகச் சென்று உருமாறிக் கடைசியில் சீனி சர்க்கரையைப் போல் தூய வெண்மையான அம்மோனியம் ஸல்பேட் என்ற உரமாக வெளிவருவதைப் பார்க்கும் போது, ஏதோ ஜாலவித்தை போல் தோன்றுகிறது. இறுதியில் யந்திரங்கள் அந்த உரத்தைச் சாக்குகளில் போட்டு மூட்டைகளாகத் தைத்து அப்பால் ஆயிரக் கணக்கில் தள்ளும் போது, அவை ஜீவசக்தியுள்ள யந்திரங்களின் சாதனைகளாகவே தோன்றுகின்றன !

சிந்திரி உரத் தொழிற்சாலையில் இது வரையில் 37 கோடி ரூபாய் பெறுமானமுள்ள 11 லட்சம் டன் உரம் உற்பத்தியாகி யிருக்கிறது. அதன் பலனாக 60 கோடி ரூபாய்க்கு மேற்பட்ட உணவு நமக்குக் கிடைத்திருக்கிறது. சிந்திரித் தொழிற்சாலை ஏற்படா விடில் தொண்ணூற்றேழு கோடி ரூபாயும் வெளிநாடுகளுக்குச் சென்றிருக்கும் அல்லவா !

**ம**ற்றும், சிந்திரி உரத் தொழிற்சாலை பாரத மக்களுக்கு உயிர்நாடி போன்றது என்பதைக் கீழ்க்கண்ட புள்ளி விவரங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

தற்போது பாரத நாட்டின் ஜனத்தொகை வருஷத்துக்கு ஐம்பது லட்சம் வீதம் பெருகி வருவதாக மதிப்பிட்டிருக்கிறார்கள். அதன்படி 1970 ல் இந்தியாவின் ஜனத்தொகை 45 கோடியாக உயர்ந்து விடும் என்று கூறப்படுகிறது. எனவே, இந்தியாவின் உணவு உற்பத்தி அதிகமானாலன்றி, ஜனத்தொகை உயர்வைச் சமாளிப்பது எங்ஙனம் சாத்தியமாகும் !

எனவே, ஒவ்வோர் ஏக்கர் நிலத்திலும் உணவு உற்பத்தி பெருகுவது ஒவ்வோர் ஏக்கரிலும் உபயோகிக்கும் உரத்தின் தரத்தையே பொறுத்திருக்கிறது என்பது நிச்சயம்.

அதனால்தான், சிந்திரியைப் போல் குறைந்த பட்சம் இன்னும் மூன்று தொழிற்சாலைகள் இந்தியாவில் ஏற்பட வேண்டும் என்பது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வற்புறுத்தப் பட்டிருக்கிறது. அதில், புதிய உரத் தொழிற்சாலைகளுக்காக நூறு கோடி ரூபாயும் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள்.

தலைமுறை தலைமுறையாக மக்களின் சந்தோஷ வாழ்வுக்கு இன்றியமையாத உணவைப் பெருக்குவதற்காக நூறு கோடி என்ன, ஆயிரம் கோடி ஒதுக்கி வைத்தாலும் தகும் எனலாம் !

**நீ**ங்கள் எப்போதாவது கல்கத்தா–டில்லிப் பாதையில் ரயில் வண்டியில் செல்ல நேர்ந்தால், கல்கத்தாவிலிருந்து சுமார் 150 மைல் தூரத்தில் உள்ள ஒரு நகரம் திடீரென்று உங்கள் கண்களைக் கவர்வதை உணர்வீர்கள்.

அப்போது நீங்கள், "ஆஹா ! இவ்விதம் ஜொலிக்கும் நகரத்தின் பெயர் என்ன !" என்று பக்கத்தில் இருப்பவரை ஆச்சரியத்துடன் கேட்காமல் இருக்க முடியாது.

அந்த நகரத்தில் உள்ள வீடுகள் வரிசையாகவும் சுத்தமாகவும் இருக்கும் ; ரஸ்தாக்கள் சுத்தமாக இருக்கும் ; ஏரிகளும் குன்றுகளும் மிகவும் சுத்தமாக இருக்கும் ; அங்கு மக்களும் சுத்தமாக இருப்பார்கள்.

இந்தக் காட்சிகளை நீங்கள் பார்க்க நேர்ந்தால், அந்த நகரின் பெயரை நீங்கள் யாரிடமும் கேட்க வேண்டிய அவசியமே இல்லை. அந்த நகரம்தான் சித்தரஞ்சன் என்பதை

பிரசித்தி பெற்ற

# பைலட்

## பேனாக்கள்

விஷயமறிந்த
குடும்பத்தினர்
விரும்புவது

பைலட்

**PILOT**

பேனாக்களும்
மசியும்



கவர்ச்சி மிக்க
நிறங்களில்
பற்பல
மாடல்கள்





எங்கும்
கிடைக்கும்

*Manufactured By*

**THE PILOT PEN CO. (INDIA) PRIVATE LTD.,**
"CATHOLIC CENTRE"...ARMENIAN ST.,
MADRAS-1.........PHONE: 2325.

உலகப் புகழ் பெற்ற

**பைலட் இங்க்**



விலை

| | | | |
|---|---|---|---|
| 1 oz. | ஒரு புட்டி | 0-5-0 |
| 2 oz. | ,, | 0-8-0 |
| 24 oz. | ,, | 3-8-0 |





**கூந்தல் மற்றும் மூளை**
**அபிவிருத்திக்கான தைலம்**

செழுமையாகக் கூந்தல் வளர உதவுகிறது. வழுக்கையைத் தடுப்பதுடன் கேசம் உதிர்வதையும் நிறுத்துகிறது. ஞாபகசக்தியை அதிகரித்து ஆழ்ந்த நித்திரையை அளிக்கிறது. எல்லோருக்கும் எக்காலத்திலும் ஏற்றது.

பெரிய பாட்டில் ரூ. 3-8-0
சிறிய பாட்டில் ரூ. 2-0-0

**எங்கும் கிடைக்கும்**




**ராம்தீர்த் யோகாஷ்ரமம்**
பம்பாய்-14. (C. Rly.)

சென்னை டெப்போ:
4/441, தங்கசாலைத் தெரு, சென்னை

நீங்கள் உடனே தெரிந்து கொண்டு விடலாம். சித்தரஞ்சன் சுத்தரஞ்சனுக் காட்சி அளிக்கும்! இரவில் பார்த்தால் லட்சக்கணக்கான மின்சார விளக்குகளுடன் ஈடு இணையற்ற ஜாஜ்வல்ய நகராக விளங்கும்.

"சித்தரஞ்சனில் இஞ்ஜின் உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் இருப்பதால், எங்கு பார்த்தாலும் கரியும் புகையும் படர்ந்திருக்கும் என்று அல்லவா நினைத்தேன்! அதற்கு நேர்மாறாக, இந்நகர் இவ்வளவு சுத்தமாக இருக்கிறதே. இந்தியாவில் உள்ள ஒவ்வொரு நகரும் இதுபோலவே இருக்குமாயின், நோய்களுக்கும் அவற்றின் விரோதிகளான டாக்டர்களுக்கும் கஷ்டம் தான்!" என்றார் ஸ்ரீ கபாஸிங். ஸ்ரீ கபாஸிங் பாடியாலாவில் உள்ள பிரபல "பிரகாஷ்" பத்திரிகையின் ஆசிரியர்.

## டி. வி. ஸி. அணைக்கட்டுகள்




படத்தில் காட்டப்பட்டுள்ள அணைக்கட்டுகளின் பெயர்களாவன: 1. திலையா. 2, பல்பஹாரி. 3. கோனூர். 4.பொகாரோ 5. ஐயார். 6.பர்மோ, 7.பஞ்செட்மலை. 8. மெய்தான். 9. துர்க்காபூர்.

இந்திய ரயில் வண்டிகளுக்கு வேண்டிய இஞ்ஜின்கள் சித்தரஞ்சன் தொழிற்சாலையில் தான் உற்பத்தியாகின்றன என்பதை அறியாதவர்கள் இருக்க மாட்டார்கள். அங்கு உருவாக்கப்பட்ட முதலாவது இஞ்ஜின் 1950 நவம்பரில் வெளி வந்தது. அந்தக் கோலாகலமான வைபவத்தை நம் ஜனாதிபதி ராஜேந்திரப் பிரசாத் நடத்தி வைத்தார்.

எனவே, ஆறு வருஷ காலத்துக்குள் நமது நிபுணர்கள் அங்கு அற்புதமான ஒரு நகரைச் சிருஷ்டித்து விட்டது ஆச்சரியம் அல்லவா!

பாரத நாடு சுதந்திரம் பெற்று, பாரத மக்கள் சுபிட்ச வாழ்வு நடத்துவதற்கு வழி ஏற்படும் வரையில் ஓய்வு எடுத்துக் கொள்ள மாட்டேன் என்று வீர கர்ஜனை புரிந்து, வெள்ளையர்கள் 'வெல வெல'த்துப் போகும்படி செய்த தியாக சீலர் தேசபந்து சித்தரஞ்சன் தாஸ் அவர்களுடைய பெயரையே இஞ்ஜின் தொழிற்சாலைக்குச் சூட்டியிருக்கிறார்கள். அதற்கிணங்கவே அங்கு சித்தரஞ்சன் நகரும் உருவாகியிருக்கிறது.

1950 ஜனவரி 26-ந்தேதி இந்தியக் குடியரசு தினத்தன்று தேசபந்து தாஸ் அவர்களின் மனைவியார் ஸ்ரீமதி வசந்திதேவி சித்தரஞ்சன் தொழிற்சாலையில் முதல் யந்திரத்தை இயக்குவித்தார். சென்ற ஆறு வருஷ காலத்துக்குள் அது வருஷந்தோறும் இருநூறு இஞ்ஜின்களை உற்பத்தி செய்யும் மாபெரும் தொழிற்சாலையாகி விட்டது. வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்த இஞ்ஜின்களைக் காட்டிலும் சித்தரஞ்சனில் உற்பத்தியாகும் இஞ்ஜின்கள் சிறந்தவையாக இருக்கின்றனவாம்.

மொத்தம் 5335 பாகங்கள் சேர்ந்தே ஓர் இஞ்ஜினை உருவாகிறது என்று கணக்கிட்டிருக்கிறார்கள். இவற்றில் தொண்ணூறு பாகங்களைத் தவிர மற்றவை யெல்லாம் சித்தரஞ்சன் தொழிற்சாலையிலேயே உற்பத்தியாகின்றன. மேற்படி 90 பாகங்கள் மாத்திரமே வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன. இன்னும் சில ஆண்டுகளில் அப்பாகங்களும் இந்தியாவிலேயே உற்பத்தியாக வழி பிறந்து விடும் என்பதில் சந்தேகமில்லை.

மேற்படி தொழிற்சாலையில் வேலை செய்யும் தொழிலாளருக்கு மாதம் நாலரை ரூபாய் வாடகையில் சகல நவீன வசதிகளுடனும் வீடுகள் கட்டிக் கொடுத்திருப்பது சித்தரஞ்சனில் மற்றொரு விசேஷமாகும்.

சித்தரஞ்சனில் நாங்கள் சென்ற சமயம் உருவான புத்தம் புதிய இஞ்ஜின் முதன் முதலாக எங்களை யெல்லாம் ஏற்றிக் கொண்டு சித்தரஞ்சன் தொழிற்சாலையிலிருந்து 'குப்' 'குப்' என்று வெளிக் கிளம்பியது. புதிய இஞ்ஜினில் எங்கள் சவாரி முடிந்ததும், பாரத நாட்டின் சுபிட்சத்துக்கு இன்றியமையாத இஞ்ஜின் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள சித்தரஞ்சனிலிருந்து விடைபெற்றுக் கொண்டோம்.

அதில் மூவகை செயல்!

## உங்கள் பற்களை அதிக பத்திரமாகப் பாதுகாக்கிறது!

உங்கள் பற்களில் தொந்தரவு இல்லாமல் பாதுகாத்துக் கொள்க; உண்மையில் நல்ல பிரஷ் உபயோகியுங்கள் - கால்கேட் சாஸ்திரீயமாக அமைக்கப் பெற்ற நைலான் பல் பிரஷ்! அது உங்கள் பற்களை ஏன் அதிக பத்திரமாகப் பாதுகாக்கிறதென்றால்—

- அது மூவகைச் செயலுடையது - இடுக்குகளில் நுழைகிறது. பல்லின் உட்புறமும் வெளிப்புறமும் நன்கு துலக்குகிறது. ஈறுகளைப் பக்குவமாக உறுதிப் படுத்துகிறது
- அது மூடப்பட்டுள்ளது - சுகாதார முறையில் பிளாஸ்டிக் குழாயில்
- அது சாஸ்திரீயமான உருப்பெற்றது - மேலும் கீழுமுள்ள பின்பற்களை சுலப முறையில் அதிக சுத்தமாக்குமாறு
- அது மிருதுவாகத் துலக்குகிறது - சன்னமான வெண்பகுதியைப் பாதிக்காது

# கால்கேட்

டூத்பிரஷ் டீலக்ஸ்




ஆண்களுக்கு
பெண்களுக்கு
குழந்தைகளுக்கு

ஹார்ட், மீடியம், ஸாப்ட்

சுகாதார பிளாஸ்டிக் குழாயில்

TBG/7

---

## கோடைகாலத்தில் நீலகிரியின் குளுமையை உங்கள் வாசஸ்தலத்திலேயே அடையுங்கள்






# டி.எஸ்.ஆர்

சந்தனாதி, அரைகீரை விதை
பிருங்காமலகா தைலங்கள்.



டி.எஸ்.ஆர் & கோ., கும்பகோணம்.

சென்னை நகருக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள் : சுராஜ் ஏஜன்஼ீஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு ○ கோயமுத்தூர், பாலக்காடு, நீலகிரிக்கு சோல்ஏஜண்டு : B. பாலபட்டாபி, (ஸ்தாபிதம் 1932), வைசியாள் தெரு, கோயமுத்தூர்
கல்கத்தாவில் கிடைக்குமிடம் : கோகுல் ஸ்டோர்ஸ், 179/1, லான்ஸ் டவுன் ரோடு, கல்கத்தா-26



# நினைவுத் திரை

ராமப்பிரியா

விடிந்தால் என் பிள்ளை ஸ்ரீதரனுக்குக் கலியாணம்! நாங்கள் பிள்ளை வீட்டார்கள் அல்லவா! எனவே எங்களுக்கு ராஜோபசாரம் நடந்து கொண்டிருந்தது. நான் மாடி வராந்தாவில் நின்று கொண்டு கீழே போவோர் வருவோரை எல்லாம் என்னை மறந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

கலியாண வீடு என்பதற்கேற்ப அந்த வீட்டுச் சூழ்நிலை களை கட்டி விட்டது. பெண் வீடாகிய எதிர் வீட்டிலும் இங்கேயும் ஒரே மகிழ்ச்சி ஆரவாரம். பெண்களின் புதுப் புடவைகளின் மொரமொரப்பும் கை வளையல்கள் குலுங்கும் மெல்லிய நாதமும் மனசுக்கு ஆனந்தத்தை அளித்தன. குழந்தைகளின் மகிழ்ச்சி ஆரவாரம் ஒரு பக்கம்; பிடிவாதம் பிடித்து அழுகை ஒரு புறம்; சிரிப்பு; பேச்சு; வேடிக்கை; விளையாட்டு; கொம்மாளம்!

என் ஒரே பிள்ளையின் கலியாண கோலாகலத்தின் போது என் கலியாண நினைவும் இலேசாக என் நினைவில் மிதந்து வந்தது. சின்னஞ் சிறு பாலையாக இருந்தபோது நடைபெற்ற அந்த வைபோகமும் அதைத் தொடர்ந்து நடந்த பலவித சம்பவங்களும் தொடர்ந்து நினைவுக்கு வந்தன. என்னை அறியாமல் சிரித்துக் கொண்டேன்.

"சாவித்திரி!" என்று குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். குரலுக்குடையவர்—என் கணவர்தான்—கையில் ஒரு கவருடன் நின்று என்னை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"என்ன சமாசாரம்! ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள்! கையில் என்ன கவர்!" என்று சரமாரியாகக் கேள்விகளைக் கேட்டேன்.

அவர் என் அருகில் வந்து, "சொன்னால் நீ வருத்தப்பட மாட்டாயே!" என்று மிக மெல்லிய குரலில் கேட்டார்.

மேலே எந்த விஷயத்தைக் கூறப்போகிறாரோ என்று என் இதயம் படக் படக்கென்று அடித்துக் கொண்டது. இல்லையென்பதற்கு அடையாளமாகத் தலையை மட்டும் லேசாக ஆட்டிவிட்டு அவர் பதிலுக்கு மனத்தைத் தைரியப்படுத்திக் கொண்டேன்.

"சாவித்திரி! உன் பிள்ளைக்கு மேல் படிப்புக்கு அமெரிக்கா போவதற்கு உத்தரவு வந்து விட்டது. இன்னும் பத்து நாட்களில் அவன் கிளம்ப வேண்டும்!" என்று சொல்லிவிட்டு என் முகத்தைப் பார்த்தார்.

"பேசுவதிலேயே ஒரு சொட்டைச் சொல் இல்லாமல் உங்களுக்குத்தான் பேச வராதே! திடீரென்று என் பிள்ளையென்ன! ஸ்ரீதரன் உங்களுக்கு மட்டும் சொந்தமில்லையோ!" என்றேன் சற்றுச் சூடாகவே.

"நீ அவனை மேல் நாட்டுக்குப் போவதற்குத் தடை சொல்லப் போகிறாயே என்று அப்படிச் சொன்னேன். மாட்டுப் பெண் ஜயந்தி அதிர்ஷ்டசாலிதான். அவள் நம் வீட்டுக்கு வருவதற்குள்ளாகவே பிள்ளைக்கு அமெரிக்கா போக வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. நீ என்ன சொல்கிறாய்!" என்றார்.

நான் பதிலே பேசவில்லை. என் மனம் எங்கெங்கேயோ இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் நடந்தவற்றை யெல்லாம் வேகமாக ஆராயத் தொடங்கியது.

"என்ன பதிலே பேச மாட்டேனென்கிறாய்! அவன் மேல்நாடு போவதில் இஷ்டமில்லையா உனக்கு!" என்றார் மீண்டும் என் கணவர்.

"எனக்கு இஷ்டமில்லாமல் என்ன! வம்ச பரம்பரையாகக் கல்யாணத்துக்கு முதல் நாள் அந்நிய நாட்டுக்குப் போகச் சந்தர்ப்பம் கிடைப்பது நம் குடும்பத்துக்குச் சகஜமாகப் போய்விட்டது. உங்கள் பிள்ளையும் உங்களைப் போலவே அந்தப் பெண்ணைத் தவிக்க விட்டு விட்டு அமெரிக்காவுக்குப் பறந்து விடப் போகிறான்! இதற்காகத்தான் நான் கவலைப் படுகிறேன்!" என்றேன் படபடப்பாக.

"ஜயந்தி உன்னைப்போல் அசட்டுப் பெண்ணல்ல. அவள் சமூகத்தைத் தைரியமாக எதிர்ப்பாள். அநேகமாக ஸ்ரீதரனுடன் தானும் மேல் நாடு போக ஏற்பாடு செய்தாலும் செய்வாள்!" என்றார் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்துக் கொண்டு.

நான் அன்றைக்கு வாங்கின அசட்டுப் பட்டம் என்றைக்கும் நிரந்தரமாகிவிட்டது.

மாப்பிள்ளை அழைப்புக்குரிய ஏற்பாடெல்லாம் ஆகிவிட்டது என்று என்னை அழைக்க வந்தார்கள், சம்பந்தி வீட்டிலிருந்து. நாகசுரக்காரன் கல்யாணியைப் பிரமாதமாக ஆலாபித்து வாசித்துக் கொண்டிருந்தான். அவர் அந்தகாலைய நினைவுகளை ரொம்பவும் கிளறி விட்டுவிட்டார். மனம் இருபத்தைந்து வருஷங்களுக்குப் பின்னால் சென்றுவிட்டது.

இவர் அப்போதுதான் டாக்டர் பரீக்ஷை பாஸ் பண்ணியிருந்தார். எனக்கு வயது பதினொன்று. வீட்டுக்கு மூத்த பெண். "மூத்தது மோழை" என்பதற்கிணங்க நான் ரொம்பச் சாது என்று எல்லாரும் சொல்வார்கள். எதிலும் தைரியமாக அடித்துப் பேசவோ, சவடாலாய் அளக்கவோ எனக்கு வராது. நான் ரொம்பப் பயந்தாங்கொள்ளி. யாராவது கொஞ்சம் அதட்டிப் பேசி விட்டால் உடனே அழுது விடுவேன். இந்த அழகில்தான் எனக்குக் கல்யாணம் நிச்சயம் செய்தார்கள்.

கலியாணத்தின்போது அவர்தான் பூரணமாக எல்லாவற்றையும் அனுபவித்தார். எனக்கு இனந்தெரியாத பயமும் அலுப்பும்தான் மேலோங்கி நின்றது. நலுங்கின்போது வெடுக்கென்று கையைக் கிள்ளி விடுவார். எனக்கு அழுகை வந்துவிடும். சிநேகிதர்கள் எல்லாரும் விழுந்து விழுந்து சிரிப்பார்கள். ரொம்பவும் துணிச்சல்காரர் என்று அப்பொழுதே பெயர் வாங்கிவிட்டார் அவர்.

அந்த நாளில் நாலு நாளையக் கலியாணமும் சாஸ்திரோக்தமாக வெகு சம்பிரமாக நடந்தேறியது. நாலாம் நாள் தான் அந்தச் சம்பவம் நடந்தது. இவர் பேருக்குத் தந்தி ஒன்று வந்தது. அந்த நாளில் தந்தி என்றால் ஒரே பயம். இவரை எல்லாரும் சூழ்ந்து கொண்டனர். இவர் ரொம்பச் சாவகாசமாகப் படித்துவிட்டு, "நான் மலேயா சர்க்காருக்கு வேலைக்கு விண்ணப்பம் போட்டிருந்தேன். அதற்கு இப்பொழுது உத்தரவு வந்திருக்கிறது!" என்றார்.

மலேயா போய்ச் சம்பாதித்து வருவது இந்த நாளில் தண்ணீர் பட்டபாடு. அப்போது அது ரொம்ப அபூர்வமானதால் என் வீட்டவர்கள் அப்படியே அசந்து போய்விட்டார்கள். என் பாட்டி எனக்கென்னமோ நேர்ந்து விட்டது போல் ஒப்பாரியே வைத்து அழ ஆரம்பித்து விட்டாள். என் மாமனார் கொஞ்சம் விவேகி. அவர்தான் எல்லாரையும் ஒருவாறு சமாதானப் படுத்தி, "அவன் நல்ல ஸ்திதிக்கு வந்தால் உங்கள் பெண்ணுக்குத்தானே நல்லது! அங்கே ஆரம்பத்திலேயே ஐந்நூறு ரூபாய்க்கு மேல் சம்பளம் கொடுக்கிறார்கள். மேலே மேலே சம்பளமும் பதவியும் உயரும். ஐந்து வருஷங்கள் இருந்து விட்டுத் திரும்பி விட்டால் இங்கே தாய் நாட்டிலும் நல்ல பெயர் கிடைக்கும். அங்கே அவன் போய் வசதி யிருந்தால் சாவித்திரியையும் அழைத்துப் போகிறான்!" என்று பலவாறாகச் சொல்லிச் சமாதானப் படுத்தி வந்தார்.

ஒருவாறாக என் வீட்டவர்கள் மேலுக்கு ஓய்ந்து விட்டதுபோல் தோன்றினாலும் உள்ளுக்குள் அப்பாவும் அம்மாவும் புழுங்கிக் கொண்டிருந்தார்கள். அக்கரைச் சீமைக்குப் புறப்படுகிறவனுக்குப் பெண்ணைக் கொடுத்து விட்டோமே என்று அவர்கள் மனம் துடிதுடித்தது; குமுறிக் கொண்டிருந்தார்கள்.

அன்று இரவு ஊர்வலம் நடந்தது. நாலு நாட்களாக உடம்புக்கு ஏற்பட்ட அலுப்பு காரில் உட்கார்ந்ததும் எனக்குத் தூக்கம் தூக்கமாக வந்தது. இவர்தான் பெரிய வம்புக்காரராயிற்றே! அருகில் நெருங்கி வந்து, "சாவித்திரி!" என்றார் மெதுவாக. அரைத் தூக்கமாக இருந்தவள் தூக்கி வாரிப்போட்டு எழுந்தேன். "எப்பொழுது பார்த்தாலும் என்ன தூக்கம்! ஊமியாகவே இருக்க மாட்டாய் போல் இருக்கிறதே! இப்படி 'உம்' என்றிருந்தால் எனக்குப் பிடிக்கவே பிடிக்காது. சதா சிரித்துச் சிரித்துப் பேசினால்தான் எனக்குப் பிடிக்கும்!" என்றார்.

எனக்கு வெட்கம் வந்து விட்டது. சட்டென்று தலையைக் குனிந்து கொண்டேன்.

★

"ஸம்பந்தியம்மா! ஏன் ஒரு மாதிரி இருக்கிறீர்கள்!" என்று ஜயந்தியின் தாயார் கேட்டதும்தான் பழைய நினைவுகளினின்றும் விழித்துக் கொண்டேன். "ஒன்றுமில்லை!" என்று சொல்லிச் சிரித்து மழுப்பிவிட்டேன். ராத்திரி சாப்பாடெல்லாம் ஆனதும் மாடியில் போய்த் தனிமையில் உட்கார்ந்து, விட்ட இடத்திலிருந்து மீண்டும் எண்ணிப் பார்க்க வேண்டுமென்று தோன்றியது.

மொட்டை மாடியில் போய் உட்கார்ந்தேன். மனோகரமான இரவு வேளை மதியை மயக்குவதாக இருந்தது. மிருதுவாக வீசிய தென்றல் மனசுக்கு இதம் அளித்துப் பழைய இன்ப நினைவுகளைக் கிளப்பியது. வானத்தை நிமிர்ந்து பார்த்தேன். பூரண சந்திரன் எத்தனை இன்பமாகப் பவனி வந்து கொண்டிருந்தான்! இதே மாதிரிதானே அன்றும் மனத்தைக் கிளுகிளுக்கச் செய்து என்னையும் போதையடையச் செய்தான். அதன் விளைவால் எத்தனை பேச்சு, வீண் அபவாதம் எல்லாம் சுமக்கும்படி நேரிட்டது!

கைப் பிடிச் சுவரின் அருகில் வந்து நின்று கொண்டு அதன் மீது சாய்ந்த வண்ணம் தெருவைப் பார்த்துக் கொண்டிருந்தேன். கல கலவென்று சிரிப்பொலி கேட்டது. சத்தம் வந்த திக்கைப் பார்த்தேன். எதிர் வீட்டு மாடி! அதுதான் கலியாணம் நடக்கப் போகும் வீடு. யார் அது!

எனக்கு மூச்சே நின்று விடும் போலிருந்தது. ஸ்ரீதரன் ஜயந்தியின் கண்களைப் பொத்திக் கொண்டிருந்தான். அந்தப் பெண்



னும் அதை வெகுவாக அனுபவித்து ரசித்துச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

விடுவிடென்று அவர் அறைக்குச் சென்று அவரைக் கூப்பிட்டு, இந்தக் காட்சியைக் காட்டினேன். "பார்த்தீர்களா! உங்கள் பிள்ளை பண்ணும் அட்டகாசத்தை! உங்களை மிஞ்சி விடுவான் போல் இருக்கிறதே! தாலி கட்டுவதற்கு முன் அந்தப் பெண்ணுடன் விளையாட இவனுக்கு என்ன உரிமை!'' என்று மிருந்த கோபத்துடன் இரைந்தேன்.

அவர் நமட்டுச்சிரிப்பு சிரித்தார். "சாவித்திரி! நீ அன்றையப் போலவே துளிக்கூட மாறாமல் எல்லாவற்றுக்கும் பயந்து மனத்தை அலைய விட்டுக் கொண்டிருப்பதை நினைத்தால் எனக்கு ஆச்சரியம் மட்டுமில்லை; உன்மேல் பரிதாபமாகவும் இருக்கிறது. ஸ்ரீதரனும் ஜயந்தியும் மனத்தினால் ஒன்றுபட்டு எத்தனையோ நாளாகிறது. அவன் இன்னும் சில மணி நேரங்களில் அவளைத் தன் உடைமையாக்கிக் கொள்ளப் போகிறான். சிறுசுகள்! சற்றுச் சந்தோஷமாகத்தான் இருக்கட்டுமே! உன்னைப்போல் பயந்து ஊரைக் கூட்டாமல் அவனுடன் ஒத்துப் போகிறாளே அந்தப் பெண்! ஸ்ரீதரன் அதிர்ஷ்டசாலிதான்!'' என்று எனக்கு ஒரு டோஸ் கொடுத்துவிட்டு அவர் படுக்கப் போய் விட்டார். எனக்கோ தூக்கமே வரவில்லை. மீண்டும் மீண்டும் பழைய பழைய நினைவுகளையே சுற்றி மனம் தாவிக் கொண்டது.

★

எனக்குக் கல்யாணமாகி ஒரு வாரம் சென்றது. என் கணவர் மலேயாவுக்குப் புறப்பட்டுச் செல்லும் தினமும் நெருங்கியது. நாங்கள் இருந்தது திருச்சியில். என் கணவர் அவர் பெற்றோர்கள் எல்லாரும் மதுரையில் இருந்தார்கள். அவர் சென்னைக்குப் போய்த்தான் கப்பல் ஏறவேண்டும். போகிற வழியில் இங்கு இறங்கினாலும் இறங்கலாம் என்று அப்பா சொல்லிக் கொண்டிருந்தார்.

அன்றைய தினத்தை என் ஆயுசில் மறக்கவே முடியாது. அப்பாவும் அம்மாவும் என் தங்கை தம்பிகளை அழைத்துக் கொண்டு உறவினர் வீட்டுக் கல்யாணத்துக்குப் போயிருந்தனர். நான் மட்டும் தனியாக வீட்டில் இருந்தேன்.



கதவு தடதட வென்று இடிக்கும் சப்தம் கேட்டது. இரவு எட்டு மணிதான் இருக்கும். கல்யாண வீட்டுக்குப் போனவர்கள் திரும்பி வந்து விட்டார்களோ என்று பரபரப்புடன் கதவைத் திறந்தேன். இவர்தான் சூட்டும் ஹாட்டுமாகத் துரைமாதிரி பெட்டி படுக்கையுடன் நின்று கொண்டிருந்தார். பயத்தி-

னால் நாக்கு மேலண்ணத்தில் அப்படியே ஒட்டிக் கொண்டது. "வாருங்கள்!'' என்று அழைக்கக்கூடத் தெரியவில்லை. சிலை மாதிரி அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டேன்.

"அப்பா அம்மா ஒருவரும் இல்லையா!'' என்றார். இல்லை என்று தலையை ஆட்டினேன். "ரொம்ப சரி! உன்னுடன் ரொம்பப் பேச வேண்டியிருக்கிறது'' என்று அவராகவே சொல்லி விட்டுச் சாமான்களை உள்ளே தூக்கிக் கொண்டு வந்து வைத்தார். நிலைகுலைந்து தூணோடு தூணாக ஒட்டிக் கொண்டு நின்றேன்.

தூணருகில் வந்து, "ஒரு வாய் தண்ணீராவது கொடுப்பாயா!'' என்று அபிநயத்தோடு என்னருகில் குனிந்து கேட்டார். எனக்கோ பயத்தால் உடம்பு வெடவெட வென்று நடுங்கியது. பதிலே பேசவில்லை. 'வேறு ஏதாவது சாப்பிடுகிறீர்களா!' என்றுகூடக் கேட்கத் தெரியவில்லை. அப்படி ஒரு ஜடப் பொருளாக இருந்தேன். தண்ணீர் எடுத்து வரச் சமையலறைக்கு விரைந்து சென்றேன். "சாவித்திரி! தண்ணீரை மாடிக்கு எடுத்துக் கொண்டு வா! இங்கே ரொம்பப் புழுக்கமாக இருக்கிறது. சற்று மாடியில் காற்றுட இருக்கிறேன்!'' என்று பல நாட்கள் என்னுடன் பழகினவர் மாதிரி உத்தரவு போட்டு விட்டு ஏதோ பாட்டை முணுமுணுத்த வண்ணம் மாடிக்குச் சென்று விட்டார்.

ஒரு டம்ளர் தண்ணீருடனும் பதை பதைத்த மனத்துடனும் மாடிக்குச் சென்றேன். அன்றைக்கும் இதே மாதிரிதான் பூரண சந்திரன் காய்ந்து கொண்டிருந்தான்.

இவர் சாய்ந்து படுத்தவாறு நிலவை ரசித்துக் கொண்டிருந்தார். தண்ணீரை அவர் பக்கத்தில் வைத்து விட்டுக் கீழே இறங்கிப் போவதற்குத் திரும்பினேன். இவர் சட்டென்று தலைப் பின்னலைப் பிடித்து இழுத்து நான் கீழே போவதைத் தடுத்தார்.

ஒரு கட்டு திருச்சி மலைக் கோட்டை கதம்பத்தையும் மல்லிகைப் பூவையும் கொடுத்துத் தலையில் வைத்துக் கொள்ளச் சொன்னார். எனக்குப் பூ வென்றால் போதும். அத்தனையையும் அப்படியே தலையில்சூட்டிக் கொண்டேன். மெதுவாக என்னை அருகில் உட்கார வைத்துக் கொண்டார்.

என் உடம்பு வெடவெட வென்று நடுங்கியது. "நீ ஏன் இப்படிப் பயப்படுகிறாய்! என்னை உனக்குப் பிடிக்கவில்லையா!'' என்றார். அப்போது தான் அவர் முகத்தைக் கூர்ந்து பார்த்தேன். தலையைத் தாழ்த்திக் கொண்டேன்.

"நீ இன்னும் நாகரிகமாகப் பழகக் கற்றுக் கொள்ள வேண்டும். இப்படியெல்லாம் கட்டுப் பெட்டியாக இருந்தால் எனக்குப் பிடிக்காது.

உன்னை அயல் நாடுகளுக்கெல்லாம் அழைத்துப் போகப் போகிறேன். எனக்கு வாரம் ஒருமுறை கடிதம் எழுத வேண்டும். இன்னும் ஆறே மாதத்தில் உன்னை அழைத்துப் போவேன். தெரிந்ததா!'' என்றார். எல்லாவற்றுக்கும் தலையை ஆட்டிக் கொண்டு பேசாமல் பொம்மை மாதிரி உட்கார்ந்து கொண்டிருந்தேன். அவர் பேசியது பாதி காதில் விழவில்லை. உடல் பதறிக் கொண்டிருந்தது. அவரோ ஒன்றையும் லக்ஷியம் செய்யாமல் என் அருகில் நெருங்கி உட்கார்ந்தார். செவிகளைத் திருகி வேடிக்கை செய்தார். கன்னங்களுடன் உறவாடினார். பிறந்த நாள் முதல் அனுபவித்தறியாத போதை தரும் அந்த உணர்ச்சி தலையைக் கிறுகிறுக்கச் செய்தது. கண்களில் அந்தகாரம் சூழ்ந்தது. வீடே சுற்றுவது போன்ற பிரமை. காலம் போவது தெரியாமல் சென்றது.

கீழே வாசற்கதவு தடதட வென்று தட்டும் சப்தம் கேட்டது. பதறிப் போய் அவரிடமிருந்து விடுவித்துக் கொண்டு கீழே ஓடிப் போய்க் கதவைத் திறந்தேன். அப்பா அம்மா எல்லாரும் நின்று கொண்டிருந்தார்கள். "இத்தனை நாழிகை என்னடி செய்தாய்! ஒரு நாழிகையாகக் கதவை இடிக்கிறோமே!'' என்று அம்மா என்னை முறைத்துப் பார்த்தாள்.

அப்பாவும் என்னையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தார். எனக்கோ சப்த நாடியும் ஒடுங்கி விட்ட மாதிரி ஆகிவிட்டது. தலையைக் குனிந்து கொண்டு உள்ளே சென்றேன். என் பின்னாலேயே வந்து கொண்டிருந்த அம்மா, "ஏதுடி இவ்வளவு பூ தலையில்!'' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.

நான் வாயைத் திறக்கவில்லை.

"பூ ஏது என்றால் வாயைத் திறக்க மாட்டேனென்கிறாயே! சொல்லேண்டி!'' என்று என்னை அதட்டினாள் அம்மா.

அப்பாவும் தம்பி தங்கைகளும் ஒருபுறம் நின்று கொண்டு இதையெல்லாம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

எனக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. அழுகை அழுகையாக வந்தது. அம்மாவைக் கட்டிக் கொண்டு ஓவென்று அழுதுவிட்டேன். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் ஒன்றுமே புரியவில்லை. என்னமோ தப்புத் தண்டாக் காரியம் நடந்துவிட்டது என்று இருவரும் அப்படியே குன்றிப்போய் உட்கார்ந்து விட்டார்கள்.

என் தம்பி ஆறு வயது விச்சுப் பயல் வாசல் அறைக்குச் சென்றவன், "அப்பா! நம் வீட்டுக்கு யாரோ வந்திருக்கிறார்கள். பெட்டியும் படுக்கையும் அங்கே இருக்கின்றன!'' என்று ஒரு துப்புத் துலக்கினான்.

அப்பா முதன் முதலாக வாயைத் திறந்து, "யாரம்மா வந்திருக்கிறது!'' என்றார். மாடியைச் சுட்டிக் கையைக் காண்பித்தேன்.

அப்பா ஒரே எட்டில் மாடிக்குச் சென்றார். மேற்கொண்டு என்ன நடக்கப் போகிறதோ என்று அம்மாவின் மடியில் தலையை வைத்துக் கொண்டு ஓவென்று அழுது விட்டேன்.

இத்தனை வருஷங்கள் கழித்துக் கூட அன்றைக்கு நடந்த சம்பவங்கள் பசுமையாக மனத்தில் நிற்கின்றன. 'ஜயந்தி உன்னைப்போல் அசட்டுப்பெண் இல்லை!' என்று இவர் ஒரு வார்த்தையில் மட்டம் தட்டி விட்டாரே! ஜயந்தியின் வயதா எனக்கு அப்பொழுது! ஜயந்தி பி.எஸ்ஸி. பாஸ் பண்ணிய இந்தக் காலத்து நவநாகரிக மங்கை! உலகம் என்றால் என்ன என்று தெரியும் வயது. பதினான்கு வயது முடிந்த சின்னஞ்சிறு பெண்ணுக்கு அதுவும் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் என்ன தெரியும்!

மாடியில் யாரையோ திருடனைக் கையும் களவுமாகப் பிடித்துக் கொண்டு வரப்போகிறவர் போல் விருப்புடன் போன அப்பா மாப்பிள்ளையை மிகவும் மரியாதையாக அழைத்து வந்தார். "மாப்பிள்ளை வந்திருக்கிறார் என்று இந்த அசட்டுப் பெண்ணுக்குச் சொல்லத் தெரியவில்லையே!' என்று அப்பா அம்மாவிடம் அங்கலாய்த்துக் கொண்டார்.

"அசட்டுப் பெண்ணுக்கு வாயைத் திறந்தால் அழத்தானே தெரிகிறது!'' என்று அம்மா கடிந்து கொண்டாள்.

அசடு, அசடு!

இந்தப் பட்டம் என்னுடன் நிலைத்தே விட்டது. இரண்டு நாட்கள் முழுசாக எங்கள் வீட்டில் அவர் இருந்தார். என்னைத் தம் அருகிலேயே வைத்துக் கொண்டார்.

ஒரு சமயம் நான் மாடியிலிருந்து இறங்கி வரும் பொழுது அப்பாவிடம் அம்மா சொல்லிக் கொண்டிருந்தது காதில் தெளிவாக விழுந்தது. "இந்தாருங்கள்! மாப்பிள்ளை இப்படிச் சாவித்திரியுடன் சதா இருப்பதை நீங்களும் அனுமதிக்கிறீர்களே! நாள் நட்சத்திரம் பார்த்து அவர்கள் வீட்டுக்குக் குழந்தையைக்

கொண்டு விடுவதற்கு முன்பாக இப்படித் தனித்துப் பேசச் சம்மதிக்கலாமா! அவர்கள் காதில் பட்டால் நன்றாக இருக்குமா! மாப்பிள்ளை ரொம்ப நாகரிக மனப்பான்மை உடையவராக இருப்பார்போல இருக்கிறது. சம்பந்தி வீட்டார்கள் பழைய பண்பாட்டில் ஊறினவர்களாக இருப்பதால் எனக்குத்தான் கவலை பிடுங்கித் தின்கிறது!" என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

"மாப்பிள்ளையே அவளைப் பத்து வருஷங்கள் பழகின மாதிரி கூப்பிடுகிறார், பேசுகிறார். சாவித்திரியோ அவருடைய பொருள். நாம் ஒன்றும் சொல்வதற்கில்லை!" என்றார் அப்பா.

இரண்டு நாட்களுக்குப் பிறகு என் கணவர் ஊருக்குப் போய் விட்டார். அங்கிருந்தபடியே மலேயா நாட்டுக்கும் சென்று விட்டார்.

அவர் ஊருக்குப் போன பிறகு எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. பெற்றோர் எவ்வளவு அன்பு மழையாகப் பெய்தாலும் எனக்கு தென்பு கொள்ள முடியவே இல்லை. உள்ளத்தில் நிலைத்திருக்கும் ஏக்கத்தைப் போக்க வழி தெரியாமல் திண்டாடினேன்.

அவர் ஊருக்குப் போய் மூன்று மாதங்களாகி விட்டன. என் புக்ககத்தினர் என்னைக் கொண்டு வந்து விடும்படி கடிதம் போட்டிருந்தார்கள். அப்பாவும் அம்மாவும் என்னைக் கொண்டு விட்டு என்னுடனேயே நாலைந்து நாட்கள் தங்கி இருந்தார்கள்.

என்னைப் பார்த்தவுடனேயே என் மாமியார், "இப்படித் துரும்பாக இளைத்துப் போய் விட்டாளே! உடம்பெல்லாம் வெளுத்துக் கிடக்கிறதே, ஏன்!" என்றார்.

"அவள் உடல்நிலை சரியாக இல்லைதான். மாப்பிள்ளை கப்பலுக்குப் போகுமுன் அங்கு இரண்டு மூன்று நாட்கள் வந்து விட்டுப் போனாரல்லவா! அப்போது குழந்தையுடன் மனம் விட்டுப் பழகிக் கொண்டிருந்தார். மாப்பிள்ளையிடமிருந்து வந்த கடிதத்தில் சாவித்திரியைத் தகுந்த துணையுடன் கப்பலேற்றிவிடும்படி வந்திருக்கிறது. இந்த உடம்பில் எப்படி அனுப்புகிறது என்று உங்களைக் கலந்தாலோசிக்கவே வந்தோம்!" என்றாள் அம்மா.

மாமியாருக்குச் சட்டென்று புரியவில்லை. "அவளுக்கு என்ன உடம்பு!" என்றார்.

"வளைகாப்புக்கு நாள் பார்க்க வேண்டும் என்கிறேன்!" என்றாள் அம்மா. நானோ அப்படியே குன்றிப் போய் உட்கார்ந்தேன். பூமி அப்படியே பிளந்து என்னை விழுங்கி விடக்கூடாதா என்று தோன்றியது.

மாமியார் என்னை ஒரு தரம் ஏற இறங்கப் பார்த்தார். விருட்டென்று உள்ளே போய் விட்டார். என்னைத் துணிச்சல்காரி என்று ஜாடைமாடையாக ஏசினார்கள். என் பெற்றோரையும் கன்னாபின்னாவென்று பேசினார்கள். அப்பா அம்மா திரும்ப ஊருக்குப் போகும் போது என்னையும் கூடவே அழைத்துப் போகும்படி சொல்லி விட்டார் மாமியார். போன சுருக்கோடு திரும்பியும் வந்து விட்டேன் பிறந்தகத்துக்கு.

இது எல்லாவற்றையும் விவரமாக அவருக்கு எழுதிப் போட்டேன். அவருடைய துணிச்சலினால் நான் படும் பாட்டையெல்லாம் விவரமாக ஒன்றுகூட விடாமல் எழுதினேன்.

"ஒன்றுக்கும் கவலைப்படாதே! நீ மன திடத்துடன் இருக்க வேண்டும். அப்பொழுது தான் நம் குழந்தை திடமாக இருக்கும்!" என்றெல்லாம் தேறுதலாக எழுதினார்.

வளைகாப்புக்கு நாள் பார்க்கச் சொல்லி எழுதினதற்கு என் புக்ககத்தினரிடமிருந்து சரியானபடி பதில் வரவே இல்லை. அப்பாவே நேரில் போய்க் கேட்டார், எல்லாம் சாஸ்திரப்படி, சம்பிரதாயப்படி நடந்திருந்தால் இதற்கும் எங்கள் ஒத்துழைப்பு வேண்டும். உங்கள் இஷ்டப்படி எது வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள்!" என்று சொல்லி முகத்தைத் திருப்பிக் கொண்டு போய்விட்டாராம் மாமனார். இந்தக் கோபம் எதில் வந்து முடியுமோ என்று அப்பாவும் அம்மாவும் திகில்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

வளைகாப்பு, சீமந்தம் என்று ஒன்றும் இல்லாமலே என் ஸ்ரீதரன் காலத்தில் பிறந்தான். அவருக்கும், என் புக்ககத்தினருக்கும் இந்தச் சுப சமாசாரத்தைத் தெரியப்படுத்தினார்கள். அவர் மூன்று மாத ரஜாவில் இந்தியா வந்தார். குழந்தையுடன் என்னையும் அழைத்துக் கொண்டு பெற்றோரிடம் சென்றார்.

"அம்மா! உன் பேரனை எடுத்துக் கொள். அவன் அடுத்த மாதம் மலாய் நாட்டிற்குச் சென்று விடுவான். நீ கொஞ்ச வேண்டியதையெல்லாம் அதற்குள் கொஞ்சித் தீர்த்துக் கொள்!" என்றார்.

மாமியார் என்ன பதில் சொல்ல முடியும்! வாய் திறவாமல் குழந்தையை வாங்கிக்கொண்டார். நாளடைவில் பேரனைப் பிரிய பாட்டிக்கு மனம் வராத நிலை வந்து விட்டது.

ஒரு நல்ல நாள் பார்த்துக் கப்பலில் கொண்டு விட்டார்கள், மலாய் நாடு போவதற்கு.

நான்கு மாதக் குழந்தையுடன் அன்னிய நாட்டுக்குப் பயணமானேன். தாய்நாட்டையும் மக்கள் மனுஷர்களையும் விட்டு ஆயிரமாயிரம் மைல்களுக்கு அப்பால் செல்வதென்றால் அந்த வயதில் பயம் இருக்கத்தானே செய்யும்! எப்படியோ இருபது வருஷங்கள் அங்கே கழித்து விட்டு நல்ல செல்வாக்குடன் தாய் நாடு திரும்பினோம்.

ஸ்ரீதரனை உண்டாகி இருக்கும் போது நான் நாலு பேரிடம் கேட்ட கேலிச் சொற்களும் மாமியாரிடம் கேட்ட பேச்சுக்களும் மறக்கவே செய்யாது. இவரிடம் சொல்லிச் சொல்லிக் குறைப்பட்டுக் கொள்வேன்.

"போடி, அசடு! இதற்கெல்லாம் மனம் உடையலாமா! சகுந்தலை பரதனைப் பெற்ற மாதிரி நீ ஸ்ரீதரனைப் பெற்றாய்" என்று ஒரே வார்த்தையில் அடித்துச் சொல்லுவார்.

ஸ்ரீதரனுக்குக் கலியாணம் ஆகும் சமயத்தில் கூட அந்தச் சம்பவம் என் நினைவுத் திரையை விட்டுச் சற்றும் அகலவில்லை.

காலை வேளையில் கேதார ராகத்தை ரம்யமாக வாசிக்கும் நாகசுர சத்தத்தில் விழித்துக் கொண்டேன். நினைவுத் திரையிலிருந்து மனத்தை அகற்றிக் குழந்தையின் விவாக மகோற்சவத்தில் ஈடுபடுவதில் முயன்றேன். என் கணவரைப் போலவே சாயல், துணிச்சல், கெட்டிக்காரத்தனம் எல்லாவற்றிலும் இருக்கும் ஸ்ரீதரன் கடமையிலும் அவரைப் போலவே இருக்க வேண்டுமென்னும் பிரார்த்தனையுடன் ஜயந்தியை வரவேற்க முனைந்தேன்.





# சாமியார் ஜெயித்தார்

ராஜாஜி





"புலிகாள், சிறுத்தைகாள், நீங்கள் ஏன் இந்த பாவ ஜீவனம் நடத்துகிறீர்கள்? பசுக்களேயும், மான்களையும் கொன்று தின்கிறீர்களே. இது மகா பாவம் என்பது உங்களுக்குத் தெரியாதா? இந்த வழக்கத்தை விட்டு விடுங்கள். என்னைப்போல் நீங்களும் வாழுங்கள்!" என்றார் சாமியார்.

"இந்த சாமியாரின் தொந்தரவு அதிகமாய்ப் போயிற்று. இவரை நீங்கள் தின்று விடலாம் என்பது என் யோசனை" என்றது நரி.

"இவரை விழுங்கினால் இவருடைய தாடியும் தலை ஜடையும் என் வயிற்றில் சிக்கிச் சுழன்று எனக்கு என்ன ஆகுமோ சொல்ல முடியாது. உன் யோசனையில் பயன் இல்லை. இவரோடு கொஞ்சம் பேசி விஷயத்தைத் தீர்த்துக் கொள்ளலாம்" என்று புலி நரியைச் சமாதானப் படுத்திற்று.



"சாமியாரே! உங்கள் ஜனங்களும் ஆடு கோழி தின்கிறார்களே? எங்களை மட்டும் ஏன் குறை கூறுகிறீர்கள்?" என்று கேட்டது சிறுத்தை.

"அப்படிக் கேள்!" என்றது புலி.

"குழந்தைகளே! நீங்கள் கேட்பது நியாயம். ஆனால் அவர்கள் ஆடும் கோழியும் சமைத்துச் சாப்பிடுகிறார்கள். பச்சையாக உங்களைப் போல் சாப்பிடுவதில்லை. நீங்கள் செய்வது அநாகரிகம்!" என்றார் சாமியார்.

"இது சரியான வாதமல்ல!" என்றது புலி.

"ஏன்? சொல்" என்றார் சாமியார்.

"எடுத்துச் சொல், நரி! உனக்குத்தான் பேசத் தெரியும்" என்று புலி தனனுடைய மந்திரி நரியை வாதம் செய்ய உத்தர விட்டது.

"சாமியாரே! இந்தச் சின்ன விஷயம் உமக்குத் தெரியவில்லையே! ஆச்சரியமாக இருக்கிறது. நீர் எல்லாம் படித்திருக் கிறீர். நான் ஒரு சாஸ்திரமும் படிக்க வில்லை. பச்சையாக ஆடு மாடுகளைத் தின்று ஜீரணம் செய்து கொள்ளும் சக்தி ஆண்டவன் புலிக்கும் சிறுத்தைக்கும் கொடுத்திருக்கிறான். மனிதனுக்கு அந்த சக்தியைக் கொடுக்கவில்லை. ஒப்புக் கொள்கிறீரா?" என்று கேட்டது நரி.

"நீ சொன்னது உண்மை! அதனால் தான் நன்றாகச் சமைத்துச் சாப்பிடு கிறார்கள்" என்றார் சாமியார்.

"ஆண்டவன் செய்து வைத்திருக்கும் அமைப்பில் சாப்பிடக் கூடாத உணவை மனிதர்கள் சமைத்துச் சரிப்படுத்திச் சாப் பிடுகிறார்களே அதுதான் பாபம். ஆண்டவன் உத் தரவுக்கு விரோதம். ஜீரணம் செய்து கொள் ளும் சக்தி இருக்கிற புலியும் சிறுத்தையும் மிருகங்களைச் சாப் பிடுவதில் பாபம் இல்லை. இயற்கைக்கு விரோத மாக நெருப்பையும் தண்ணீரையும் உப யோகித்து மாமிசத்தை மிருதுவாக்கித் தின்பதுதான் பாபம்" என்றது நரி.

"செத்த மாமிசத்தைத் தின்னும் நீ சாதுரியமாகப் பேசுகிறாய். உன் ஜீவனம் மிகக் கேவலம்" என்றார் சாமியார்.

"உங்களை வணங்குகிறேன். உயிருடன் இருக்கும் ஆட்டை வெட்டி உங்கள் இனத் தார் தின்கிறார்கள். பிராணி செத்த பிறகு அழுகிப் போகும் பிரேதத்தை நான் தின் பதா பாவம்?" என்றது நரி.

சாமியார் தலையைச் சொறிந்து கொண்டு யோசனை செய்தார்.

"போய் வருகிறீர்களா? இங்கே இன் னும் நீங்கள் தங்குவது அபாயம். இந்தச் சிறுத்தைக்குப் பசி மேலிட்டு வருகிறது" என்றது புலி.

சிறுத்தை வாயினின்று எச்சில் ஊறிக் கொண்டிருந்தது. அதைக் கண்டு புலி இவ்வாறு எச்சரித்தது.

சாமியார் வேகமாகவே போய் விட்டார்.



# கான்க்ரீட் ரஸ்தாக்கள்

**எல்லாவிதமான பளுவுகளுக்கும், அலுவல்களுக்கும் ஏற்றவாறு தயாரிக்கமுடியும்.**


திருவனந்தபுரம்—நாகர்கோயில் ரஸ்தா

பலரக போக்குவரத்து சாதனங்களின் தேவைகளை கான்க்ரீட் ரோடுகள் நன்கு சமாளிக்கின்றன. அவைகள் நீடித்த காலம் உறுதியாயிருக்கின்றன. பராமரிப்பு செலவும் குறைவு. கொள்முதல் செலவுகளும் மிதமானது.




தி அஸோஸியேட்டட் சிமெண்ட் கம்பெனீஸ் லிட்., சேல்ஸ் மானேஜர்கள், தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட்.

SISTA'S CMI 249 TAMIL




# 'மைக்' சொக்கப்பன்

விசுவம்

விளையாட்டு மைதானத்தை அடுத்தாற்போல் ஒரு பெரிய சத்திரம் இருந்தது. அதற்கு ராஜா சத்திரம் என்று பெயர். ராஜா சத்திரம் சின்னப்பட்டி என்னும் ஊருக்கு ஒரு மைல் தூரத்தில் இருந்தது. அந்தச் சத்திரம் எப்போதும் திறந்தே கிடக்கும். சத்திரத்தைச் சுற்றிலும் சிறு புதர்களும், மரங்களும் மண்டிக் கிடக்கும். அந்தப் பக்கமாக நடந்து செல்லும் வழிப் பிரயாணிகள் அந்தச் சத்திரத்தில் தங்கி இளைப்பாறி விட்டுச் செல்வார்கள்.

அந்த வட்டாரத்தில் திருடர் பயம் அதிகமா யிருந்ததால் இருட்டிய பிறகு யாரும் சத்திரத்துப் பக்கம் போவது கிடையாது.

சின்னப்பட்டி ஒரு சாதாரண கிராமம். சின்ன ஊர் என்றும் சொல்ல முடியாது; பெரிய பட்டணம் என்றும் சொல்ல முடியாது. அந்த ஊரில் பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி, தபாலாபீஸ், போலீஸ் ஸ்டேஷன் எல்லா வசதிகளும் இருந்தன. ஆனால் மின்சாரம் மட்டும் வரவில்லை. அதனால் அந்த ஊரில் மின்சார விளக்குகளோ, ரேடியோவோ ஒன்றுமில்லை.

மின்சாரமில்லாததால் அஸ்தமித்தால் ஊரே இருண்டு விடும். இருளடைந்த ஊர்கள் என்றால் திருடர்கள் பாடு கொண்டாட்ட மல்லவா?

சின்னப்பட்டி ஊர் ஜனங்கள் ஒன்று சேர்ந்து தங்கள் ஊருக்கு மின்சாரம் வேண்டும் என்று அந்த ஜில்லா கலெக்டருக்குக் கடிதம் எழுதிப் போட்டார்கள். சர்க்காரில் ஐந்தாண்டு தேச முன்னேற்ற திட்டப்படி சின்னப்பட்டிக்கு மின்சார விளக்குகள் போடுவது என்று தீர்மானித்தார்கள். உடனே வேலைகள் துரிதமாக நடைபெற்றன. தெரு விளக்குகள் போடுவதற்குக் கம்பங்கள் கொண்டு வந்து சேர்த்தார்கள். சிறு மின்சார நிலையம் ஒன்று கட்டினார்கள். சின்னப்பட்டியில் மின்சாரத் துவக்க விழாவை விமரிசையாகக் கொண்டாடுவதற்கான ஏற்பாடுகள் நடைபெற்றன.

ஜில்லா கலெக்டர் வந்து ஆரம்ப விழாவை நடத்துவதென்று முடிவாயிற்று. கலெக்டர் வரவை முன்னிட்டு ஊர் முழுதும் தோரணம் கட்டினார்கள்.

மறுநாள் மாலை நடைபெறப் போகும் மின்சாரத் துவக்க விழாவை ராஜா சத்திரத்தில் நடத்துவதென்று தீர்மானித்து அங்கேயும் அலங்காரம் செய்தார்கள். ராஜா சத்திரத்தில் பொதுக்கூட்டம் நடத்துவதற்காக ஒலிபெருக்கி ஏற்பாடுகள் செய்தனர்.

மைக் சொக்கப்பன் முதல் நாளே ராஜா சத்திரத்துக்குப் போய் 'மைக்'கைப் பொருத்தி வைத்தான். ஒலிபெருக்கிகளைச் சத்திரத்துக்கு வெளியிலும் சின்னப்பட்டி வீதிகளிலும் பொருத்தினான். எல்லா வேலைகளையும் செய்து முடித்து விட்டு மைக்கில் அவனே பேசிப் பார்த்தான். ஊர் பூராவும் சொக்கப்பனின் குரல் கணீரென்று கேட்டது. பிறகு சொக்கப்பன் 'மைக் ஸ்விட்'சை அழுத்தி மூடிவிட்டு வீட்டுக்குப் போய் விட்டான்

சொக்கப்பன் போனதும் மைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்கள் சொக்கப்பனின் மகன் மாணிக்கத்தை அழைத்துக் கொண்டு ராஜா சத்திரத்தைப் பார்க்கப் போனார்கள்.

அப்போது சுமார் ஏழு மணி இருக்கும். எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. மாணிக்கம் சிறு பிள்ளைகளைச் சத்திரத்துக்குள் அழைத்துப் போய் 'மைக்'கை 'ஆன்' செய்து காட்டினான். அப்போது ஒரு திருடர் கூட்டம் அந்தச் சத்திரத்துக்குள் நுழைவதைக் கண்டு சிறு

வர்கள் பயந்து ஓர் இருட்டறைக்குள் போய் ஒளிந்து கொண்டார்கள். திருடர்கள் கும்பலாக ஓரிடத்தில் அமர்ந்து ரகசியம் பேசத் தொடங்கினார்கள். அவர்கள் பல நாள் கேடிகள். வெகு நாட்களாகப் போலீஸிடம் அகப்படாமல் தப்பித்து வருகிறவர்கள். அவர்களில் ஒரு திருடன் "அடே, நாளைக்கு இந்த ஊருக்கு கலெக்டர் வரப் போகிறாராம். மின்சார விளக்கு போடப் போகிறார்களாம். ஆகையால் இன்றிரவே சின்னப்பட்டியில் உள்ள சில பெரிய வீடுகளில் புகுந்து கொள்ளையடித்து விடலாம்" என்றான்.

"அதுதான் சரி; இரவு பன்னிரண்டு மணிக்கு ஊருக்குள் போய் நம் தொழிலை ஆரம்பிக்கலாம்" என்றான் மற்றொரு திருடன்.

"சரி; அதுவரை என்னடா செய்யலாம்?" என்று கேட்டான் ஒருவன்.















"இங்கேயே படுத்திருக்கலாம்" என்றான் வேறொருவன்.

மாணிக்கமும் சிறுவர்களும் நடுங்கியபடி இருட்டறைக்குள் பதுங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் உடம்பு பயத்தால் 'கிடுகிடு' வென்று நடுங்கிக் கொண்டிருந்தது.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் சத்திரத்து வாசலில் ஒரு பெரிய போலீஸ் லாரி வந்து நின்றது. லாரியிலிருந்து இருபது போலீஸ்காரர்கள் கையில் துப்பாக்கியுடன் இறங்கிச் சத்திரத்துக்குள் புகுந்து திருடர்களைப் பிடித்து விலங்கு மாட்டி விட்டார்கள். இருட்டறையில் இருந்த சிறுவர்களைக் கண்ட போலீஸ் இன்ஸ்பெக்டர், "பயல்களா! நீங்கள் இங்கே என்ன செய்கிறீர்கள்?" என்று வியப்புடன் கேட்டார்.



"நாங்கள் மாணிக்கத்துடன் 'மைக்'கை வேடிக்கை பார்க்க வந்தோம். அவன் இந்த ஊர் மெகானிக் 'மைக்' சொக்கப்பன் மகன். இங்கே இருக்கும் மைக்கை அவன்தான் 'ஆன்' செய்து பேச வைத்தான்" என்று கூறினான் சிறுவன்.

"ஓஹோ! அப்படியா சேதி! நல்ல வேலை செய்தீர்கள். இந்தப் பையன் 'மைக்'கை 'ஆன்' செய்து வைத்ததால் தான் இந்தத் திருடர்கள் அகப்பட்டார்கள். இவர்கள் இங்கே இருட்டில் 'மைக்' இருப்பது தெரியாமல் ரகசியமாகப் பேசியதெல்லாம் ஊர்த் தெருக்களின் பொருத்தப்பட்டிருந்த ஒலி பெருக்கிகளில் 'கணீர்' 'கணீர்' என்று கேட்டன. அதைக் கேட்டு விட்டுத்தான் நாங்கள் இங்கே திருடர்கள் இருப்பதை அறிந்து ஓடி வந்தோம். இவர்கள் பலநாள் திருடர்கள். இன்று அகப்பட்டு விட்டார்கள். ரொம்ப சந்தோஷம். நீங்களும் வாருங்கள் ஸ்டேஷனுக்கு" என்று சப் இன்ஸ்பெக்டர் சிறுவர்களையும் லாரியில் அழைத்துச் சென்றார்.



பலநாள் திருடர்கள் அகப்பட்டதற்காக அந்த ஊரே சந்தோஷப்பட்டது. இதற்கு முக்கிய காரணம் மைக் சொக்கப்பனுடைய மகன் மாணிக்கம்தானே? சப் இன்ஸ்பெக்டர் மாணிக்கம் செய்த காரியத்துக்காக அவனைப் பாராட்டினார். அவனுக்கு ஏதாவது பரிசு கொடுக்க வேண்டும் என்று தீர்மானம் செய்தார்.

மறு நாள் ஊரே கோலாகலமாக இருந்தது. எங்கு பார்த்தாலும் திருடர்கள் பிடிபட்ட பேச்சுத்தான். திருடர்கள் பிடிபடுவதற்கு உதவி செய்த மாணிக்கத்தைப் பற்றிப் பிரமாதமாகப் பாராட்டினார்கள். மைக் சொக்கப்பன் விட்டுக்கு ஊரில் உள்ள பெரிய மனிதர்கள் எல்லாரும் வந்தார்கள். மாணிக்கத்தைப் போன்ற புத்திசாலியைப் பிள்ளையாகப் பெற்றதற்காக அவனைப் பாராட்டிப் புகழ்ந்தார்கள்.

மைக் சொக்கப்பனுக்கு ரொம்ப சந்தோஷம். நிமிர்ந்து நடக்க ஆரம்பித்தான். தன்னுடைய மகன் மாணிக்கம் செய்த விஷயம் எவ்வளவு பெரிய நல்ல காரியத்துக்கு உதவியாக இருந்தது. அவனுக்கு 'மைக்'கைப் போடுவதற்கும், நிறுத்துவதற்கும் சொல்லிக் கொடுத்திருந்ததால்தானே இந்த நல்ல காரியம் நிறைவேற முடிந்தது என்று தன்னைத் தானே பாராட்டிக் கொண்டான்.

மாலையில் கலெக்டர் வந்தார். சத்திரத்தில் எல்லாரும் கூடியிருந்தனர். ஊரே திரண்டு வந்திருந்தது. கலெக்டர் மின்சார ஆரம்ப விழாவைத் துவக்கி வைத்துப் பேசினார். ஊரில் மின்சாரம் வருவதற்கு முன்பாகவே மின்சாரத்தின் உதவியினால் பலநாள் திருடர்கள் அகப்பட்டு விட்டதைப் பற்றிக் கூறி, அவர்களைப் பிடிப்பதற்கு உதவிய மைக் சொக்கப்பன் மகனுக்கு ஐம்பது ரூபாயும், மற்றச் சிறுவர்களுக்கு ஆளுக்குப் பத்து ரூபாயும் பரிசுகள் தந்தார். மாணிக்கத்துக்கு மட்டும் மாலைகள் சூட்டினார்கள்.

மைக் சொக்கப்பன் அப்படியே மாணிக்கத்தைத் தூக்கிக் கொண்டு கூத்தாடினான். அவனைச் சுற்றி நின்ற சிறுவர்களும் குதூகலப்பட்டார்கள்.

---

சென்ற வாரம் வெளியான நத்தைக் கணக்குக்கு விடை: நத்தை கரைமேல் ஏறிவர மொத்தம் பதினேழு நாட்கள் ஆகும். பதினேழாவது நாள் அது ஏறுவதற்கு மூன்றே அடிகள்தான் பாக்கி இருக்கும். ஆகவே அது அன்று சறுக்காமலேயே அந்த மூன்றடியும் ஏறிவிடும்!

# வேடிக்கை விளையாட்டு





இந்திய யானைகளுக்குக் காது சிறிது ஆப்பிரிக்க யானைகளுக்குக் காது மிகப் பெரிது. இங்கிலாந்தில் உள்ள ஒரு சினிமா ஸ்டூடியோவில் ஆப்பிரிக்க யானைகள் கிடைக்காததால் இந்திய யானைகளைப் பிடித்துப் போய் அவற்றுக்குப் பெரிய காதுகளை மாட்டிப் படமெடுக்கிறார்களாம்.



ஒரு வௌவால்:- ஏன்தான் நாம் இந்த உலகத்தில் பிறந்தோமோ?

இன்னொரு வௌவால்:- நாம் பிறக்கவில்லையென்று தமிழில் 'வௌ' என்கிற எழுத்துக்கே உபயோகமில்லாமல் போயிருக்குமே!












பாம்புக்குக் காது இடையாது. அது தன் நீண்ட நாக்கின் உதவியாலும் மோப்ப சக்தியாலுமே சப்தத்தைக் கேட்கிறது.






"எட்டு மணிக்கே ஆரம்பித்த அலங்காரம் இன்னுமா முடியவில்லை! நன்றாயிருக்கிறது. போ! சட்டுப் புட்டென்று காரியத்தை முடித்து விட்டு எழுந்து வராமல்! வெள்ளிக்கிழமையும் அதுவுமாக வீடும் வாசலும் அலங்கோலமாகக் கிடக்கு. அந்தக் குஞ்சலத்தை என்னிடம் கொடு. நான் மஞ்சுளாவின் தலையைப் பின்னிவிடுகிறேன். நீ போய் வேலையைக் கவனி. பன்னிரண்டு மணி ரயிலில் அவர்கள் வந்து விடுவார்கள்" என்று உள்ளே வந்த என் மாமியார் கோபித்துக் கொண்டார்.

மஞ்சுளாவின் நீண்ட அழகான கூந்தலுக்கு வாசனைத் தைலம் தடவிப் படிய வாரிக்கொண்டிருந்த நான், பக்கத்தில் வைத்திருந்த ராக்கடியையும் குஞ்சலத்தையும் என் மாமியாரிடம் கொடுத்து விட்டு எழுந்திருக்க எத்தனித்தேன்.

"போ, சித்தி! நீயே பின்னி விடு; அம்மா பின்னினால் ஒரேயடியாய் இறுக்கிப் பின்னி விடுவாள்" என்று சிணுங்கியபடியே என்னை எழுந்திருக்க விடாமல் தடுத்தாள் மஞ்சுளா.

நான் என் மாமியாரைப் பார்த்தேன். கையிலெடுத்த சீப்பை என்னிடமே கொடுத்து விட்டு, "சரி, சரி, நீயே பின்னி விட்டுச் சீக்கிரமாக வா, தலைக்கு மேல் வேலை கிடக்கிறது" என்று புன்சிரிப்புடன் கூறி விட்டுச் சமையற்கட்டை நோக்கிப் போனார் அவர். சீப்பைக் கையிலெடுத்துக் கொண்டு மீண்டும் மஞ்சுளாவின் தலையை வாரிப் பின்னி விட்டு முடித்தேன். புஷ்பம் சூட்டி, நகைகளெல்லாம் பூட்டி, என்னுடைய புதிய மைசூர் ஜார்ஜெட் சில்க்குப் புடவையையும் உடுத்தி விட்டேன்.

"இது எதற்குச் சித்தி! அப்பா உனக்காக எடுத்து வந்தார். நீ இன்னும் ஒரு நாள் கூட உடுத்தவே யில்லையே! என்னுடைய புடவை எதையாவது கட்டிக் கொள்கிறேனே" என்று ஆட்சேபித்தாள் மஞ்சுளா.

"சிறுசாய், லட்சணமாய்ச் சும்மா யிரு;...... இதுதான் உனக்கு நன்றா யிருக்கிறது. உன்னுடைய புடவையெல்லாம் ரொம்பப் பழைய மோஸ்தர்; வரப்போகிற மாப்பிள்ளையோ, அசல் சீமைச் சரக்கு; அவருக்குத் திருப்தியா யிருக்க வேண்டாமா, பைத்தியமே!" என்று செல்லமாய்க் கடிந்து கொண்டேன்.

மஞ்சுளாவின் ரோஜாக் கன்னம் வெட்கத்தினால் இன்னும் சிவப்பாகியது. "என்னைப் போய்ச் சிறுசு என்கிறாயே; நீ மட்டும் ரொம்ப வயசான பாட்டியோ!" என்று பதிலுக்குக் கேட்டாள் மஞ்சுளா. நான் ஒன்றும் பதில் சொல்லாமல் சிரித்தேன். சொல்லுவதற்கு என்ன இருக்கிறது! மஞ்சுளாவைவிட நான் இரண்டு வயதுதான் மூத்தவள். ஆனாலும், ஐம்பத்திரண்டு வயதான கிழவரின் மனைவி, பாட்டியல்லாமல் வேறு யாராம்! வயதில் குமரியே தவிர பதவியில் பாட்டிதானே!—

எங்கோ ஓட முயன்ற மனத்திரையைச் சுருட்டிப் பிடித்தேன். "மஞ்சுளா! உன்னை போய்ப் பாட்டிக்கு உன் அலங்காரம் திருப்திதானாவென்று காட்டிவிட்டு வா!" என்று கூறி விட்டுச் சமையலறையை நோக்கிப் போனேன். பெண் பார்க்க வரப்போகும் சம்பந்திகளை வரவேற்பதற்காக இரண்டு ரகத் தித்திப்பு, காரப் பட்சணங்கள், வெள்ளிக் கூஜாவில் காப்பி, எல்லாம் என் மாமியாரின் மேற்பார்வையில் சமையற்கார அம்மாமி, தயாராக எடுத்து வைத்திருந்தாள். பழுத்த சுமங்கலி என் மாமியார். வீட்டை மிகவும் நேர்த்தியாக நிர்வகித்து வந்தார். மாமனார் எண்பத்திரண்டு வயசு. இரண்டு பேரும் குணத்தில் தங்கம்தான். மனம் நிறைந்த ஆசையையும் அன்பையும் என்மீது பொழிந்து வந்தார்கள். வீட்டில் வேண்டிய பணம் காசு, நகை நட்டு எதற்கும் குறைவில்லை. ஆனால் வழுக்கையிட்டுப் போய்ச் சுருக்கம் நிறைந்த முகத்துடன் கூடிய என் கணவரைக் காணும் பொழுது எனக்கு, நான் ஒரு கிழவரின் மனைவி என்பதைத் தவிர வேறு ஒன்றும் என் நினைவுக்கு வருவதில்லை. பாழாய்ப் போன அந்த நினைப்பைப் பாறையிட்டு அமுக்க முயன்றபோதிலும் முண்டியடித்துக் கொண்டு அவ்வெண்ணம் ஒரு நாளைக்கு நூறு தடவையாகிலும் வெளியே சீறிக் கொண்டு வந்தது.

மஞ்சுளா—என் கணவரின் மூத்த தாரத்தின் மகள். ரொம்ப அழகி. குணமோ அதற்கு மேல்; வயசு பதினேழு. அவளுக்குப் பதினாலு வயதாகும் பொழுது அவளுடைய அம்மா இறந்து விட்டாள். ஏழைப் பெற்றோருக்கு எட்டாவது பெண்ணாகப் பிறந்து, கல்யாண வயதைத் தாண்டிவிட்ட நான், மஞ்சுளாவின் மறைந்துவிட்ட அன்னையின் ஸ்தானத்தைப் பூர்த்தி செய்ய, அந்தக் குடும்பத்துக்குள் வந்து சேர்ந்தேன்.

மஞ்சுளாவின் அழகான பெயரும் அதற்கொத்த வெள்ளை மனமும் எனக்கு ஆரம்பத்திலிருந்தே அவளிடம் அளவற்ற அன்பை யுண்டாக்கிவிட்டன. "சித்தி, சித்தி" என்று என்னைச் சுற்றிச் சுற்றி வருவாள். அன்றாடம் அவளுடைய கலாசாலையில் நடக்கும் விஷயங்கள், தோழிகளின் அரட்டைகள் எல்லாம் என்னிடம் அவ்வப்பொழுதே அரங்கேற்றம் செய்து விடுவாள். கல்வி, சங்கீதம், அழகு, குணம் எல்லாம் அவளிடம் பரிபூரணமாய்



நிரம்பியிருந்தன. செல்வமும் அமோகமாயிருந்தது. பின்பு கேட்பானேன்! — பெரிய இடத்துப் பிள்ளைகளாகவே அவளை மணந்து கொள்ள முன் வந்தார்கள்.

★

“மீனு! இந்தா, இந்த மாவைக் கொண்டு போய்க் கூடத்தில் பளிச்சென்று ஒரு இழை கோலம் போடு. வாசலில் நான் போட்டு விட்டேன். அப்புறம் நீயும் வேறு புடவை கட்டிக் கொள்ளு. முகமெல்லாம் எண்ணெய் வழிகிறது” என்று அன்போடு உத்தரவிட்டார் என் மாமியார். அவர் கொடுத்த கோலமாவை யெடுத்துக் கொண்டு கூடத்துக்குப் போனேன். கோலத்துக்கு நெளி நெளியாய் இழைகளை வரைந்து கொண்டிருக்கையிலேயே என் உள்ளத்தின் சிந்தனை இழைகளும் நெளிந்து மறைந்தன.

‘இதே போல் ஒரு வெள்ளிக்கிழமை. நான்கு வருடங்களுக்கு முன்பு—என்னுடைய கல்யாணப் பேச்சு என் பெற்றோரைக் கலங்க வைத்துக் கொண்டிருந்த சமயம். ‘குப்பையில் வைத்த வாழை’ என்பார்களே அம்மாதிரி பழையதைச் சாப்பிட்டு மதமத வென்று வளர்ந்திருந்தேன் நான். என்னைப் பெண் பார்க்க யாரோ வருவதாக இருந்தார்கள். எங்கள் வீட்டில் எளிய முறையில் என்னவோ ஏற்பாடு செய்திருந்தாள் என் அம்மா. தன்னுடைய பழைய பட்டுப் புடவை யொன்றை எனக்குக் கட்டித் தலை வாரிப் பின்னிப் பூச்சூட்டியிருந்தாள். வாசலில் வண்டி வந்து நின்றது…………’

“கோலம் மிக நன்றாகயிருக்கிறது” என்றார் என் கணவர் பின்னாலிருந்து. என் சிந்தனை பட்டென்று கலைந்தது. திடுக்கிட்டுத் திரும்பினேன். புன்சிரிப்புடன் என்னைப் பார்த்தபடி நின்றார் அவர்.

“மஞ்சுளாவின் அலங்காரமும் பலே ஜோர். உன்னுடைய புடவையை ஏன் அவளுக்குக் கட்டியிருக்கிறாய்! நீ கட்டிக் கொள்ளவேயில்லையே! அதே போல் வேண்டுமானால் மஞ்சுளாவுக்கு வேறு ஒன்று வாங்கலாமே!” என்றார் அன்போடு.

ஏனோ என் கண்ணில் நீர் கசிந்தது. நெஞ்சில் உணர்ச்சி மிகுதியினால் ஏதோ அடைப்பது போல் தோன்றியது.

“அதனாலென்ன! எனக்கு அப்புறம் வாங்கிக் கொண்டால் போகிறது!” என்று சாதாரணமாகச் சொல்லி விட்டுச் சிரிக்க முயன்றேன். ஆனால் என் உள்ளம் உறுத்தியது. ‘கிழவரின் மனைவிதானே நீ! மஞ்சுளாவின் அலங்காரத்தைப் பார்த்து ஆனந்திக்க ஒரு இளம் கணவன் வருகிறான். உன்னுடைய அலங்காரத்தைப் பார்க்க யார் இருக்கிறார்கள்!……உனக்கு எதற்கு மைசூர் க்ரேப்!’ என்று ஊசி முனை போன்ற ஒரு எண்ணம் தோன்றியது. என் கணவர் ஒன்றும் சொல்லவில்லை. என்னுடைய வார்த்தைகளுக்கு வேறு ஒரு அர்த்தமிருப்பதாக அவர் எண்ணவேயில்லை. மீண்டும் ஒரு முறை சிரித்து விட்டுப் போய் விட்டார்.

கோலத்தை முடித்துவிட்டு நிமிர்ந்த என் கண்களில் அவருடைய தலையின் பின்புறமாக இருந்த அகலமான வழுக்கை தென்பட்டது. மீண்டும் நெஞ்சின் ஆழத்தில் அதே போன்ற அடைப்பு ஏற்பட்டது.

★

பூம், பூம் என்று வாசலில் வந்து நின்ற மோட்டாரின் சத்தம் என்னை இவ்வுலகத்துக்குக் கொண்டு வந்து நிறுத்தியது. சட்டென்று வீட்டினுள்ளே வேகமாகப் போய் விட்டேன்.

“சீக்கிரம் காப்பி பலகாரம் எடுத்து வை; அவள் எங்கே, மஞ்சுளா! மீனு! அவளைச் சீக்கிரம் கூப்பிடு” என்று என் மாமியார் உத்தரவுகள் பிறப்பித்துக் கொண்டிருந்தார்.

தமையனும் தம்பியுமாக இரண்டு பேர்தான் வந்திருந்தார்கள், பெண் பார்க்க.—தம்பிதான் கல்யாணப் பிள்ளையாம். கூட யாராவது ஸ்திரீகள் வருவார்களென்று எதிர்பார்த்தோம்.

“வயசான சுமங்கலி, மாப்பிள்ளையின் தாயார் இருக்கிறாளாமே, கூட வரக்கூடாதா! நமக்கும் பேசிப் புழங்கலாமே!” என்று அங்கலாய்த்துக் கொண்டார் என் மாமியார்.

இது காதில் விழுந்து போயிருக்கிறது.

“அம்மாவுக்குக் கொஞ்சம் உடம்பு சரியில்லை. தவிர என் தங்கை பிரசவத்துக்காக வந்திருக்கிறாள். அதற்கென்ன! கடவுள் கிருபையில் கல்யாணம் கூடிவிட்டால் ஒருவருக்கொருவர் பார்த்துக் கொள்ளாமலா போகிறோம்!” என்று சிரித்தபடியே சமாதானமாகச் சொன்னார் மாப்பிள்ளையின் சகோதரர்.

மாமியாரும் சிரித்துக் கொண்டு,—“அம்பாள் கிருபை செய்யட்டும்” என்றார்.

காப்பி பலகாரம் முடிந்தது.

கூடத்தின் நடுவில் விரிக்கப்பட்டிருந்த ஜமுக்காளத்தில் என் கணவர், மாமனார் வந்திருந்தவர்களுடன் உட்கார்ந்து கொண்டார்கள்.

# வில்லி வில்ஸன் சொல்லுகிறார்

## சரிசம நிலை என்பது ஓர் அதிசய விஷயம்!

கை-ஸ்டாண்டு செய்வதற்கும், சைக்கிள் ஓட்டுவதற்கும், ஸ்கேட்டிங் செய்வதற்கும், நடந்து செல்வதற்குங்கூட சரிசம நிலை அவசியம். ஒரு பேனாவைத் தயாரிக்க அது ரொம்பவும் முக்கியம்; ஏனெனில் ஒரு நேர்மையற்ற பேனா பிடித்துக் கொள்ளும் பொழுது சிரமத்தையும், எழுதும்பொழுது கைக்கு அதிகரிக்கும் களைப்பையும் உண்டாக்குகிறது.






ஆகையால், நீங்கள் ஒரு பேனா வாங்கும்பொழுது தாராளமாக மையை உட்கொள்ளக்கூடிய பேனாவையே வாங்குங்கள். அதுதான் வில்ஸன்!

**வில்ஸன்**

ஆ... மறுபடியும்
வெட்டிக்
கொண்டேன்!

# உடனே—
# 'டெட்டாலை' எடு!

[illegible]



**நோய் வரும் முன்பே**
**பாதுகாத்துக் கொள்ள—**

**'DETTOL'**

[illegible]




**இலவசம்**

[illegible]

---

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

**85% கிருமிகளை ஒழிக்கிறது சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை**



"குழந்தையை அழைத்து வா" என்று உடன் பக்கம் நோக்கிக் கூறினார் என் மாமனார்.

"மீனு!...மஞ்சுளாவை அழைத்துக்கொண்டு போய் அவர்களை நமஸ்காரம் பண்ணச் சொல்லு" என்று என்னிடம் மெதுவாகக் கூறினார் என் மாமியார்.

பொன்னும் வைரமுமாய்க் குலுங்கி நின்ற மஞ்சுளாவின் கையில் வெற்றிலைத் தட்டைக் கொடுத்துவிட்டு, "மாப்பிள்ளையை நன்றாய்ப் பார்த்துக் கொள்ளு, தெரியுமா!" என்று காதோடு சொன்னேன்.

"போ, சித்தி!" என்று கூறி வெட்கத்தால் முகம் சிவந்து போனாள் அவள். அவளுடன் கூடத்தில் நுழைந்தேன்.

மஞ்சுளா வெற்றிலைத் தட்டை வந்தவர்களிடம் வைத்துவிட்டுக் குனிந்து பணிவாக நமஸ்காரம் செய்தாள். அதே சமயத்தில் மாப்பிள்ளையாக வரப்போகிறவர் சட்டென்று தலை நிமிர்ந்தார்.

மஞ்சுளாவைக் கூடத்துக்கு அனுப்பி விட்டு வாசற்படியருகிலேயே நின்றிருந்த நானும் அதே சமயத்தில் அவரை நோக்கினேன். ஈசுவரா! இதைத்தான் சோதனை யென்று சொல்வார்கள் போலும்!

ஒரு கணம் என் நெற்றிப்பொட்டில் யாரோ சம்மட்டியால் பளீர் பளீரென்று அடிப்பது போல் தாங்க முடியாத வலி தோன்றியது. குபீரென்ற சிவந்த முகத்துடன் அவர் தமது விழிகளைத் தாழ்த்திக் கொண்டார்.

இருண்டு வந்த விழிகளுடன் எப்படியோ பின் வாங்கி உள்ளே வந்து சமையலறையில் சுவரில் சாய்ந்து உட்கார்ந்தேன். கூடத்தில் மஞ்சுளா வீணையின் நாதத்துடன் தன் குரலை இணைத்து சுஸ்வரமாகப் பாடுவது இலேசாகக் காதில் விழுந்தது. என்ன செய்தும் கட்டுப்படாமல், என் மனத்திரை அவிழ்ந்து, பிரிந்து, விரிய ஆரம்பித்து விட்டது.

*

ஒரு வெள்ளிக் கிழமை விடியற்காலம். தலையில் ஒரு கை எண்ணெய் வைத்துத் தேய்த்து விட்டு ஆற்றில் குளித்து வரும்படி அனுப்பினாள் என் அன்னை.

ஸ்நானம் முடித்து ஈரப் புடவையையுடுத்திக் கொண்டு குடத்தில் குடி ஜலமும் மொண்டு கொண்டு வந்து சேர்ந்தேன்.

அப்பொழுதுதான் ஊரிலிருந்து வந்த என் அண்ணா புன்சிரிப்புடன் வாசலிலேயே என்னை வரவேற்றான்.

"ஏ, அப்சரஸே! ஜலக்கிரீடை செய்துவிட்டு இப்பொழுதுதான் வருகிறாயா!" என்று வேடிக்கையாகக் கேட்டான்.

அவன் எப்பொழுதும் இப்படித்தான் வேடிக்கையாகப் பேசுவான்.

நானும் பதிலுக்குச் சிரித்து விட்டு, "எப்பொழுது வந்தாய் அண்ணா!" என்று கேட்டுக் கொண்டே உள்ளே போய்க் குடத்தை இறக்கி வைத்தேன். பின்னாலேயே வந்தான் அண்ணா.

"சும்மாவா வந்திருக்கிறேன்! உனக்கு மன்மதன் போன்ற ஒரு அகமுடையானையாக்கும் கொண்டு வந்திருக்கிறேன்; போய்ச் சீக்கிரம் ஈரம் மாற்றிக் கொண்டு வா!" என்று புன்சிரிப்புடன் அதிகாரம் பண்ணினான்.

"போடி! சீக்கிரம் தலையை ஆற்றிக் கொண்டு வா. பின்னல் விடுகிறேன். அம்பாள் படத்திலிருக்கும் மல்லிகைச் சரத்தைச் சூட்டிக் கொண்டு நெற்றிக்கிட்டுக் கொள். பெட்டியிலிருக்கும் என்னுடைய பாசிப் பச்சைப் புடவையை யுடுத்திக் கொள்ளு. அண்ணாவுடைய சிநேகிதன் யாரோ உன்னைப் பத்து மணிக்கு மேல் பார்க்க வருகிறானாம்; அம்பா, ஜகதீச்வரி! எப்படியாவது இந்தக் கல்யாணத்தைக் கூட்டி வை. குழந்தை எத்தனை நாளைக்கு இப்படித் தனி மரமாய் நிற்பாள்!" என்று உணர்ச்சி மிகுதியுடன் பேசினாள் என் அம்மா.

எனக்கு இனம் தெரியாத இன்பக் கிளுகிளுப்பு போன்று உள்ளத்தில் தோன்றியது. குழப்பத்துடன் உள்ளே போய்த் தலைவாரிப் புடவை மாற்றிக் கொண்டேன். கண்ணாடியில் போய்ப் பார்த்துக் கொண்டேன். அண்ணா சொல்லுகிறபடி அப்சரஸாயில்லா விட்டாலும் நான் நல்ல அழகிதானென்று கண்ணாடி சொல்லியது. கலைந்திருந்த முன் நெற்றி மயிரை ஒதுக்கி விட்டுக் கொண்டு திரும்பினேன்.

என் மனத்தில் என்னென்னவோ எண்ணங்கள். வருகிறவர் எப்படியிருப்பாரோ! படித்தவரோ, பணக்காரரோ! அண்ணா சொன்னானே, மன்மதனென்று! உண்மையாகவே அவ்வளவு நன்றாயிருப்பாரோ! அப்படியானால் என்னைப் பிடிக்கா விட்டால் என்ன செய்வது!

இத்தியாதி எண்ணங்கள்.

கடைசியில் அவரும் வந்தார்.

குதிரை வண்டியில் ஜம்மென்று வந்து இறங்கினார். சிவந்த கட்டான தேகம். நல்ல உயரம். சுருள் சுருளாய்ச் சுருண்ட கிராப்புத் தலை. ஒளி வீசும் தீக்ஷண்யமான கண்கள். பட்டு ஜிப்பாவும் பால் போல் வெளுத்த வேஷ்டியும் அணிந்திருந்தார்.

இவ்வளவையும் ஒரே விநாடியில் காமிரா உள் ஜன்னல் வழியாக நான் பார்த்துத் தெரிந்துகொண்டு விட்டேன்.

அண்ணா அவரை ஆவலோடு வரவேற்று உள்ளே அழைத்து வந்தான். சம்பிரதாயமாகக் காப்பி பலகாரம் முடிந்து அவரும் எல்லாருடனும் பேசிக் கொண்டிருந்தார்.

"மீனு!" என்று என்னைக் கூப்பிட்டான் அண்ணா. அம்மா என்னிடம் கொடுத்த வெற்றிலைத் தட்டை நடுங்கும் கைகளுடன் வாங்கி அவர் அருகில் கொண்டு போய் வைத்து விட்டு நமஸ்கரித்தேன்.

"சிவராஜா! என் தங்கை அப்சரஸென்று நான் சொன்னது பொய்யா! நீயே சொல்லு!" என்று பெருமையோடு கேட்டான் அண்ணா.

"நூற்றுக்கு நூறு உண்மை" என்று சிரித்த படியே என்னை நோக்கினார்.



அம்மாடி! அந்தப் பார்வைதான் இன்றைவும் என் நெஞ்சிலிருந்து என்னை எரிக்கிறது.

நழுவிய புடவைத் தலைப்பைச் சரியாக இழுத்து விட்டுக் கொண்டு சரசரவென்று உள்ளே வந்து விட்டேன் நான். என் உடல் ஒரேயடியாய்ப் புல்லரித்தது. கால்கள் தரையில்படிந்ததே தெரியவில்லை. சற்றுப்பொறுத்து அவர் போகக் கிளம்பினார். அண்ணாவும் உடன் போய் ரயிலேற்றி விட்டு வந்தான். வரும்பொழுது சிரித்துக்கொண்டே வந்தான்.

"பிள்ளையாண்டான் என்ன சொன்னான்!" என்று கவலையோடு விசாரித்தாள் அம்மா.

"சொல்லுவதென்ன! மீனாவின் அழகில் மயங்கி விட்டான்; ஊருக்குப் போய் அவனுடைய அம்மாவையும் அப்பாவையும் கலந்து கொண்டு பதில் எழுதுவான்" என்று என்னைப் பார்த்துக் கண் சிமிட்டினான் அண்ணா. அவனுக்கு ஒரே குஷி.

"என்னவோ அப்பா! பெரிய இடமாயிருக்கு; பையனுக்குப் பெண்ணைப் பிடித்தாலும் அவா மனுஷாளெல்லாம் ஒத்துக்க வேண்டாமா! நம்ம மீனாவுக்கு அழகு இருக்கு நிறைய. அதிருஷ்டமும் ஒத்து வரணுமே!" என்று கைக் காரியத்தினூடே பெருமூச்சு விட்டாள் என் தாய்.

ஆனால் என் மட்டில் இந்தப் பேச்செல்லாம் என் காதிலேயே விழவில்லை. அண்ணாவுடன் வந்த மன்மதன் என் உள்ளத்தில் அசையாமல் நின்று விட்டார். நெடிய அவர் உருவத்தையும், என்னை ஊடுருவி நோக்கிய ஒளி வீசும் அவர் விழிகளையும் மனக் கண்ணால் பார்த்துப் பார்த்து மனம் மகிழ்ந்தேன்.

அவரிடமிருந்து கடிதத்தை எதிர்பார்த்தான் என் அண்ணா. ஒரு வாரம் சென்று விட்டது. ஒன்றும் தகவலே யில்லை.

'பெரிய உத்தியோகஸ்தனல்லவா! பாவம், ஒழிந்திருக்காது. இன்னும் இரண்டு நாட்களில் கடிதம் வந்துவிடும்' என்று ஏதோ சமாதானம் பண்ணுகிற பாவனையில் பேசினான் அண்ணா.

எனக்கும் என்னவோ போலிருந்தது. 'எவ்வளவு நம்பிக்கை யிருந்தது, அவருடைய பார்வையில்! என்னை ஏமாற்றி விடுவாரா அவர்!' என்று எனக்கு நானே சமாதானம் சொல்லிக் கொண்டேன்.

பின்னும் ஒருவாரம் சென்றது. அம்மாவுக்கு இப்பொழுது நம்பிக்கையே யில்லை. "ஊஹூம்; ஆயிரத்தோடு ஆயிரத்தொன்று; அப்படியெல்லாம் அதிருஷ்டம் படைத்தவளா யிருந்தால் மீனா என் வயிற்றில் பிறந்தே யிருக்க மாட்டாளே!" என்று சலித்துக் கொண்டாள்.

அண்ணா ஒன்றுமே சொல்லவில்லை.

மூன்று வாரங்கள் பொறுத்து ஒரு கடிதம். இரண்டே வரிகள் இருந்தன.

'நான் ஐ. ஏ. எஸ்.ஸுக்குப் படிக்கப் போகிறேன். இப்பொழுது கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டாமென்பது என் பெற்றோரின் அபிப்பிராயம். சிரமம் கொடுத்ததை மன்னித்து விடு.

சிவராஜன்.'

இதைச் சுருட்டி என்னிடம் தூக்கி எறிந்தான் அண்ணா.

"அற்பப்பயல்! எழுதி யிருக்கிறான் பார். கையாலாகாதவன். இவனுடைய மூகரக்கட்டைக்கு ஐ. ஏ. எஸ். தான் குறைச்சலா யிருக்கு. அவனுடைய அப்பன் பணக்கார இடமாகப் பார்த்திருப்பான். அதைச் சொல்லப் பயந்து கொண்டு என்னவோ கயிறு திரித்து எழுதி யிருக்கிறான்!"

நான் ஒன்றுமே பேசவில்லை. கீழே கிடந்த கடிதத்தைக் கையிலெடுத்துக் கொண்டு அவனைப் பரிதாபமாய்ப் பார்த்தேன். என் கண்களில் ஏமாற்றத்தினால் கண்ணீர் திரண்டது.

அண்ணா அதைப் பார்க்கச் சகியாமல் விர்ரென்று கிளம்பி வெளியே போய் விட்டான். அம்மா மட்டும் ஆத்திரத்துடன் அன்றெல்லாம் ஏதேதோ சொல்லிக் கொண்டே யிருந்தாள். நல்ல வேளையாக அப்பா ஊரிலில்லாததால் அவருக்கு இதெல்லாம் ஒன்றும் தெரியாது. இல்லா விட்டால் அவரும் எங்களுடைய பெருத்த ஏமாற்றத்தில் பங்கெடுத்துக் கொண்டிருப்பார்.

ஐந்தாறு மாதங்களில் மஞ்சளாவின் அப்பாவுக்கு இளையாளாகக் கழுத்தைக் கொடுத்தேன். கல்யாணத்துக்கு முதல் நாள் அம்மா என்னைக் கட்டிக் கொண்டு கண்ணீர் மழையாய்ப் பொழிந்தாள். நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு அவளை நான் சமாதானப் படுத்தினேன். என் அண்ணா அந்தக் கல்யாணத்துக்கு வரவேயில்லை.

* * *

கூடத்தில் பேச்சுக்குரல் கேட்டது.

"பெண்ணைப் பிடித்து விட்டதாம். அடுத்த மாதமே முகூர்த்தம் வைத்துக் கொள்ளச் சொல்லி விட்டார்கள்."

என் கணவர் மாமியாரிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

"சிவராஜன் ஐ. ஏ. எஸ். குட்டி அடித்தாள் பிரைஸ். ராஜாத்தி அவள். அவளுக்கேற்ற மன்மதன் தான் வாய்த்திருக்கிறான்" என்று மாமனார் உற்சாகமாகப் பேசினார்.

"மன்மதன், மன்மதன்" என்று மனத்துக்குள்ளேயே நான் சொல்லிக் கொண்டேன். என் நெஞ்சம் பாளமாய் வெடித்தது.

"சித்தி, சித்தி! எங்கே நீ! இந்தா இதையெல்லாம் எடுத்து வை" என்று கையில் நகைப் பெட்டியுடன் உள்ளே வந்தாள் மஞ்சளா. அவளுடைய முகம் சண்பகப் பூவாய் மலர்ந்திருந்தது.

சட்டென்று எழுந்தேன். பெட்டியைக் கையில் வாங்கிக் கொண்டேன். உள்ளே வந்தார் என் கணவர்.

"மீனா! பெண்ணைப் பிடித்து விட்டதாம், அவர்களுக்கு."

"என்ன அதிசயம்! நம்ம மஞ்சளாவைப் பண்ணிக் கொள்ள அவர்களுக்குக் கசக்கிறதோ!" என்று பெருமையோடு கேட்டேன். என் கணவர் சிரித்துக் கொண்டே திரும்பினார்.

என் விழிகள் அவருடைய தலையின் அகலமான வழுக்கையில் பதிந்தன. என் நெஞ்சில் உருண்டையாக ஏதோ அடைத்தது. "வெள்ளிக்கிழமையும் அதுவுமாக நகையெல்லாம் எதுக்குக் கழற்றினாய்! சாயந்திரம் சிரத்தையுடன் கோவிலுக்குப் போய் வந்தப்புறம் கழற்றி வைக்கப்படாதோ!" என்று தம் பேத்தியைக் கேட்டுக் கொண்டே உள்ளே வந்தார் என் மாமியார்.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon